# கீதைப் பேருரைகள்



வினோபா

# கீதைப் பேருரைகள்





ஆச்சாரிய வினோபா பாவே

சர்வோதயப் பிரசுராலயம்
(அகில பாரத சர்வசேவா சங்கம்)
தஞ்சாவூர்

முந்திய பதிப்புகள்—48,000
6-ஆம் பதிப்பு—டிசம்பர் '56—20,000

விலை :
சாதாரண பைண்டு ரூ. 1–0–0
காலிகோ ,, ரூ. 2–8–0

**GEETHAI-P-PERURAIGAL**

[Tamil version of the Mahrathi book
'Gita Pravachane' (Talks on the Gita)
by Acharya Vinoba Bhave]

Kabeer Printing Works, Madras (3446)

## பதிப்புரை

இந்து சமய நூல்களுள் தலைசிறந்ததான ஸ்ரீமத் பகவத் கீதையை மகான் வினோபா இருபத்துமூன்று வருஷங்களுக்கு முன் தாம் (காந்தேசில்) தூலியா என்னும் ஊரில் சிறையிருந்த காலத்து சக அரசியல் கைதிகளுக்கு பதினெட்டு சொற்பொழிவுகளில் விளக்கினார்கள். மராத்தியில் இருந்த அச்சொற்பொழிவுகள் பின்னர் 'கீதா பிரவசனே' என்னும் நூலாக வெளிவந்தன. அவற்றை இவர்கள் சாதாரணப் படிப்புள்ளவர்களும் புரிந்துகொண்டு பயன் பெறவென எளிய நடையில் ரசமாய் ஆற்றியிருக்கிறார்கள்.

உலகம் கண்ட யுகப் புரட்சி ஒவ்வொன்றுக்கும் கருத்தைக் கிளரும் பெருநூல் ஒவ்வொன்று காரணமாய் இருந்திருக்கிறது. அரசியல் சுதந்திரம் பெற்ற நம் பாரதம் பொருளாதாரச் சுதந்திரமும், ஆன்மீக உயர்வும் பெறுவதற்கென இம் மகான் ஐந்தாண்டுகளாய் நடத்திவரும் பூதானப் பெருவேள்வியில் இந்நூலும் அதே இடம் பெற்றுவிட்டது. இது இவர்கள் இதுவரை யாத்திரை செய்த பிரதேசங்களில் அவ்வப்பாஷைகளில் வெளிவந்து ஆயிரக்கணக்கான மக்களால் பெற்றுப் போற்றிப் படிக்கப்பட்டு வருகிறது. இது வெளிவராத இந்திய பாஷையே இல்லை எனலாம்.

நம் நாட்டில் கருத்துத் துறையிலும் அதன் விளக்கமான இலக்கியத் துறையிலும் நிகழ்ந்துவரும் இப்பெரு நிகழ்ச்சியை உணர்ந்த நாம் 'கீதைப் பேருரைகள்' என்ற பெயரில் இந்நூலை மூன்று வருஷங்களுக்கு முன் முதலில் வெளியிட்டோம். அதன்பின் சென்ற மே மாதத்தில் மகான் வினோபா நம் புண்ணியவசத்தால் நந்தமிழ் கிராமங்களில் பூதான யாத்திரை தொடங்கியதிலிருந்து இந்நூலுக்கு மக்களிடையே ஏற்பட்டுள்ள தேவை தூண்ட, இதுவரை நாற்பத்தெட்டாயிரம் பிரதிகள் வெளியிட்ட பின் இதை ஆறும் முறையாக இப்பொழுது வெளியிடுகிறோம். சென்னை கபீர் அச்சுக்கூடத்தாரின் வியத்தகு திறமையினாலும் ஒத்துழைப்பாலும் இந்த ஒவ்வொரு தடவையும் மிகக் குறைந்த காலத்திற்குள் பல்லாயிரம் பிரதிகள் தயாரித்தல் சாத்தியமாய் இருந்திருக்கிறது. இவ்வகையில் அவர்கள் வேள்விக்குச் செய்துவரும் உதவி போற்றற்பாலது.

தஞ்சை
10–12–1956

சர்வோதயப் பிரசுராலயம்
(அகில பாரத சர்வசேவா சங்கம்)

# பொருளடக்கம்


## 1. தோற்றுவாய்–விஷாத யோகம் (பக்கம் 1)

(1) மகாபாரத மத்தியிலே.
(2) அர்ஜுனன் நிலே.
(3) கீதையின் குறிக்கோள்: மோகத்தைச் கொல்லல்.
(4) வெள்ளே உள்ளத்தின் தகுதி.

## 2. போதனேயின் சுருக்கம்: ஆன்மஞானமும் சமத்துவ புத்தியும் (பக்கம் 11)

(5) கீதையின் பரிபாஷை.
(6) வாழ்க்கைத் தத்துவம்–1: சுதர்மம் புரிதல்.
(7) வாழ்க்கைத் தத்துவம்–2: உடலே மீறிய ஆன்ம உணர்ச்சி.
(8) இரண்டையும் இணேப்பது பயனின் துறவு.
(9) பயனின் துறவு–இரு உதாரணங்கள்.
(10) ஆதரிச குருமூர்த்தி

## 3. கர்ம யோகம் (பக்கம் 30)

(11) பயனேத் துறப்போன் அளவிலாப் பயன் பெறுவான்.
(12) கர்மயோகத்தின் பல்வேறு பயன்கள்.
(13) கர்மயோக விரதங்களுக்கு இடையூறுகள்.

## 4. கர்மயோகத்திற்குதவும் சாதனே: விகர்மம் (பக்கம் 41)

(14) கர்மத்திற்கு விகர்மத்தின் உதவி தேவை.
(15) கர்ம–விகர்மக் கூட்டின் விளேவு அகர்மம்.
(16) அகர்மக் கலேயை மகான்களிடம் கேட்டறி.

## 5. இருமுக அகர்மநிலை :
## யோகமும் சந்நியாசமும் (பக்கம் 49)

(17) புறக்கர்மம்—மனத்தின் கண்ணுடி.
(18) அகர்ம நிலையின் தன்மை.
(19) அகர்மத்தின் ஒரு பக்கம் : சந்நியாசம்.
(20) அகர்மத்தின் மறு பக்கம் : யோகம்.
(21) இரண்டையும் ஒப்பிட வாக்குக்கு வல்லமை இல்லை.
(22) ஜியோமிதி, மீமாஞ்சகரின் உதாரணம்.
(23) சந்நியாசியும் யோகியும் ஒருவரே : சுக—ஜனகர்போல.
(24) ஆயினும் சந்நியாசத்தினும் யோகம் சிறந்ததெனப் பட்டது.

## 6. சித்தவிருத்தியை அடக்குதல் (பக்கம் 71)

(25) கடைத்தேற்றத்தில் ஆவல்.
(26) சித்தத்தின் ஏகாக்ரதை.
(27) ஏகாக்ரதை பெறுவதெவ்வாறு?
(28) வரம்புள்ள வாழ்க்கை.
(29) நன்னேக்கு.
(30) பால குரு.
(31) பயிற்சி, வைராக்கியம், சிரத்தை.

## 7. பிரபத்தி அல்லது
## ஆண்டவனிடம் சரணுதல் (பக்கம் 89)

(32) பக்தியின் புனிதக் காட்சி.
(33) பக்தி பயக்கும் தூய ஆனந்தம்.
(34) பயன் கருதிய பக்திக்கும் மதிப்புண்டு.
(35) பயன் கருதாப் பக்தியின் வகைகளும் நிறைவும்.

## 8. பிரயாண சாதனை : சாதத்திய யோகம் (103)

(36) சீரிய ஸம்ஸ்காரங்களைச் சேமித்தல்.
(37) சாவின் நினைவு இருக்கட்டும் !
(38) அதிலேயே எப்பொழுதும் தோய்ந்திரு.
(39) அல்லும் பகலும் போர்.
(40) சுக்ல-கிருஷ்ண கதிகள்.

## 9. மானிட சேவையென்ற இராசவித்தை : சமர்ப்பண யோகம் (பக்கம் 117)


(41) நேர் அனுபவ வித்தை.
(42) சுலப வழி.
(43) தகுதி பற்றிய தொந்தரவில்லை.
(44) கர்மத்தின் பயன் ஆண்டவனுக்கு அர்ப்பணம்.
(45) சிறந்த காரியமே தேவை என்பதல்ல.
(46) வாழ்க்கை முழுவதையும் கடவுள் மயமாக்கலாம்.
(47) பாவ பயம் இல்லை.
(48) சிறிதெனினும் இனிது.


## 10. விபூதி சிந்தனை (பக்கம் 139)


(49) கீதையின் முற்பகுதி—ஒரு கண்ணோட்டம்.
(50) ஆண்டவனைத் தரிசிக்க எளிய முறை.
(51) மானிட உருவில் கடவுள்.
(52) சிருஷ்டியில் கடவுள்—சில சிறந்த உதாரணங்கள்.
(53) சிருஷ்டியில் கடவுள்—இன்னும் சில உதாரணங்கள்.
(54) தீயோரிடமும் கடவுளின் காட்சி.


## 11. விசுவரூப தரிசனம் (பக்கம் 160)


(55) விசுவரூப தரிசனத்தில் அர்ஜுனன் ஆவல்.
(56) சிறு உருவிலும் பூரண தரிசனம் கிட்டும்.
(57) விசுவரூபத்தை ஏற்கவும் இயலாது.
(58) 'ஸர்வார்த்த ஸாரம்.'


## 12. சகுண—நிர்குண பக்தி (பக்கம் 171)


(59) ஏகாக்ரதையிலிருந்து சமக்ரதை வரை.
(60) சகுண உபாசகனும் நிர்குண உபாசகனும்—தாயின் இரு பிள்ளைகள்.
(61) சகுணம் சுலபமானது, ஆபத்தில்லாதது.
(62) நிர்குணமின்றிச் சகுணமும் குறைபாடுள்ளதே.
(63) ஒன்றுக்கொன்று உதவுபவை: இராம சரித்திரம்.
(64) ஒன்றுக்கொன்று உதவுபவை: கிருஷ்ண சரித்திரம்.
(65) இரண்டும் ஒன்றே—சொந்த அனுபவம்.
(66) பக்த இலட்சணம் பெறுக!

## 13. ஆத்ம-அனாத்ம விவேகம் (பக்கம் 192)

(67) கர்மயோகத்திற்குதவும் உடல்-ஆன்மப் பாகுபாடு.
(68) திருத்தத்தின் அஸ்திவாரம்.
(69) வாழ்வைத் தடுக்கும் உடற் பற்று.
(70) ‘ தத்துவமஸி.’
(71) கொடியோரின் ஆட்சிக்குச் சாவுமணி.
(72) பரம்பொருளின் சக்தியில் உறுதி.
(73) பரம்பொருளின் சக்தியை மேன்மேலும் உணர்தல்.
(74) பணிவு, பெருமையின்மை முதலியவற்றைப் பேணுதல்.

## 14. குண எழுச்சியும் குணச் சிதைவும் (பக்கம் 214)

(75) இயற்கைக்குச் சிகிச்சை.
(76) தமோகுணத்திற்கு மருந்து உடலுழைப்பு.
(77) தமோ குணத்திற்கு இன்னொரு மருந்து.
(78) இரசோகுணம்—அதற்கு மருந்து சுதர்ம வரம்பு.
(79) சுதர்மத்தை நிர்ணயிப்பது எப்படி ?
(80) சத்துவ குணமும் அதற்கு உபாயமும்.
(81) ஆன்ம ஞானமும் பக்தியின் சார்பும்.

## 15. பூரணயோகம்-யாங்கணும் புருஷோத்தம தரிசனம் (பக்கம் 234)

(82) பிரயத்தன மார்க்கம் வேறு, பக்தி வேறல்ல.
(83) பக்தியால் பிரயத்தனம் சுலபமாகிறது.
(84) சேவையின் மூவங்கங்கள் : எஜமானன், ஊழியன், சேவைக்கருவி.
(85) ஆணவமற்ற சேவையே பக்தி.
(86) ஞானலட்சணம்.
(87) சர்வவேத சாரம் என் கையில்.

## 16. அநுபந்தம் 1— தேவாசுரப் போக்குகளிடை போர் (பக்கம் 250)

(88) புருஷோத்தம யோகத்தின் முன்னொளி : தேவ சம்பத்து.
(89) அஹிம்சைப் படையும் ஹிம்சைப் படையும்.
(90) அஹிம்சையின் வளர்ச்சி— நான்கு கட்டங்கள்.
(91) புலால் மறுப்பு : ஒரு பெரிய அஹிம்சைச் சோதனை.
(92) அசுர சம்பத்தின் முப்பேராசைகள் : ஆதிபத்தியம், கலாச்சாரம், செல்வம்.
(93) காமக்குரோதங்களை வெல்லப் புலனடக்கமென்ற சாஸ்திரீய வழி.

பீஷ்மன், அனுமான் முதலிய இராமாயண - மகாபாரதப் பாத்திரங்களி ஞல் பல்லாயிர வருஷங்களாக இந்திய வாழ்க்கை புனிதமடைந்து வந்திருக்கிறது. உலகின் பிற மகா காவியங்களின் பாத்திரங்கள் மக்கள் வாழ்க்கையில் இவ்வாறு கலந்திருக்கக் காணேம். இவ்வகையில் மகா பாரதமும் இராமாயணமும் அற்புதமான நூல்கள் என்பதில் ஐயமில்லை. இராமாயணம் ஓர் இனிய நீதி நூலாயின், மகாபாரதமோ பரந்த சமூக சாத்திரமாகும். வியாசமுனிவர் இலட்சம் சுலோகங்கள் எழுதி எண்ணி லாச் சித்திரங்களையும் வரலாறுகளையும் நடவடிக்கைகளையும் உள்ளது உள்ளவாறே பேராற்றலுடன் வருணித்திருக்கிறுர். ஆண்டவன் ஒருவ னைத் தவிர குற்றங் குறைகளே அற்றவரென்று வேறு எவரையும் சொல்லுவதற்கில்லை; அதேவகையில் இவ்வுலகில் குற்றமே உருவான வன் எனத்தக்கவனும் எவனுமில்லை என்பதை மகாபாரதம் வெகு தெளிவாய்க் கூறுகிறது. இதில் பீஷ்மன், தருமன் ஆகியோரின் குறை களைக் காட்டியிருப்பது போன்றே, கர்ணன், துரியோதனன் ஆகியோரது நற்குணங்களும் விளக்கப் பெற்றிருக்கின்றன. மானிட வாழ்க்கையை வெள்ளை, கறுப்பு ஆகிய இருவகை நூல்கொண்டு நெய்த ஆடை என்று மகாபாரதம் கூறுகிறது. வியாச பகவான் தாம் சார்பற்றுத் தனித்து நின்றுகொண்டு உலகின்—பரந்த சம்சாரத்தின்—இருளும் ஒளியும் கலந்தமைந்த சித்திரத்தைத் திரையிலிட்டுக் காட்டுகிறுர். வியாசதேவ ரின் சிறிதும் சார்பற்றதும் மிகச் சீரியதுமான இச் சிருஷ்டித்திறனுல் மகாபாரதம் ஒரு மாபெரும் தங்கச் சுரங்கமாகவே அமைந்துள்ளது. அதைத் தோண்டித் தேவையான தங்கத்தைப் பெறுவோமாக!

வியாசதேவர் இவ்வளவு பெரிய மகாபாரதத்தை எழுதினுரே, அவர் தம் அபிப்பிராயமென்று எதையேனும் சொல்ல விரும்பினுரா, இல்லையா தம் முக்கிய உபதேசமென்று ஒன்றை எங்கேனும் தந்திருக்கிறுரா? எ கட்டத்திலேனும் வியாச முனிவரின் தலைசிறந்த கருத்துக்கள் காண படுகின்றனவா? மகாபாரதத்தில் ஆங்காங்கு தத்துவஞானமும், உ தேசங்களும் காட்டுப் புதர்போல மலிந்துள்ளன. ஆனுல் இத் தத்து ஞானம், உபதேசம் ஆகியவற்றிற்கு—நூல் முழுமைக்குமே—சாரமான இரகசியத்தை அவர் எங்கேனும் குறித்திருக்கிறுரா? ஆம் குறித்திருக் றுர். மகாபாரதம் முழுவதையும் கடைந்தெடுத்த வெண்ணெ வியாசர் பகவத் கீதையில் திரட்டிவைத்திருக்கிறுர். கீதை வியாசதே ரின் முக்கிய போதனையும், அவரது சிந்தனையின் சாரச் சேமிப்புமாகு இதன் அடிப்படையிலேயே "நான் முனிவருள் வியாசன்" என் திருவாக்கு அர்த்தபுஷ்டியுள்ளதாக வேண்டும். பண்டைக் கா

தொட்டே கீதைக்கு உபநிடதங்களுக்குரிய பதவி இருந்துவந்துளது. கீதை உபநிடதங்களுக்கெல்லாம் உபநிடதம். ஏனெனில், உபநிடதங்கள் அனைத்தையும் கறந்து கீதையாம் பாலை பகவான் அர்ஜுனனை வியாஜமாய்க்கொண்டு உலகிற்கு வழங்கியிருக்கிறார். வாழ்வின் மலர்ச்சிக்குத் தேவையான எல்லாக் கருத்துக்களும் கீதையில் இடம் பெற்றுள்ளன. இதனாலேயே கீதையைத் தருமஞானப் பொக்கிஷமென உண்மையான அனுபவசாலிகள் சொல்லியுள்ளார்கள். கீதை (சிறியதேயாயினும்) இந்து மதத்தின் முக்கியமானதொரு நூலாகும்.

கீதையை ஸ்ரீ கிருஷ்ணன் உபதேசித்தருளினான் என்பதை யாவரும் அறிவர். இம் மாபெரும் போதனையைக் கேட்ட பக்தனான அர்ஜுனன் இப் போதனையினால் தானும் 'கிருஷ்ணன்' என்று குறிப்பிடப்படும் அளவுக்கு கிருஷ்ணனது தன்மையை எய்திவிட்டான். பகவான், பக்தன் ஆகிய இருவரின் உள்ளக்கிடக்கையை வெளியிட்ட வியாசதேவரையும் கிருஷ்ணன் என்றே மக்கள் கருதத் தொடங்குமளவுக்கு அவரும் அவர்களுடன் ஒன்றிவிட்டார். போதிப்பவனும் கிருஷ்ணன், கேட்பவனும் கிருஷ்ணன், அதைப் புனைவோனும் கிருஷ்ணன்—இவ்வாறு இம் மூவரிடையிலும் ஒருமை தோன்றியதுபோல் ஆகிவிட்டது; மூவரும் வேறுபாடின்றி ஒருவரே போன்று ஆகிவிட்டனர். கீதையைப் பயிலுவோனுக்கும் இத்தகைய மனவொருமை இன்றியமையாதது.

## (2) அர்ஜுனன் நிலை

சிலர் இரண்டாம் அத்தியாயத்திலிருந்தே கீதை ஆரம்பமாவதாய்க் கொள்ளவேண்டு மென்கிறார்கள். இரண்டாம் அத்தியாயத்தின் பதினொன்றும் சுலோகத்திலிருந்து நேரிடையான உபதேசம் தொடங்குகிறதெனில், அங்கிருந்தே ஆரம்பமென ஏன் கருதக்கூடாது? ஒருவரோ என்னிடம், "பகவான் எழுத்துக்களில் 'அ'கரத்தைக் கடவுள் அமிசமென்று கூறியிருக்கிறார். இங்கே, 'अशोच्यानन्वशोचस्त्वम्' (அசோச்யானன்வசோசஸ்த்வம்) என்பதின் ஆரம்பத்தில் தானாகவே 'அ'கரம் அமைந்திருக்கிறது. ஆகையால் அங்கிருந்துதான் ஆரம்பமென்று கொள்ளவேண்டும்" என்றார். இந்த யுக்திவாதத்தை நாம் புறக்கணித்தாலும், இங்கிருந்து ஆரம்பமென்று கொள்ளுதல் பலவகையில் உசிதமே. ஆயினும் அதற்கு முன்னிருக்கும் முன்னுரைப் பகுதிக்குள்ள சிறப்பு இருக்கவே இருக்கிறது. அர்ஜுனன் எந் நிலையில் இருக்கிறான், எவ் விஷயத்தை விளக்குவதற்காக கீதை எழுந்தது என்பவை இம் முன்னுரைக் கதைப் பகுதி இல்லையேல் நன்கு விளங்கா.

அர்ஜுனனது கலக்கத்தை அகற்றி அவனைப் போரில் இறங்கச் செய்யவென்றே கீதை போதிக்கப்பட் டிருக்கிறதெனச் சிலர் கூறுகிறார் கள். அவர்களின் அபிப்பிராயப்படி கீதை கர்மயோகத்தைப் போதிப்ப தோடல்லாமல், யுத்த யோகத்தையும் விளக்குவதாகிறது. ஆனால் சிறிது சிந்தித்துப் பார்ப்போமாயின் இக் கூற்றிலுள்ள பிழை புலனாகும். பதினெட்டு அக்ஷௌஹிணி கொண்ட படை போரிடச் சித்தமாயிருந் தது. அப்படியானால் பகவான் கீதை முழுவதையும் போதித்து அர்ஜு னனை அப்படைக்குத் தகுந்தவனாக்கினார் என்று சொல்லுவதா? கலங்கி யிருந்தது அர்ஜுனனேயன்றி அப் படையல்ல. அப்படியானால், படைக்கிருந்த தகுதி, அர்ஜுனனது தகுதியினும் அதிகமா? இதை நாம் கற்பனையில்கூடக் கருத முடியாதே. அர்ஜுனன் போரிலிருந்து புறம்போக விரும்பியதற்குக் காரணம் பயமல்ல. நூற்றுக்கணக்கான போர்களில் தன் வல்லமையைக் காட்டிய மகாவீரனாகும் அவன். 'உத் தரன் மாடுபிடி' சமயத்தில் அவன் தனியனாகவே பீஷ்மன், துரோணன், கர்ணன் ஆகியோரைத் தோற்கடித்து வெற்றிக்கொடி நாட்டினான். எங் கும் வெற்றி, எதிலும் வெற்றி என்பதையே அவன் இதுவரை அறிந்த வன். மானிடருள் ஒப்பற்ற உண்மை மானிடன் என்று புகழ்பெற்றவன் அவன். அவனது ஒவ்வொரு மயிர்க் காலிலிருந்தும் வீரம் வழிந்து கொண்டிருந்தது. அர்ஜுனனைத் தூண்ட, அவனுக்கு ரோஷம் ஊட்ட வென கிருஷ்ணனும் அவன்மீது கோழைத்தனத்தைச் சாற்றிப் பார்த் தான். ஆனால் அவனது அம் முயற்சி குறிதவறி விட்டது. பிறகு அவன் வேறு ஆதாரங்களைக் கொண்டே ஞான, விஞ்ஞானங்கள் பற்றிய விஷயங்களை விளக்கிக் கூறவேண்டியதாயிற்று. ஆகவே, கோழைத் தனத்தை அகற்றுதல் என்பது போன்ற எளிய நோக்கம் கீதையின் நோக்கமல்ல என்பது உறுதி.

வேறு சிலர் அர்ஜுனனது அஹிம்சைப் போக்கை மாற்றி அவனைப் போரில் ஈடுபடச் செய்யும்பொருட்டு கீதை போதிக்கப்பட்டதென்கிறார் கள். இக்கூற்றும் சரியல்லவென்பது என் அபிப்பிராயம். இதை நன்கு ஆராயப்புகுமுன் நாம் முதலில் அர்ஜுனன் நிலையை எண்ணிப் பார்க்கவேண்டும். இவ்விஷயத்தில் முதல் அத்தியாயமும், இரண்டாம் அத்தியாயத்தில் உள்ள அதன் தொடர்ச்சியும் நமக்குப் பெரிதும் உதவும்.

போர்க்களத்தில் நின்றுகொண்டிருந்த அர்ஜுனன் மன உறுதியும் கடமையிற் கருத்தும் உள்ளவன். க்ஷத்திரியப் பண்பு அவனிடம் இயற் கையிலேயே அமைந்திருந்தது. போரைத் தவிர்க்க ஆனவரை முயன்

றும் தவிர்க்க இயலவில்லை. மிக மிகக் குறைந்த கோரிக்கையைச் செய்தும், ஸ்ரீ கிருஷ்ணனைப் போன்றவர் மத்தியஸ்தம் செய்தும்—இரண்டுமே பயனளித்தில. இந்நிலையில் பல்வேறு நாடுகளின் அரசர்களை ஒருங்கு திரட்டியும், ஸ்ரீ கிருஷ்ணனைத் தன் தேர்ப்பாகனாய்க் கொண்டும் அவன் போர்க்களத்தில் நிற்கிறான். அப்பொழுது வீரனுக்குரிய உற்சாகத்துடன் அவன் கிருஷ்ணனை விளித்து, "இரு படைகளினிடையே என் தேரை ஓட்டி நிறுத்துங்கள். என்னோடு போரிடச் சித்தமாய் வந்திருப்பவர் முகத்தை நான் பார்க்கிறேன்" என்கிறான். கிருஷ்ணன் அவ்வாறே செய்தான். அர்ஜுனன் நாற்புறமும் பார்வையைச் செலுத்தியபொழுது அவன் கண்களில் பட்டதென்ன? இருபுறங்களிலும் தன் உற்றார் உறவினர், பந்துமித்திரர் ஆகியோரின் மாபெருங் குழு; பாட்டன், தந்தை, பிள்ளை, பேரன்மார், அன்பார்ந்த நட்பினர், சுற்றத்தார் ஆகியோர்; நான்கு தலைமுறையினர் தம்முயிரைத் துறக்கவும் பிறர் உயிரைப் பறிக்கவும் உறுதிகொண்டு கூடியிருக்கிறார்கள். இதற்கு முன்பே இவ்வாறெல்லாம் இருக்குமென அவன் ஊகியாதவன் அல்ல. ஆனால் நிதரிசனமாய் ஒன்றைப் பார்க்கையில் மனத்தில் எழும் உணர்ச்சியே வேறு. உறவினரின் அப் பெருங்கூட்டத்தைக் கண்ட அவன் உள்ளத்தில் ஒரு கொந்தளிப்புத் தோன்றுகிறது. மனம் நோகிறான். இன்றுவரை அவன் எத்தனையோ போர்களில் எண்ணத் தொலையாத வீரரைக் கொன்றிருக்கிறான். அப்பொழுதெல்லாம் அவனுக்கு வருத்தம் தோன்றியதில்லை, அவனது காண்டீவம் கையிலிருந்து நழுவியதில்லை; அவன் உடல் நடுங்கியதோ, கண்களில் நீர் பெருகியதோ இல்லை. ஆனால் இப்பொழுது மட்டும் இப்படி ஆவானேன்? அசோகனைப்போல, அவன் மனத்தில் அஹிம்சை உணர்ச்சி தோன்றிவிட்டதா? இல்லை. இது தன்னைச் சேர்ந்தவரிடம் ஒருவனுக்குள்ள பாசமேயல்லாது வேறல்ல. இப்பொழுதும் குருமாரும், பந்துக்களும், நண்பரும் எதிரில் இருந்திராவிடில் அவன் பகைவரின் சிரங்களை வெட்டிப் பந்துபோல் வீசியிருப்பான். ஆனால் இப் பாசத்திலிருந்து விளைந்த மோகம் அவனது கடமையுணர்ச்சியைக் கவிந்துகொள்ளவே அவனுக்குத் தத்துவ ஞானம் நினைவுக்கு வந்தது. கடமையில் உறுதியுள்ள மனிதனை மோகம் ஆட்கொண்டாலும் அனைவரும் அறியக் கடமையிலிருந்து வழுவ அவன் விரும்புவதில்லை; அதற்குரிய காரணத்தை உயரிய கருத்தென்ற ஆடையினால் அலங்கரித்து மறைக்கிறான். அர்ஜுனனுக்கும் இதே நிலைமைதான் ஏற்பட்டது. அப்பொழுது அவன் போர் புரிதலே பாவமென்று பொய்யும் புளுகுமாய்ப் புனைந்து கூறத் தொடங்கினான். போரினால் குலம் அழியும், தருமம்

தகரும், மக்கள் மனம்போனபடி நடக்கத் தொடங்குவர், விபசாரம் பரவும், பஞ்சம் வரும், சமூகத்தில் பலவகைச் சங்கடங்கள் தோன்றும்—என்றெல்லாம் பல வாதங்களை எடுத்துக் கூறி அவன் கிருஷ்ணனுக்கே புத்தி புகட்டத் தொடங்கிவிட்டான்!

இங்கே எனக்கு ஒரு நீதிபதியின் கதை நினைவுக்கு வருகிறது. ஒரு நீதிபதி இருந்தார். அவர் நூற்றுக்கணக்கான குற்றவாளிகளுக்கு மரண தண்டனை விதித்தவர். ஆனால் ஒரு நாள் அவரது மகனே கொலைக் குற்றத்திற்காக அவர் எதிரிற் கொணர்ந்து நிறுத்தப்பட்டான். அவன் கொலை செய்தது ருஜுவாகிவிடவே தம் மகனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கவேண்டிய சந்தர்ப்பம் அவருக்கு ஏற்பட்டுவிட்டது. அப்பொழுது அவர் முன்னும் பின்னும் பார்க்கலானார். "தூக்குத் தண்டனை என்பது மனிதத் தன்மையில்லாதது. இத்தகைய தண்டனை அளித்தல் மனிதனுக்கு அழகல்ல. இதனால் குற்றவாளியைத் திருத்தலாம் என்பதற்கே இடமில்லாமற் போகிறது. கொலை செய்தவன் உணர்ச்சிவயனாகி ஆத்திரத்திலோ, ஆவேசத்திலோ கொலை செய்துவிட்டான். ஆனால் கொலை செய்யத் தூண்டிய பூதம் அவன் தலையினின்று இறங்கியபின் அவனைக் கடினச் சித்தத்துடன் தூக்குமேடையிலேற்றிக் கொல்லுதல் சமூகத்தின் மனிதத் தன்மையையே அவமானத்திற்குள்ளாக்கி, களங்கப் படுத்துவதாகும்" என்று அவர் தம் அறிவின் வளத்தை வாதங்களில் விளம்பலானார். தம் மகன் எதிரில் வந்து நின்றிராவிடில் நீதிபதி தம் ஆயுள் முழுதும் சிறிதும் தயங்காது தூக்குத் தண்டனை விதித்தவண்ணமிருந்திருப்பார். ஆனால் தம் பிள்ளையிடம் கொண்ட பாசத்தினால் இவ்வாறெல்லாம் பேசலானார். அவர் பேச்சு உள்ளத்திலிருந்து வந்ததல்ல; பிள்ளைப் பாசத்திலிருந்து பிறந்ததே; 'இவன் என் பிள்ளை' என்ற உடைமை உணர்ச்சியிலிருந்து இவ்வாதங்களெல்லாம் எழுந்தன.

அர்ஜுனன் போக்கும் இந் நீதிபதியின் போக்கைப் போன்றதே. அவன் கூறிய வாதங்கள் என்னவோ தவறல்ல. சென்ற மகாயுத்தத்தில் உலகனைத்தும் இதே விளைவுகளை நிதரிசனமாய்க் கண்டுள்ளது. ஆனால் அது அர்ஜுனனது உண்மை அறிவல்ல, உலக அறிவுப்பேச்சு என்பது தான் இதில் சிந்திக்கவேண்டிய விஷயம். கிருஷ்ணனுக்கு இது தெரியும். ஆகையால் அவைகளைச் சிறிதும் பொருட்படுத்தாது அவன் மோகத்தை அகற்றும் நேரிடை முயற்சியில் இறங்கிவிட்டான். அர்ஜுனன் உண்மையில் அஹிம்சாவாதியாய் மாறியிருந்தால், ஒருவர் எவ்வளவுதான் ஞான-விஞ்ஞானங்களைப்பற்றிக் கூறியிருப்பினும் அடிப்படைக் கேள்விக்கு விடை கிட்டாதவரை அவனுக்குச் சமாதானம்

ஏற்பட்டிராது. ஆனால் கீதை முழுவதிலும் இக் கேள்விக்கு எங்கும் விடையளிக்கப்படாதிருந்தும் அர்ஜுனனுக்குச் சமாதானம் ஏற்பட்டிருக்கிறது. எனவே அர்ஜுனன் அஹிம்சாவாதியல்ல, போரில் விருப்பமுள்ளவன் என்பதே இவை அனைத்தின் தெளிந்த முடிவு. போர் தனக்கு இயற்கையாய் அமைந்த, தவிர்க்கவியலாத, கடமையாகும் என்பதே அவன் கருத்து. அக்கடமையை அவன் மோகத்தில் சிக்குண்டவனாய்த் தட்டிக் கழிக்கப் பார்க்கவும், கீதை முக்கியமாய் இம்மோகத்தை அழித்தது.

## (3) கீதையின் குறிக்கோள் : மோகத்தைக் கொல்லல்

அர்ஜுனன் அஹிம்சையைப் பற்றி மட்டுமா, சந்நியாசம் பற்றிய பேச்சும் பேசத் தொடங்கி விட்டான். 'இரத்தம் தோய்ந்த இந்த க்ஷத்திரிய தர்மத்தைவிடச் சந்நியாசமே சிறந்தது' என்று அவன் சொல்லுகிறான். ஆனால் அது அர்ஜுனனது சுதர்மமா? அவனது தொழிலா அது? அர்ஜுனன் வெகு ஆனந்தமாய்ச் சந்நியாசி வேஷம் போடமுடிந்தபோதிலும் அதன்படி அவனால் எப்படி நடக்கமுடியும்? சந்நியாசம் என்று சொல்லிக்கொண்டு அவன் காட்டிற்குப் போனாலும் அங்கே மான் வேட்டையாடத் தொடங்கி விடுவான். ஆகையால் பகவான், "அர்ஜுனா, நீ 'நான் போர் புரிய மாட்டேன்' என்று சொல்லுகிறாயே, இது ஒரு மயக்கம். இன்று வரை உனக்கு இயற்கையாய் இருந்து வந்திருக்கும் ஒன்று உன்னைச் சண்டையிற் புகுத்தாது விடாது" என்று வெளிப்படையாகவே சொல்லிவிட்டார்.

அர்ஜுனனுக்குச் சுதர்மம் விகுணமாக (சிறப்பற்றதாக)த் தோன்றலாயிற்று. ஆனால் சுதர்மம் எவ்வளவு தான் விகுணமாயிருந்தபோதிலும் அதிலிருந்தபடியேதான் மனிதன் தன்னை வளர்த்துக்கொள்ள வேண்டும், அதிலிருந்தால்மட்டுமே அவன் வளர இயலும். இதில் பெருமை பற்றிய பிரச்னையே இல்லை; வளர்ச்சியின் சூத்திரமாகும் இது. பெரியதென்று கருதி ஏற்றலும் சிறியதென்பதனால் விட்டுவிடுதலும் சுதர்மத்தின் விஷயத்தில் தகாது. உண்மையில் அது பெரிதுமல்ல, சிறிதுமல்ல. அது நமது சக்திக்கு ஒத்து அமைகிறது. 'श्रेयान् स्वधर्मो विगुण:' (ஶ்ரேயான் ஸ்வதர்மோ விகுண:) என்ற கீதை வசனத்திலுள்ள 'தர்மம்' என்பதற்கு இந்து தர்மம், இஸ்லாம் தர்மம், கிறிஸ்தவ தர்மம் என்பவையல்ல பொருள். ஒவ்வொரு மனிதனுக்கும் சொந்தமான வெவ்வேறு தர்மம் உண்டு. என் எதிரில் இங்கேயுள்ள இருநூறு பேர்களுக்கும் இருநூறு தர்மங்கள் உள. எனக்கும் பத்து வருஷங்களுக்கு முன்

இருந்த தர்மம் இப்பொழுது இல்லை; இப்பொழுதுள்ளது பத்து வருஷங்களுக்குப் பிறகு இராது. சிந்தனை, அனுபவம் ஆகியவைகளின் பயனாக மனிதனது போக்கு மாறுவதை யொட்டி ஏற்கெனவே இருந்த தர்மம் அகலவும், புதிய தர்மம் வந்து சேர்ந்து கொண்டேயிருக்கிறது. முரட்டுப் பிடிவாதமாய் எதையும் செய்யலாகாது.

பிறரது தர்மம் சிறந்ததாகத் தோன்றியபோதிலும் அதை ஏற்பதனால் எனக்கு நன்மையுண்டாகாது. சூரியனது ஒளி எனக்குப் பிடித்தமானது. இவ்வொளியினால் நான் வளர்ந்து கொண்டே இருக்கிறேன். சூரியன் என் வணக்கத்திற்கும் உரியது. ஆனால் இதற்காக நான் பூமியிலிருப்பதைவிட்டு அதனிடம் போக விரும்புவேனாயின் பொசுங்கிச் சாம்பலாகி விடுவேன். இதற்கு மாறாக, பூமியிலிருத்தல் குறைபாடுள்ளதேயாயினும், சூரியனுடன் ஒப்பிடும்பொழுது பூமி முற்றிலும் இழிந்ததாயினும், அது இயற்கையில் ஒளியற்றதாயிருப்பினும், சூரியனது உஷ்ணத்தைச் சகிக்கும் சக்தி என்னிடம் இல்லாத வரை நான் அதனிடமிருந்து விலகிப் பூமியில் இருந்தவாறேதான் என்னை வளர்த்துக்கொள்ள வேண்டும். மீன்களிடம், "நீரினும் பால் அதிக மதிப்புள்ளது. நீங்கள் பாலில் வந்து இருங்கள்" என்று எவரேனும் சொல்லுவாராயின் மீன்கள் அதை ஏற்குமா? மீன்கள் நீரில்தான் வாழ முடியும், பாலில் அவை மரித்துப்போம்.

பிறரது தர்மம் எளிதாய்த் தோன்றிய போதிலும் அதை ஏற்கக் கூடாது. பெரும்பாலும் சுலபமென்று தோன்றுவது வெறும் தோற்றமாகவேதானிருக்கும். குடும்ப வாழ்க்கையில் குழந்தை குட்டிகளைச் சரிவரப் பராமரிக்க முடியவில்லை என்று அலுத்துக்கொண்டு கிருகஸ்தன் ஒருவன் சந்நியாசம் ஏற்றால் அது வெறும் வேஷமாக முடியும், நிர்வகிப்பதும் சிரமமாயிருக்கும். சந்தர்ப்பம் வந்ததும் அவனது வாசனைகள் தலை தூக்கப் பார்க்கும். உலக வாழ்க்கையின் சுமையைத் தாங்க வியலவில்லை என்பதற்காகக் காட்டிற்குப் போகும் ஒருவன் முதலில் அங்கே ஒரு சிறு குடிசை அமைப்பான்; பிறகு அதைக் காக்கும் பொருட்டு வேலி கோலுவான். இவ்வாறு செய்துகொண்டே போய் அங்கும் சிறிய சம்சாரம் போகப் பெரிய சம்சாரம் நடத்தவேண்டிய சந்தர்ப்பம் வந்துவிடும். உண்மையில் மனத்தில் வைராக்கியம் இருக்குமானால் சந்நியாசம் அவ்வளவு சிரமமானதா? சந்நியாசத்தைச் சுலபமாக்க உதவும் ஸ்மிருதி வசனங்கள்தாம் இருக்கின்றனவே. ஆனால் முக்கியமான விஷயமோ ஒருவனது உண்மையான மனப்போக்கைப் பற்றியது. ஒருவனது மனப்போக்கையொத்தே அவனது தர்மம் அமையும்; உயர்ந்தது

தாழ்ந்தது, சுலபம் சிரமம் என்ற பேச்சுக்கே இதில் இடமில்லை. வளர்ச்சி உண்மையானதாயிருக்க வேண்டும்; மாற்றம் உண்மையான தாயிருக்க வேண்டும்.

ஆனால் உணர்ச்சி வயப்பட்ட சிலர், "யுத்த தர்மத்தை விடச் சந்நியாசம் உண்மையில் எப்பொழுதுமே சிறந்ததாயின் பகவான் அர்ஜுனனை ஏன் உண்மையான சந்நியாசியாக்கவில்லை. இது அவருக்கு இயலாததா?" என்று கேட்கிறார்கள். அவருக்கு இயலாதது எதுவுமில்லைதான். ஆனால் அர்ஜுனன் சாதித்தது என்று அப்பொழுது நாம் எதைச் சொல்ல முடியும்? ஆண்டவன் சுதந்திரம் அளித்திருக்கிறான். ஆகையால் ஒவ்வொரு மனிதனும் தானே முயன்றுகொண்டிருப்பதில் தான் இன்பமிருக்கிறது. சிறு குழந்தைகள் தாமே சித்திரங்கள் வரைகையில்தான் மகிழ்கிறார்கள்; அவர்கள் கையைப் பிடித்துப் பிறர் சித்திரம் வரைவிப்பது அவர்களுக்குப் பிடிப்பதில்லை. ஆசிரியர் குழந்தைகளுக்குள்ள வினாக்களுக்குத் தாமே விடை சொல்லிக்கொடுத்து விட்டால் குழந்தைகளின் அறிவு வளர்வதுதான் எப்படி? ஆகையால் தாய், தந்தை, குரு ஆகியோரின் வேலை வழிகாட்டுவதோடு முடிந்து விடுகிறது. கடவுள் நம் உள்ளிருந்து நமக்கு வழி துலக்கிக்கொண்டே யிருக்கிறார்; இதற்கதிகமாக அவர் எதுவும் செய்வதில்லை. குயவன் சட்டியைத் தட்டி உருவாக்குவதைப்போல ஒவ்வொருவனையும் ஆண்டவன் தட்டிக் கொட்டிச் சரிப்படுத்திக் கொண்டே யிருப்பதில் விசேஷம் ஏது? நாம் மட்பாண்டங்கள் அல்லவே, சின்மயராயிற்றே!

இந்த விளக்கத்திலிருந்து கீதை தோன்றியது சுதர்மத்திற்குத் தடையாயுள்ள மோகத்தை அகற்றுவதற்காகவென்று உங்களுக்குப் புரிந்திருக்கும். அர்ஜுனன் தர்மத்தை மறந்திருந்தான். சுதர்மம்பற்றி அவன் மனத்தில் மோகம் எழுந்திருந்தது. ஸ்ரீ கிருஷ்ணன் முதலிற் கண்டித்ததுமே அர்ஜுனன் இதைத் தானே ஒப்புக்கொள்கிறான். அந்த மோகத்தை, அந்த மமத்துவத்தை (தற்பற்றை) அந்த வாஞ்சையை அகற்றுதலே கீதையின் முக்கிய வேலை. இதனாலேயே கீதை முழுமையும் சொல்லியான பிறகு பகவான், "அர்ஜுனா, உன் மோகம் தொலைந்ததா?" என்று கேட்கவும், அர்ஜுனன், "ஆம். பகவானே, மோகம் தொலைந்தது; சுதர்மம் விளங்கிற்று" என்று விடையளிக்கிறான். இவ்வாறு கீதையின் தொடக்கத்தையும் முடிவையும் இணைத்துப் பார்ப்போமாயின் மோக நீக்கமே அதன் குறிக்கோளென்பது விளங்குகிறது. கீதை மட்டுமல்ல, மகாபாரதம் முழுமையின் குறிக்கோளும் இதுவே. வியாசர் மகாபாரதத்தின் தொடக்கத்திலேயே, "மக்களின்

உள்ளங்களின் மோகப் படலத்தை அகற்றவே நான் இவ் விதிகாசச் சுடர் கொளுத்துகின்றேன் " என்கிறார்.

## (4) வெள்ளை உள்ளத்தின் தகுதி

அடுத்து வரும் கீதை முழுவதையும் புரிந்து கொள்வதற்கு அர்ஜுனனைப் பற்றிய இம் முன்னுரை நமக்கு மிகவும் உதவும். இதற்காக நாம் இம்முன்னுரைக்குக் கடமைப்பட்டவராவோம். இதிலிருந்து நமக்கு வேறொரு நன்மையும் விளைகிறது. அர்ஜுனனைக் குறித்த இம் முன்னுரையில் அவனது உள்ளத்தின் வெள்ளைத்தனம் புலனாகிறது. 'அர்ஜுனன்' என்ற சொல்லுக்கே, 'கபடமற்றவன்' என்பது பொருள். அவன் தன் மனத்தில் தோன்றிய நல்லவை, தீயவை ஆகிய எல்லா எண்ணங்களையும் ஒளிவு மறைவின்றி பகவானிடம் வெளியிட்டுவிட்டான், எதையும் மறைத்து வைத்துக் கொள்ளவில்லை. இறுதியில் ஸ்ரீ கிருஷ்ணனிடம் சரண் புகுந்தான். உண்மையில் அவன் தொடக்கம் முதலே கிருஷ்ணனிடம் அடைக்கல மானவனே; கிருஷ்ணனைத் தேர்ப் பாகனாக்கித் தன் குதிரைகளின் கடிவாளங்களை அவன் கையில் கொடுத்ததிலிருந்தே தன் மனத்தின் கடிவாளத்தையும் அவனிடம் ஒப்புவிக்கச் சித்தம் செய்துகொண்டுவிட்டான். வாரீர், நாமும் அவ்வாறே செய்வோம்! 'அர்ஜுனனிடமோ கிருஷ்ணன் இருந்தான். நமக்குக் கிருஷ்ணன் எங்கே கிடைப்பான்?' என்று நாம் சொல்ல வேண்டாம். கிருஷ்ணன் என்று ஒரு தனி மனிதன் இருந்தானென்ற இதிகாசம் பற்றிய பிழைபட்ட கருத்திலேயே நாம் சிக்கவேண்டாம். நம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் அந்தர்யாமியாய் கிருஷ்ணன் வீற்றிருக்கிறான். நமக்கு வெகு வெகு அண்மையில் இருப்பவன் அவனே. ஆகவே நாம் நம் உள்ளத்தின் மாசனைத்தையும் அவன் திருமுன்னிட்டு அவனிடம் " ஆண்டவனே, நான் உன் அடைக்கலம். நீ ஒருவனே எனக்கு ஆசான். எனக்குத் தக்க வழியைக் காட்டு. நீ காட்டும் வழியிலேயே நான் செல்லுவேன்," என்று விண்ணப்பித்துக் கொள்வோமாக! நாம் இவ்வாறு செய்வோமாயின் அந்தப் பார்த்தசாரதி நம் தேரையும் செலுத்துவான்; தன் திருவாயினால் நமக்கும் கீதையை ஓதித் தந்து வெற்றி கிட்டுமாறு அருள் பாலிப்பான்.

ஞாயிறு, 21-2-'32

## இரண்டாம் அத்தியாயம்

# போதனையின் சுருக்கம் : ஆன்ம ஞானமும் சமத்துவ புத்தியும்

### (5) கீதையின் பரிபாஷை

சகோதரர்களே, சென்ற அத்தியாயத்தில் நாம் அர்ஜுனனது விஷாத (கலக்க) யோகத்தைப் பார்த்தோம். அர்ஜுனனது வெள்ளை உள்ளம் போன்ற உள்ளமும், இறைவனிடம் அடைக்கலம் புகும் மனப் பான்மையும் இருக்குமிடத்தில் கலக்கமும் யோகமாகிவிடுகிறது. இதைத் தான் 'நெஞ்சைக்கடைதல்' என்பது. கீதையின் இம் முன்னுரைப் பகுதிக்கு நான் அதை ஆக்கியோரின் அபிப்பிராயப்படி 'அர்ஜுன விஷாத யோகம்' என்ற சிறப்புப் பெயர் அளிக்காது, 'விஷாத யோகம்' என்ற அனைவருக்கும் பொதுவான பெயர் அளித்திருக்கிறேன். ஏனெனில், கீதைக்கு அர்ஜுனன் ஒரு வியாஜமே. (மகாராஷ்டிரத்தி லுள்ள) பண்டரிபுரத்தில் பாண்டுரங்கனது அவதாரம் புண்டலீகனுக்காக மட்டுமே ஏற்பட்டதென்று கருதலாகாது. புண்டலீகனை வியாஜமாய்க் கொண்டு ஜடஜீவர்களாகிய நம் அனைவரையும் கடைத்தேற்றும் பொருட்டு அவர் ஆயிரமாயிரமாண்டுகளாய் நின்று கொண்டிருப்பதைக் காண்கிறோம். இவ்வாறே கீதையின் கருணை அர்ஜுனனுக்காகப் பெருகிய போதிலும் நம் அனைவருக்காகவும் பெருகியதே. ஆகையால் கீதையின் முதல் அத்தியாயத்திற்கு 'விஷாத யோகம்' என்ற பொதுப் பெயரே நன்றாயிருப்பதாய்த் தோன்றுகிறது. இந்தக் கீதையாம் மரம் இங்கிருந்து வளர்ந்துகொண்டே சென்று இறுதி அத்தியாயத்தில் 'பிரசாத யோகம்' என்ற கனியைத் தாங்கப்போகிறது. ஆண்டவ னருள் இருக்குமாயின் நாமும் இச் சிறைவாச முடிவிற்குள் அதுவரை போய்ச் சேர்ந்து விடுவோம்.

இரண்டாம் அத்தியாயத்திலிருந்து கீதையின் போதனை ஆரம்ப மாகிறது; தொடக்கத்திலேயே பகவான் வாழ்க்கையின் மாபெரும் தத்துவமொன்றை வெளியிடுகிறார். வாழ்க்கைக் கட்டடத்தை எழுப்ப வேண்டிய அடிப்படையான முக்கியத் தத்துவம் தொடக்கத்திலேயே புரிந்து விடுமானால் மேலே போகவேண்டிய வழி எளிதாகிவிடும் என் பதே இதில் அவருக்குள்ள கருத்து. இரண்டாம் அத்தியாயத்தில் வரும் सांख्य-बुद्धि (ஸாங்கிய புத்தி) என்ற சொல்லுக்கு வாழ்க்கையின் அடிப் படைத் தத்துவங்களென்று நான் பொருள் கொள்கிறேன். இந்த அடிப் படைத் தத்துவங்களை இப்பொழுது நாம் கவனிக்க வேண்டும். ஆனால்

இதற்குமுன் இந்த 'ஸாங்கிய' மென்ற சொல்லை வியாஜமாய்க் கொண்டு கீதையில் வரும் பரிபாஷைச் சொற்களுக்கு ஓரளவு விளக்கம் காணுதல் நலம்.

பண்டைய சாஸ்திரீயச் சொற்களைப் புதிய பொருளில் கையாளுதல் கீதைக்குள்ள ஒரு பழக்கம். மாமரத்தில் ஒட்டு முறையில் நாம் புதிய சுவை தரும் பழங்களைப் பெறுவது போன்று, பண்டைய சொற்கள் என்ற மரத் தண்டில், புதிய பொருள் என்ற ஒட்டு முறையைக் கையாண்டு 'கருத்துப் புரட்சி' என்ற புதுக் கனியைப் பெறுவது அஹிம்சா முறையாகும். வியாச முனிவர் இதில் கைதேர்ந்தவர். இதனால் கீதையின் சொற்களுக்கு விரிந்த பொருள் ஏற்படவும் அது என்றும் புதிதாய் இருந்து வந்ததோடு அநேக சிந்தனை யாளர் அவரவர் தேவையையும் அனுபவத்தையும் ஒட்டிப் பலவகைப் பொருள் கொள்ளவும் முடிந்தது. அவரவர் தத்தம் நிலைக்களத்தினின்று நோக்குகையில் இப் பொருள்களெல்லாம் சரியாகவே இருக்கலாம். நாமும் அவர்களைக்கண்டிக்கும் அவசியத்திற்கு இடம் தராமலே தனி யானதொரு பொருள் கொள்ளலாமென்று நினைக்கிறேன்.

இதுபற்றி உடநிடதத்தில் ஓர் அழகிய கதை வருகிறது. ஒரு சமயம் தேவரும், இராட்சதரும், மானிடரும் பிரமனிடம் உபதேசம் பெறப் போனார்கள். பிரமன் எல்லோருக்கும் 'द' (த) என்ற ஒரே எழுத்தை அளித்தார். தேவர்கள், "தேவர்களாகிய நாம் காமம் அதிகமுள்ள வர்கள்; சுகபோகங்களில் நமக்கு ஆசை அதிகம். ஆகையால் பிரமன் द என்ற எழுத்தின் மூலமாக दमनम् (புலனடக்கத்தைப்) போதித்திருக் கிறார்" என்று சொன்னார்கள். இராட்சதர்களோ "இராட்சதர்களாகிய நாம் மிகவும் கோபிஷ்டர்கள், தயையும் அற்றுவிட்டோம். நமக்கு द என்ற எழுத்தின் மூலமாய் दया (தயை) காட்டு என்று பிரமன் போதித்திருக்கிறார்" என்று பேசிக்கொண்டார்கள். மானிடரோ "மனிதராகிய நாம் உலோபிகள், பணப் பித்தர் ஆகிவிட்டோம். द வின் மூலமாய் दानम् (தானம்) புரியுமாறு பிரமன் நமக்குப் போதித் திருக்கிறார்" என்று சொன்னார்கள். பிரமன் அச்சொல்லுக்கு அவர்கள் கருதிய மூன்று பொருள்களையும் சரியென ஏற்றுக்கொண்டார். ஏனெனில் எல்லோருமே அவரவர் அனுபவத்திலிருந்து அவைகளைப் பெற்றிருந் தார்கள். கீதையின் பரிபாஷைச் சொற்களுக்குப் பொருள் காணும் பொழுது இந்த உபநிடதக் கதையை நாம் கவனத்திற் கொள்ள வேண்டும்.

## (6) வாழ்க்கைத் தத்துவம்–1 : சுதர்மம் புரிதல்

இரண்டாம் அத்தியாயத்தில் வாழ்க்கையின் பெருந் தத்துவங்கள் மூன்று கூறப்பட்டிருக்கின்றன. அவை: (1) ஆன்மாவின் அழியாமை அல்லது சிதைவின்மை; (2) உடலின் இழிவு; (3) சுதர்மத்தின் தவிர்க்க வியலாமை. இவற்றுள் சுதர்மம் கடமையாய் அமைய, எஞ்சிய இரண்டும் நாம் அறிதற்குரியவை ஆகின்றன. கடந்த அத்தியாயத்தில் நான் சுதர்மத்தைப் பற்றிச் சிறிது சொல்லியிருக்கிறேன். இச் சுதர்மம் நமக்கு இயற்கையிலேயே கிட்டுவதொன்று; சுதர்மத்தைத் தேடிக் கொண்டு நாம் எங்கும் போகத் தேவையிருப்பதில்லை. நாம் ஏதோ ஆகாயத்திலிருந்து குதித்துப் பூமியில் நடக்கத் தொடங்கினோம் என்பதல்ல. நாம் பிறப்பதற்குமுன் இந்தச் சமூகம் இருந்தது, நம் தாய் தந்தையர் இருந்தனர், அண்டை அயலாரிருந்தனர். இத்தகைய இந்த ஜன வெள்ளத்தில் நாம் பிறக்கிறோம். ஆகையால் எந்தப் பெற்றோர் வயிற்றில் நான் பிறந்திருக்கிறேனோ அவர்களுக்குப் பணி புரிதல் 'என்ற கடமை எனக்கு அப் பிறப்பினாலேயே அமைந்துள்ளது. அவ்வாறே, எந்தச் சமூகத்தில் நான் பிறந்தேனோ அதற்குச் சேவை செய்தல் என்ற கடமையும் இயல்பாகவே எனக்கு ஏற்பட்டுள்ளது. உண்மையில் நாம் பிறக்கும்போதே நம் சுதர்மமும் பிறந்து விடுகிறது என்று சொல்வதோடு நில்லாது, நாம் பிறப்பதற்கு முன்பே அது நமக்காகக் காத்து நிற்கிறது எனலாம். ஏனெனில், அது நம் பிறவிக்கே காரணமா யிருப்பது; நாம் பிறவி எடுப்பது அது நிறைவேறும் பொருட்டே. சிலர் சுதர்மத்தை மனைவியுடன் ஒப்பிட்டு, மனைவிக்கும் கணவனுக்குமுள்ள தொடர்பு பிரிக்க முடியாததென்று கருதப்படுவதைப் போல இச் சுதர்மத் தொடர்பும் பிரிக்கவியலாதது என்று சொல்லு கிறார்கள். ஆனால் எனக்கு இந்த உவமை சிறந்ததாகத் தோன்றவில்லை; இரண்டாம் தரத்ததாகவே தோன்றுகிறது. நானோ சுதர்மத்தைத் தாயுடனேயே ஒப்பிடுவேன். நான் என் தாயை இங்கே பிறந்த பிறகு தீர்மானித்துக் கொள்ள வேண்டியிருக்கவில்லை. என் தாய் யார் என்பது முன்னரே எனக்காகத் தீர்மானிக்கப்பட்டுவிட்டது. அவர் எப்படிப் பட்டவராயிருப்பினும், இப்பொழுது அவரை என்னால் தவிர்க்க வியலாது. சுதர்மத்தின் தன்மையும் இத்தகையதே. இவ்வுலகில் நமக்குச் சுதர்மத்தைத் தவிர வேறு ஆதரவே இல்லை. சுதர்மத்தைத் தட்டிக் கழித்துக் கொண்டே போதல் தன்னையே புறக்கணித்தல், தற் கொலை புரிந்து கொள்ளுதல் ஆகும். சுதர்மத்தின் உதவியைக்கொண்டு தான் நாம் முன்னேற முடியும். ஆகையால் இச் சுதர்மத்தின்

ஆதரவை எவரும் என்றும் விடலாகாது. இது வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவமாய் உறுதி பெற்றதொன்று.

சுதர்மம் நமக்கு வெகு சுலபமாய், இயற்கையாய்க் கிடைப்பதாகையால் தாமாகவே அதைச் செய்து வரவேண்டும். ஆனால் பலவகை மோகங்கள் காரணமாக நாம் இவ்வாறு செய்வதில்லை ; செய்தாலும் மிக்க சிரமத்துடன் செய்வதாயும் பலவகையான விஷம் போன்ற குற்றங் குறைகளுடன் கலந்து செய்வதாயுமிருக்கிறது. சுதர்மத்தின் பாதையில் முட்களைப் பரப்பும் இம் மோகங்களின் வெளி உருவங்களுக்கு ஓர் அளவே இல்லை. ஆயினும் நாம் அவைகளை ஆராய்ந்து பார்க்கையில் அவைகளனைத்திற்கும் அடியில் குறுகிய இழிந்த உடற்பற்று என்ற ஒரே பொருள் காணப்படுகிறது. என்னுடனும் என் உடலுடனும் தொடர்புள்ள மனைவி மக்களோடு என் எல்லை முடிந்து விடுகிறது. இந்த எல்லைக்கு வெளியில் உள்ள அனைவரும் எனக்கு அந்நியர், விரோதிகள் என்று எண்ணுமாறு சுவர்களை இவ்வுடலறிவு எழுப்பி விடுகிறது. இதில் ஒரு விசேஷம் என்னவென்றால், நான் 'நான்' என்றும் 'எனது' என்றும் எண்ணும் அவர்களின் உடலை மட்டுமே அது கணக்கில் எடுத்துக் கொள்ளுகிறது. உடலறிவின் இந்த இருமுனை ஆட்டத்தில் சிக்கிய நாம் வித விதமாய்ச் சிறிதும் பெரிதுமான குட்டைகளை தோண்டத் தொடங்குகிறோம். அனேகமாக எல்லோருமே இதே வேலைத் திட்டத்தில்தான் ஈடுபட்டிருக்கிறோம். இவைகளில் ஒருவரது குட்டை பெரிதாயும் மற்றொருவருடையது சிறிதாயுமிருந்தபோதிலும், யாவரும் குட்டைகள் தோண்டுவதில்தான் ஈடுபட்டிருக்கிறோம். இந்த உடலின் தோல் எவ்வளவு கனமோ அவ்வளவே தான் அவைகளின் ஆழமும். ஒருவன் குடும்பப்பற்றென்ற குட்டையை அமைத்துக்கொண்டிருந்தால், இன்னொருவன் தேசப்பற்றென்ற குட்டையில் ஆழ்ந்திருக்கிறான். பிராமணர், பிராமணரல்லாதார் என்று ஒரு குட்டை ; இந்து, முஸ்லிம் என்று மற்றொன்று. இவ்வாறு ஒன்றிரண்டல்ல, எத்தனையோ குட்டைகள் தோண்டப்பட்டிருக்கின்றன. எந்தப் பக்கம் திரும்பினாலும் இந்தக் குட்டைகளே தென்படுகின்றன. இந்த நம் சிறையிலும் அரசியல் கைதிகள், சாதாரணக் கைதிகள் என்ற குட்டைகள் அமைந்துள்ளன. இது இல்லாதவிடத்து நாம் உயிர்வாழவே இயலாது போலும்! ஆனால் இதன் விளைவென்ன ? விளைவொன்றே. அதாவது : இழிந்த விகாரங்கள் என்ற நோய்க்கிருமிகளின் கூட்டம் மலியவும், சுதர்மமென்ற ஆரோக்கியம் கெடுகிறது.

## (7) வாழ்க்கைத் தத்துவம்–2 : உடலைமீறிய ஆன்ம உணர்ச்சி

இந்நிலையில் சுதர்மத்தில் உறுதி மட்டும் இருந்தால் போதாது; அதற்கு இன்னும் இரு தத்துவங்களையும் நாம் மனத்தில் கவனமாக நிலைபெறச் செய்யவேண்டும். ஒன்று, 'நான் இந்த அழியக்கூடிய உடலல்லேன், உடல் வெளியிலுள்ள இழிவான வெறும் கூடே' என்பது. இரண்டாவதோ, 'நான் என்றும் இறவாத சிதைவற்ற பரந்த ஆன்மா ஆவேன்' என்பது. இவை இரண்டையும் இணைக்கும்பொழுது ஒரு பூரணத் தத்துவ ஞானம் கிட்டுகிறது.

இத் தத்துவ ஞானம் கீதைக்கு மிகவும் இன்றியமையாததாய்த் தோன்றுவதால் கீதை முதலில் இதைத் தோற்றுவித்து, பின்னரே சுதர்மத்தை நமக்கு அறிமுகப்படுத்துகிறது. தத்துவ ஞானம் பற்றிய இச் சுலோகங்கள் ஆரம்பத்திலேயே எதற்கென்று சிலர் கேட்கிறார்கள். ஆனால் கீதையின் எச் சுலோகங்களையாவது அவை இப்பொழுது இருக்குமிடத்திருந்து வேறு இடத்திற்கு மாற்றுவது அறவே முடியாதென்று சொல்லக்கூடுமானால், இச் சுலோகங்களையே சொல்ல வேண்டும்.

இத் தத்துவ ஞானம் மனத்தில் பதிந்துபோய்விடுமாயின் சுதர்மம் நமக்குச் சிறிதும் பாரமாகவே தோன்றாது; இது மட்டுமல்ல, சுதர்ம மல்லாத வேறு எதைச் செய்வதும் பாரமாகத் தோன்றும். ஆன்மதத்துவத்தின் சிதைவின்மையையும் உடலின் இழிவையும் புரிந்துகொள்ளுதல் அவ்வளவு சிரமமல்ல. ஏனெனில், இவையிரண்டும் உண்மைகள். ஆனால் நாம் இவைகளைப் பற்றிச் சிந்திக்கவேண்டும்; அடிக்கடி இவைகளை மனத்தில் புரட்டிப் புரட்டிப் பார்க்கவேண்டும். இத் தோலுறையின் பெருமையைக் குறைத்து ஆன்மாவுக்குப் பெருமையளிக்கப் பயிலவேண்டும்.

பாருங்கள்! இவ்வுடல் ஒவ்வொரு கணமும் மாறிக்கொண்டே இருக்கிறது. பிள்ளைப் பிராயம், வாலிபம், முதுமை என்ற இச் சக்கரத்திற் சுழலாதார் யார்? நவீன விஞ்ஞானிகளோ ஏழு வருஷங்களில் உடல் முற்றிலும் மாறிவிடுகிறது என்றும் பழைய இரத்தத்தில் ஒரு துளிகூட எஞ்சியிருப்பதில்லை என்றும் சொல்லுகிறார்கள். நம் முன்னோர் பன்னிரண்டு வருஷங்களில் பழைய உடல் மரித்துப் போகிறதென்று நம்பினார்கள். இதனாலேயே பிராயச்சித்தம், தவம், சாத்திரம் ஓதல் ஆகியவற்றிற்குப் பன்னிரண்டு வருஷங்களை எல்லையாக வகுத்திருந்தார்கள். பல வருஷங்களாய்ப் பிரிந்திருந்த மகனொருவன் தன் தாயைப்

போய்ப் பார்த்தபொழுது தாய்க்குத் தன் மகனை அடையாளமே புரி
வில்லை என்பது போன்ற கதைகள் சொல்லக் கேட்டிருக்கிறோம். அப்ப
யானால் கணந்தோறும் மாறுவதும் கணந்தோறும் அழிந்து கொண்டிரு
பதுமான உடல்தான் உன் உருவமா? அல்லும் பகலும் மல மூத்திர
குழாய்கள் ஓடிக்கொண்டே இருப்பதும், உன்னால் எப்பொழுதும் விடா
தேய்த்துத் தேய்த்துச் சுத்தம் செய்யப்பட்டு வந்தும் அழுக்கு
ஆபாசமும் அகலாததுமான அந்த உடல் தானா நீ? அது அசுத்
மானது, நீ அதைக் கழுவுவோன்; அது நோய் மலிந்தது, நீ அதற்கு
சிகிச்சை செய்வோன்; அது எண்சாண் இடத்தை ஆக்கிரமித்திருப்பது
நீ மூவுலகங்களிலும் சஞ்சரிப்பவன்; அது தினமும் மாறுவது, நீ அத
மாறுபாட்டைப் பார்த்துக்கொண்டிருப்பவன்; அது சாகப்போவது,
அதன் சாவுக்கு ஏற்பாடு செய்பவன். உனக்கும் அதற்கும் உள்
வேற்றுமை இவ்வளவு தெளிவாய் இருந்தும் நீ ஏன் இவ்வளவு ஒண்
ஒடுங்கிக்கொண்டு வாழ்கிறாய்? இவ்வுடலுடன் தொடர்புள்ளவ
என்னுடையவரென்று நீ சொல்லுவதேன்? இவ்வுடலின் சாவுக்காக
இவ்வளவு வருந்துவது தான் ஏன்? பகவான், "அடே, உடலின் அழி
வருத்தத்திற்குரிய விஷயமா?" என்று கேட்கிறார்.

உடல் ஆடையைப் போன்றது. பழைய ஆடைகள் கிழிந்து போ
விடுகின்றன; அதனால்தானே புதிய ஆடைகள் அணிய முடிகிறது
ஒரே ஒரு உடல் ஆன்மாவுடன் எப்பொழுதும் ஒட்டிக்கொண்டிருப்ப
என்று ஆகிவிட்டால் ஆன்மாவுக்கு அது ஆபத்தாகிவிடும்; அப்பொழு
வளர்ச்சியே நின்றுவிடும்; ஆனந்தமே அழிந்து போகும்; ஞா
ஒளியே மங்கிப்போகும். ஆகையால் உடலின் அழிவு வருத்தத்திற்குரி
விஷயம் ஆக முடியாது. ஆம், ஆன்மா அழிவுறக் கூடுமாயின் அ
நிச்சயமாய் வருத்தத்திற்குரியதே. ஆனால் அதுவோ அழிவற்றது
என்றும் எப்பொழுதும் தங்கு தடையின்றிப் பெருகிக்கொண்டிருக்கு
அருவியை ஒத்தது. அதன்மீது எத்தனையோ உடல்கள் வந்து மூ
கின்றன, பின் அகலுகின்றன. ஆகையால் உடலின் உறவுச் சூழலி
சிக்கி வருந்துவதும், 'இவை என்னுடையவை; இவை பிறருடையவை
என்ற வேற்றுமை உணர்ச்சியும் பாகுபாடுகளும் முற்றிலும் தவறாகு
பாருங்கள், இப் பிரம்மாண்டம் முழுமையும் ஓர் அழகிய போர்வை
போன்றது. ஓர் அறியாப் பையன் கத்தரிகொண்டு ஓர் அழகி
போர்வையைத் துண்டு துண்டாய் வெட்டுவதைப் போல, இ
வுடலென்ற கத்தரியினால் அவ் விசுவான்மாவைத் துண்டாடுத
எத்தகைய சிறு பிள்ளைத்தனம், ஹிம்சை!

உண்மையில் பிரம்மவித்தை பிறந்த பாரதநாட்டில் இந்தச் சிறிய பெரிய கட்சிகளும் கோஷ்டிகளும் சாதிகளும் நாற்புறமும் மலிந்திருத்தல் பெரிதும் துக்கந்தரும் விஷயமே. மேலும், சாவைக் குறித்த பயம் நம் மனத்தில் புகுந்திருக்குமளவுக்கு வேறு எங்குமே இருக்குமென்று தோன்றவில்லை. நீண்டகால அடிமை வாழ்வின் விளைவே இது என்பதில் ஐயமில்லையாயினும், இதுவே நாம் அடிமைப்பட்டதற்கும் ஒரு காரணம் என்பதையும் மறப்பதற்கில்லை.

'சாவு' என்ற சொல்லே நமக்குப் பிடிப்பதில்லை. சாவு என்ற பேச்சே நமக்கு அசுபமாய்த் தோன்றுகிறது. ஞானதேவர் மிக்க துக்கத்துடன் "மரணமென்ற சொல்லைச் சகியார், இறந்தாலோ அழுவார்"* என்று எழுதுகிறார். மேலும் ஒருவர் இறந்துவிட்டால் எவ்வளவு அழுகை, எவ்வளவு கூப்பாடு! இதை நாம் ஒரு கடமையென்றே கருதுகிறோம் போலும். கூலிக்கு ஆட்களை அமர்த்தி அழச் செய்யும் அளவுக்கு நாம் போய்விட்டோம்! மரணம் நெருங்கி வந்த பிறகும் நாம் அதை நோயாளியிடம் சொல்லமாட்டோம். டாக்டர் ஆள் பிழைக்கமாட்டானென்று சொல்லிப் போன பிறகும் நாம் நோயாளியிடமிருந்து அதை மறைத்தே வைப்போம். டாக்டரும் ஒளிவு மறைவின்றிச் சொல்லாமல், இறுதி மூச்சுவரை, வயிற்றில் மருந்துப் புட்டிகளைக் கவிழ்த்துக்கொண்டேயிருப்பான். இவ்வாறின்றி, உண்மை நிலையைத் தெரிவித்து, தைரியம் கூறி, கடவுளை நினைக்குமாறு செய்வோமாயின் எவ்வளவு உதவியாயிருக்கும்! ஆனால் இத் தாக்குதலினால் சட்டி சிறிது முன்னரே உடைந்து போய்விடுமோவென்ற பயம் நமக்கு! ஆனால் உரிய சமயத்திற்கு முன் இச் சட்டி உடையுமா? மேலும், இரண்டு மணி தாழ்த்தி உடையும் பாண்டம் இரண்டு மணி முந்தியே உடைந்துபோனால் என்னதான் கெட்டுப் போய் விடுமோ? நாம் கடின சித்தர்களாகவோ, அன்பு இல்லாதவர்களாகவோ ஆகிவிடவேண்டும் என்பதல்ல இதன் பொருள். ஆனால் உடற்பற்று அன்பு ஆகாது. ஏன், உடற்பற்றை அகற்றுதவரை உண்மை அன்பே தோன்றாது.

உடற்பற்று அகன்றவுடன் உடல் சேவைக்குரிய கருவியே என்பது புலனாகவும், உடலுக்கு அதற்குரிய மதிப்பும் கிட்டும். ஆனால் இன்றோ நாம் உடலுக்குப் பூசையிடுவதையே நம் இலட்சியமாய்க் கொண்டிருக்கிறோம். நாம் சாதிக்கவேண்டுவது சுதர்மம் இயற்றுகை என்பதையே

* अगा मर हा बोल न साहती ।
आणि मेलिया तरी रडती ॥

மறந்துவிட்டோம். உடலைப் பாதுகாப்பதும் அதற்கு உண்டியளித்து போஷிப்பதும் சுதர்மம் இயற்றவே; நாக்கின் சபலத்தைப் பூர்த்தி செய்வதற்கு அவை தேவையில்லை. தேக்கரண்டியினால் அல்வா எடுத்து பரிமாறினாலும், சோறோ பருப்போ பரிமாறினாலும் தேக்கரண்டிக்கு இன்பமோ துன்பமோ ஏற்படுவதில்லை. இதே நிலையில்தான் நாவு இருக்கவேண்டும். அதற்கு ருசி தெரிய வேண்டுவது அவசியமாயினும் அதனால் அதற்கு இன்பமோ துன்பமோ ஏற்படக்கூடாது. உடலுக்குள்ள குடிக்கூலியை அதற்குச் செலுத்திவிட வேண்டும், அவ்வளவு தான். ராட்டையைக் கொண்டு நூல் நூற்கவேண்டியிருக்கிறது. இதனால் அதற்கு எண்ணெய் போடுதல் அவசியமாகிறது. இதேபோல் உடலிடம் வேலை வாங்கவேண்டியிருப்பதால், எஞ்சினில் கரி போடுவது போல அதில் உணவு போடவேண்டியிருக்கிறது. இவ்வாறு நாம் உடலை உபயோகித்து வருவோமாயின் அது இயற்கையில் இழிந்ததாயினும் அதன் மதிப்பு ஓங்கவும், அதற்குப் பெருமை உண்டாகவும் கூடும்.

ஆனால் நாம் உடலை ஒரு கருவியாய்க் கையாளாது அதிலேயே ஆழ்ந்துபோய் ஆன்மாவைக் குன்றச் செய்துவிடுகிறோம். இதனால் ஏற்கெனவே மதிப்பிற்கு உரியதாகவே இல்லாதிருந்த இவ்வுடல் இன்னும் இழிந்ததாகிவிடுகிறது. இதனாலேயே மகான்கள், "உடலும் உடலின் தொடர்பும் வெறுக்கத்தக்கவை; நாய், பன்றி முதலிய பிராணிகளும் வணக்கத்திற்குரியன" என்று உறுதியுடன் கூறுகிறார்கள். "அப்பா! நீ இவ்வுடலையும் இந்த உடலுடன் தொடர்புள்ளவர்களையும் அல்லும் பகலும் வழிபடாதே. பிறரையும் புரிந்து கொள்ளக் கற்றுக்கொள்" என்று மகான்கள் பரந்த நோக்குப் பெறுமாறு போதிக்கிறார்கள். நாம் நம் நெருங்கிய பந்துமித்திரர்களை யல்லாது மற்றவர்களிடமும் நம் ஆன்மாவை ஒரு சிறிதேனும் கொண்டு செல்லுகிறோமா? 'சீவனுடன் சீவனையும் ஆன்மாவில் ஆன்மாவையும்' கலக்க நாம் ஏதேனும் செய்வதுண்டா? நம் ஆன்மா என்ற அன்னப்புள்ளை இக் கூட்டிற்குப் புறம்பேயுள்ள காற்றை நுகர விடுகிறோமா? 'நம்மவர்' என்று கருதிக் கொண்டிருக்கும் எல்லைக்கு வெளியே சென்று, நாளைப் புதிதாய்ப் பத்து பேரை நண்பர்களாக்கிக்கொள்ளும் எண்ணம் உன் மனத்தில் எப்பொழு தேனும் எழுந்ததுண்டா? இன்று பதினைந்துபேர், நாளை ஐம்பது பேர் என்று இவ்வாறு நான் நட்புச் செய்துகொண்டே போனால், ஒரு நாள் உலகம் முழுமையும் என்னுடையது, நான் உலகத்தைச் சேர்ந்தவன் என்று உணரத் தொடங்குவேன். நாம் சிறையிலிருந்து நம் பந்து மித்திரர்களுக்குக் கடிதங்கள் எழுதுவதில் சிறப்பு என்ன இருக்கிறது

சிறையிலிருந்து விடுபட்டு வெளியேறும் புதிய நண்பனொருவனுக்கு—அரசியல் கைதிக்கல்ல, திருடன் ஒருவனுக்கு—நாம் கடிதம் எழுதுவோமா ?

நம் ஆன்மா வியாபிக்கத் துடித்துக்கொண்டிருக்கிறது. அது உலகமனைத்தையும் அணைய விரும்புகிறது. ஆனால் நாம் அதை அறைக்குள் அடைத்துவிடுகிறோம், கைதியாக்கிவிடுகிறோம். நமக்கு அதுவொன்று இருக்கிறதென்ற நினைவும் இருப்பதில்லை. காலையிலிருந்து மாலைவரை நாம் உடலுக்குப் பணிவிடை செய்வதிலேயே ஈடுபட்டிருக்கிறோம். நமக்கு அல்லும் பகலும், 'என் இவ்வுடல் எவ்வளவு பருத்தது, எவ்வளவு மெலிந்தது?' என்ற எண்ணமொன்றேதான். உலகில் வேறு இன்பமெதுவும் நமக்கில்லை போலும்! உடலின் இன்பத்தையும், உணவின் ருசியையும் மிருகங்களும் நுகர்கின்றன. இப்பொழுது தியாகத்தின் இன்பத்தையும், ருசி மறுப்பின் மகிழ்ச்சியையும், அவை எப்படி இருக்கின்றனவென்று பார்ப்பாயா, மாட்டாயா? உன்னைப் பசி வாட்டிக்கொண்டிருக்கும்போதே பசியால் வாடும் ஒருவனுக்கு உன் கட்டுச் சோற்றை எடுத்துக் கொடுத்துவிடுவதில் எத்தகைய இன்பம் இருக்கிறதென்று பாரேன்! இதன் ருசியை உணரேன்! தாய் குழந்தைக்காகக் கஷ்டம் அனுபவிக்கும்போது அவள் இவ் வின்பத்தை ஓரளவு நுகர்கிறாள். மனிதன் 'தனது' என்று சொல்லித் தன்னைச் சுற்றிக் கோடுகிழித்துக் கொண்டிருப்பதிலும் அவன் அறியாமலே அவனுக்குள்ள நோக்கம், தன் ஆன்மாவை வளர்ப்பதின் இன்பத்தை நுகர்வதேயாகும். ஏனெனில், அதனால் உடலிற் கட்டுண்ட ஆன்மா சிறிது நேரத்திற்கு வெளியே கிளம்புகிறது. ஆனால் இவ் வெளியேற்றம் எத்தகையது? சிறையிலடைபட்டுள்ள கைதி சிறையினறையிலிருந்து அதன் திறந்த வெளிக்கு வருவது போன்றதே. ஆனால் ஆன்மாவுக்கு இதுமட்டும் போதாது, தங்குதடையற்ற இன்பம் வேண்டும்.

மொத்தத்தில், (1) சாதகன் அதர்மம், பரதர்மம் ஆகிய கோணல் வழிகளை விட்டுச் சுதர்மம் என்ற இயற்கையான, சுலபமான வழியில் செல்லவேண்டும்; சுதர்மப் பாதையை அவன் ஒரு பொழுதும் விடலாகாது; (2) உடல் நீரிற் குமிழி போன்றது, எந்த நிமிஷமும் அழியக்கூடியது என்பதை உணர்ந்து அதைச் சுதர்மத்திற்காகப் பயன்படுத்தவேண்டும்; தேவையெழும்பொழுது அதைச் சுதர்மத்தின் பொருட்டே அழியவிடவும் வேண்டும்; (3) ஆன்மாவின் சிதைவின்மை, பரப்பு ஆகியவற்றை எப்பொழுதும் நினைவிலிருத்திக்கொண்டு சித்தத்தி

லிருந்து 'தனது' 'பிறரது' என்ற வேற்றுமையை அகற்றிவி
வேண்டும். வாழ்க்கையின் இம் முக்கியத் தத்துவங்களைப் பகவா
கூறுகிறார். இவைகளின்படி நடந்துவரும் மனிதன் ஒருநாள் மானி
உடலின் மூலமாகவே சச்சிதானந்த பதத்தைப் பற்றும் பேறு பெறுவா
என்பதில் ஐயமில்லை.

## (8) இரண்டையும் இணைப்பது பயனின் துறவு

பகவான் வாழ்க்கையின் தத்துவங்களை என்னவோ சொல்லி வி
டார். ஆனால் தத்துவங்களைச் சொல்லுவதினாலேயே காரியம் நின
வேறாது. கீதையில் வர்ணிக்கப் பெற்றுள்ள இத்தத்துவங்கள் உபநி
தங்களிலும் ஸ்மிருதிகளிலும் ஏற்கெனவே இருப்பவையே. கீன
அவைகளையே மீண்டும் எடுத்துக் கூறிற்று எனில் இதில் கீதைக்கு
சிறப்பு எதுவுமில்லை; அதன் தனிச் சிறப்பு இத்தத்துவங்களை நன
முறையில் கொண்டு வருவது எப்படி என்பதைத் தெரிவிப்பதிலே
அடங்கியிருக்கிறது. இப் பெரிய பிரச்னையைத் தீர்ப்பதிலேயே கீன
யின் திறம் அனைத்தும் அமைந்துள்ளது.

வாழ்க்கையின் தத்துவங்களை நடைமுறைக்குக் கொணருவதற்
உள்ள கலை அல்லது யுக்திக்கே 'யோகம்' என்று பெயர். 'சாங்கிய
என்பதற்குத் தத்துவம் அல்லது சாத்திரம் என்பது பொருள்; 'யோக
என்பதற்குக் கலை என்று அர்த்தம். ஞானதேவர், "யோகிகளுக்
வாழ்க்கைக் கலை கைவந்துளது"* என்று சான்று பகர்கிறார். கீதைய
சாங்கியம், யோகம்—சாத்திரம், கலை—ஆகிய இரண்டும் பொதி
துள்ளன. சாத்திரம், கலை ஆகிய இரண்டின் கூட்டினால் வாழ்க்கையி
அழகு மலர்கிறது. சாத்திரம் மட்டுமாயின் அது வெறும் மன
கோட்டையாகவேதான் இருக்கும். சங்கீத சாத்திரத்தைப் புரிந்
கொண்டுவிட்டபோதிலும் வாயைத் திறந்து பாடும் திறமை இல்லாவிட
நாதப் பிரம்மத்தை நம்மால் உருவாக்க வியலாது. இதனாலேயே
வான் தத்துவங்களுடன் அவைகளின் பயனை அறிய உதவும் கலைன
யும் குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் அக் கலை எது? உடலை இழி
தாய்க் கருதி ஆன்மாவின் அழிவின்மையையும் சிதைவின்மையை
கருத்தில் கொண்டு சுதர்மத்தை அனுஷ்டிக்க உதவும் அந்தக் கலைதா
யாது?

கர்மத்தைச் செய்கிறவர்களுக்கு இருவகை மனோபாவனைகள் இ

* योगियां साधली जीवन-कला

ம். ஒன்று தாம் செய்யும் காரியத்தின் பயனைத் தாம் நிச்சயமாய் யப்போம் என்பது. இதற்கு நமக்கு உரிமையுண்டு. இதற்கு ாருன மற்றொன்று, நமக்கு அனுபவிக்கப் பயன் கிட்டாதெனில் நாம் ாரியமே செய்யமாட்டோம் என்பது. கீதை இவ்விரண்டினின்றும் வருன மூன்றும் பாவனை அல்லது போக்கு ஒன்றைக் கூறுகிறது. தாவது, "காரியத்தைக் கட்டாயம் செய்; ஆனால் பயனிடத்தில் னக்கு உரிமையிருப்பதாய்க் கொள்ளாதே" என்பது. காரியம் செய் வனுக்கு அதன் பயனிடத்தில் நிச்சயமாய் உரிமை உண்டு. ஆனால் அவ்வுரிமையை நீயே விட்டுவிடேன். இரசோகுணம், "பயனுடன் சர்த்தேதான் பெறுவேன்" என்கிறது. தாமோகுணமோ, "விட்டால் ாரியத்தையும் சேர்த்தே விடுவேன்" என்கிறது. இவையிரண்டும் டன்பிறந்தவை. ஆகையால் நீ இவையிரண்டையும் கடந்து மேலே சன்று சுத்தமான சத்துவகுணி ஆகு. அதாவது காரியம் செய், ஆனால் அதன் பயனைத் துறந்துவிடு. பயனைத் துறந்து காரியத்தைச் சய். முதலிலோ, பிறகோ எங்குமே பயனை விரும்பாதே.

கீதை பயனிடத்து ஆசை வையாதே என்று சொல்லும்பொழுதே ாரியத்தைச் சிறப்பாகவும் திறமையுடனும் செய் என்று வற்புறுத்து றது. பயனைக்கருதும் ஒருவனைவிடப் பயனை விரும்பாதவன் செய்யும் ாரியம் சிறந்ததாய்த்தான் இருக்கும். இவ்வாறு எதிர்பார்த்தல் சிதமே. ஏனெனில், பயனை விரும்பும் மனிதன் அதில் ஆவல் கொண் ருப்பதால் பயனைப்பற்றிய கனவுகளில் அவனது நேரமும் ஆற்றலும் ரளவாவது செலவாகும். ஆனால் பயனை விரும்பாத மனிதனது ஒவ் வொரு கணமும் முழு ஆற்றலும் காரியத்திலேயே ஈடுபட்டிருக்கும். ஆற்றுக்கு ஓய்வில்லை; காற்றுக்கு இளைப்பாறுதல் கிடையாது; சூரிய னுக்கோ எப்பொழுதும் ஜொலித்துக் கொண்டிருக்கத்தான் தெரியும். இதேவகையில் பயனைக்கருதாது பணிபுரிபவன் இடையருது பணிபுரிவ தொன்றையேதான் அறிவான். காரியத்திலேயே தொடர்ந்து ஈடுபட்டிருக் கும் இத்தகைய மனிதனது காரியம் சிறந்து விளங்காது வேறு யாருடைய ாரியம் சிறந்து விளங்கும்? மேலும் சித்தத்தின் சமநிலையோ மிக்க ஆற் றல் வாய்ந்த குணமாகும். அது பயனைக்கருதாத மனிதனது பரம்பரைச் சொத்து. வெறும் வெளிப்பகட்டுடன் அமைந்துள்ள வேலைப்பாட்டையே ாருங்கள்; அதில்கூட கைத் திறமையோடு சித்தத்தின் சமநிலையும் சேர்ந்திருக்குமாயின் அவ் வேலைப்பாடு மேலும் நேர்த்தியாய் அமைந்துவிடுதல் வெளிப்படை. இதுவுமன்றி பற்றுள்ளவன், பற்றற் றவன்—பயனைக் கருதுவோன், கருதாதவன்—ஆகியோரின் நோக்கங்

களில் உள்ள வேற்றுமையும் பயனைக் கருதாதவனது காரியத்திற்
அதிகம் உதவுவதாகிறது. பயனைக் கருதுவோன் காரியத்தைச் சுயந
நோக்குடன் பார்க்கிறான். 'எனதே காரியம், எனக்கே அதன் பயன்'
என்ற இப் போக்கு காரணமாகக் காரியத்திலிருந்து அவன
கவனம் சிறிது விலகினால் அதில் அவனுக்குத் தான் நீதிவழியினின்
வழுவியதாய்த் தோன்றுவதில்லை; அதிகமானால், செயல் முறையி
ஏதோ பிழை நேர்ந்துவிட்டதாகவே தோன்றும். ஆனால் பயனை
கருதாத மனிதனுக்கோ தான் செய்யும் காரியத்தினிடம் நியாயம் கூடி
கடமையுணர்ச்சி இருந்துவரும். ஆகையால் அவன் மிக்க கவன
துடன் தான் செய்யும் காரியத்தில் சிறிதும் குறைபாடு நேராது பார்
துக் கொள்வான். இதனால் அவனது காரியம் அதிகக் குறைபா
இன்றி அமையும். எவ்வகையில் பார்த்தாலும் பயனைத் துறத்த
என்பது மிக்க திறமையுள்ளதும் கீர்த்தி தரவல்லதுமான தத்துவ
என்பது தெளிவு. ஆகையால் பயனைத் துறத்தலை 'யோகம்' அல்ல
வாழ்க்கைக் கலை எனல் வேண்டும். பயன் கருதாத பணியை அல்ல
காரியத்தை நாம் விட்டுவிட்டாலும், காரியத்தில் உள்ள இன்ப
அதனால் விளையும் பயனில் இல்லை. தன் காரியத்தைச் செய்துகொண்டே
போகும்பொழுது அதிலேயே ஒன்றிவிடுகிறோமே, அதனை இன்ப வெள்
மென்றே சொல்லவேண்டும். ஓவியனிடம், "சித்திரம் வரையாதே
வரையாதிருப்பதற்காக நீ கேட்கும் பணத்தை வாங்கிக்கொள்" என்
சொல்லுவீர்களானால் அவன் அதற்கு உடன்படான். விவசாயியிட
"வயலுக்குப் போகாதே; மாடு மேய்க்க வேண்டாம்; ஏற்றம் இறை
பதை நிறுத்திவிடு. உனக்கு வேண்டுமளவு தானியம் கொடுக்கிறோம்
என்று சொல்லுங்கள்; உண்மையான விவசாயியாயிருந்தால் அவ
இந்தப் பேரத்திற்கு ஒத்துவரமாட்டான். விவசாயி பொழுது புலர்
ததும் வயற் காட்டிற்குப் போகிறான்; சூரியன் அவனை வரவேற்கிறது
பறவைகள் அவனுக்காகப் பாடுகின்றன; ஆடுமாடுகள் அவனை வளைந்
நிற்கின்றன. அவன் அவைகளை அன்புடன் தடவிக் கொடுக்கிறான்
தான் நட்டு வளர்த்திருக்கும் மரஞ் செடிகளைக் கண்குளிரப் பார்க்கிறான்
இவை அனைத்திலும் ஒரு சாத்துவிக ஆனந்தம் இருக்கிறது. இ
வானந்தமே அக் காரியத்தின் முக்கியமான, உண்மையான பயன்
இதனுடன் ஒப்பிடும் பொழுது அதிலிருந்து விளையும் புறப்பயனுக்
மதிப்பு மிகவும் குறைவே.

கீதை மனிதன் கவனத்தைக் காரியத்தின் பயனிலிருந்து அகற்று
பொழுது இந்த யுக்தியின் மூலம் காரியத்தில் அவனை நூறு மடங்

கக் கவனம் செலுத்தும்படிச் செய்துவிடுகிறது. பயனைக் கருதாத தன் காரியத்தில் ஆழ்ந்து போவதைச் சமாதி நிலை போன்ற ன்றே சொல்லவேண்டும். ஆகையால் அவன் பிறர் பெறும் இன்பத் க் காட்டிலும் பன்மடங்கு அதிக இன்பம் பெறுகிறான். இவ்வாறு துவோமானால் பயன் கருதாது செய்யப்படும் காரியமே பெரிய பயனு ் என்பதை நாம் எளிதில் உணரலாகும். ஞானதேவர், "மரத்தில் ந்தான் பழுக்கிறதே, இனி பழத்தில் வேறு பழம் தோன்றுமா?"* று சரியாய்த்தான் கேட்கிறார். உடல் என்ற இம் மரத்தில் னைக் கருதாது செய்த சுதர்மம் என்ற நேர்த்தியான பழம் உண் னபின் வேறு பயனை எதற்காக விரும்பவேண்டும்? விவசாயி வயலில் ் விதைக்கிறான். பிறகு விளைந்த நெல்லை விற்றுவிட்டுச் சோளக் யை வாங்கித் தின்பதா? இனிய வாழையைப் பயிர் செய்து அதன் யை விற்றுவிட்டு மிளகாய்வற்றலை எதற்கு அரைத்து விழுங்க ண்டும்? தம்பி, வாழைக்கனியையே தின்றால் என்ன? ஆனால் மக்க ்கு இது சம்மதமில்லை. வாழைக்கனி அருந்துவதற்கு அதிர்ஷ்ட ந்தும் அவர்கள் மிளகாய் வற்றலில்தான் அடித்துப் பிடித்துக் ண்டுபோய் விழுகிறார்கள். கீதை, "அப்படிச் செய்யாதே. காரியத் யே சாப்பிடு, காரியத்தையே அருந்து, காரியத்தையே ஜீரணி" று சொல்லுகிறது, அவ்வளவுதான். காரியம் செய்வதிலேயே எல் ் வந்துவிடுகிறது. குழந்தை விளையாடுவதிலுள்ள இன்பத்திற் கவே விளையாடுகிறது. இதனால் அதற்கு தேகப்பயிற்சியின் பயன் னே கிடைக்கிறது. ஆனால் அப் பயனிடத்தில் அதற்குக் கவனம் ப்பதில்லை; அதற்கு இன்பமனைத்தும் அவ்விளையாட்டிலேதான் க்கிறது.

## (9) பயனின் துறவு—இரு உதாரணங்கள்

பக்தர்கள் தம் வாழ்க்கையின் மூலம் இவ் விஷயத்தை நிரூபித்திருக் ர்கள். துகாராமின் பக்தியைப் பார்த்து சிவாஜி மகாராஜருக்கு ரிடம் மிக்க மரியாதை ஏற்பட்டு வந்தது. ஒரு சமயம் அவர் துகா ின் வீட்டிற்குப் பல்லக்கு அனுப்பி அவரை அழைத்து வந்து கௌர க ஏற்பாடு செய்தார். ஆனால் துகாராமுக்கோ தம் வரவேற்பக்காகச் யப்பட்டிருந்த ஏற்பாடுகளைப் பார்த்து மிக்க வேதனையுண்டாயிற்று.

* झाडाला फळें लागतात; परंतु फळाला आणखी कोणतें फळ णार?

அவர் தம் மனத்தில், "என் பக்திக்கா இந்தப் பயன்? நான் இதற்காகவா பக்தி புரிகிறேன்?" என்று சொல்லிக்கொண்டார். பகவான் மதிப்பு, பெருமை, என்ற இப்பயனை அவர் கையில் கொடுத்து அவரைத் தம்மிடமிருந்து அகற்றிக்கொண்டிருப்பதாய் அவருக்குத் தோன்றிற்று.

"என் உள்ளம் உனக்குத் தெரிந்திருந்தும்
என் தொந்தரவு வேண்டாமென்று என்னைத் தள்ளுகிறாயோ?
பாண்டுரங்கா, உன் இச் சூழ்ச்சி படுமோசமானது!"*
என்கிறார்.

"ஆண்டவனே, உனது இவ் வழக்கம் நல்லதல்ல. நீ எனக்கு இந்தக் குன்றிமணியைக் கொடுத்து ஏமாற்றப்பார்க்கிறாயோ? இவன் தொந்தரவையே ஒழித்துக் கட்டிவிடுவோமே என்று நினைக்கிறாய் போலும்! ஆனால் நானும் அற்ப சொற்பமான குருவினிடம் பாடங் கற்றவனல்ல. நான் உன் காலைக் கெட்டியாய்ப் பற்றிக்கொண்டு இருந்து விடுவேன்" என்கிறார். பக்தியே பக்தனது சுதர்மம். பக்தியில் பயனென்ற விரும்பத்தகாத முட்கள் தோன்றாது பார்த்துக்கொள்ளலே அவனது வாழ்க்கைக் கலை.

புண்டலீகனது வரலாறு பயனைத்துறத்தல் என்ற விஷயத்தில் இதனிலும் ஆழ்ந்த இலட்சியத்தைக் காட்டுவது. புண்டலீகன் தன் பெற்றோருக்குச் சேவை செய்துகொண்டிருந்தான். அவன் சேவையைக் கண்டு மகிழ்ந்த பாண்டுரங்கன் அவனுக்குக் காட்சியளிப்பதற்காக ஓடோடியும் வந்தார். ஆனால் புண்டலீகன் பாண்டுரங்கனது வலையிற் சிக்க, தான் செய்துவந்த சேவையை விட மறுத்துவிட்டான். தன் பெற்றோர்க்குச் செய்யும் சேவை அவனுக்கு உள்ளம் கலந்த கடவுள் பக்தியாகவே அமைந்திருந்தது. மகனொருவன் பிறரை அடித்துப் பிடுங்கித் தன் பெற்றோருக்கு இன்பமளித்தாலும், ஒரு தேச பக்தன் பிறநாட்டை வஞ்சித்துத் தன் நாட்டை மேன்மையுறச் செய்ய விரும்பினாலும், இவ் விருவரது மனப் போக்குகளும் பக்தியெனப்படா; அவை பாசமே. புண்டலீகன் இப் பாசத்திற் சிக்கவில்லை. அவன், "என் எதிரில் நிற்கும் இவ்வுருவிலேயே பரமான்மாவின் உருவங்களனைத்தும் அடங்கிவிட்டனவா? அவனது இவ்வுரு தோன்றுவதற்குமுன் சிருஷ்டியே உயிரற்று இருந்தது?" என்றான். அவன் பகவானிடம், "நீங்கள் தாமே எனக்குக் காட்சியளிக்க எழுந்தருளியிருக்கிறீர்கள். ஆனால் நான் 'உம்' தத்து

---

* जाणूनि अंतर। टाळिशील करकर।
तुज लागली हे खोडी। पांडुरंगा बहु कुडी॥

வத்தை ஒப்புவோன். நீங்கள் ஒருவர்தான் பகவானென்று நான் நம்ப வில்லை. எனக்கு நீங்களும் பகவான்தான், இவ்வென் தாய் தந்தை யரும் பகவானே. இவர்களின் பணியில் ஈடுபட்டிருப்பதினால் நான் உங்களைக் கவனிக்க முடியாதிருக்கிறேன். மன்னிக்க வேண்டும்" என்று சொல்லி, பகவான் நிற்பதற்கு ஒரு செங்கல்லை அவர் பக்கம் தள்ளிவிட்டுத் தான் அதே பணிவிடையில் முனைந்து விட்டான். துகாராம் இச் சந்தர்ப்பத்தைக் குறித்து மிகவும் உற்சாகத்தோடும் விநோதமாகவும்,

"என்ன பைத்தியக்கார அன்பு இது,
விட்டலனை நிறுத்தி வைத்ததே!
என்ன முரட்டுத் துணிவிது,
விட்டலன் நிற்கக் கல்லைக் காட்டியதே!"*

என்கிறார்.

புண்டலீகன் உபயோகித்த இந்த 'உம்' தத்துவம் பயனைத் துறப் பதற்குதவும் யுக்தியின் ஒரு பகுதியாகும். பயனைத் துறப்போன் தன் காரியத்திலேயே ஆழ்ந்து ஒன்றிப்போய்விடுகிறான்; அதேவகையில் அவன் போக்கு பரந்ததாயும் தாராளமானதாயும் சமமாயும் அமைகிறது. இதனால் அவன் பல்வேறு தத்துவ ஞானங்களின் வலையில் சிக்குவது மில்லை, தன் தத்துவத்தை விடுவதுமில்லை. 'नान्यदस्तीति वादिनः (நான்யதஸ்தீதி வாதின:)—இது ஒன்றே உண்டு, வேறெதுவும் இல்லை' என்ற வாதத்தையே அவன் எழுப்புவதில்லை. 'இதுவும் சரி, அதுவும் சரிதான்; ஆனால் எனக்கோ இதுதான் சரி' என்ற வகையில் அவனது பணிந்த, உறுதியான போக்கு இருந்துவரும். ஒரு சமயம் இல்வாழ் வான் ஒருவன் ஒரு துறவியை அணுகி, "மோட்சமடைவதற்கு வீடு வாயிலைத் துறத்தல் அவசியமா?" என்று கேட்டான். அதற்குத் துறவி, "இல்லையே, ஜனகரைப் போன்றவர்கள் அரண்மனையில் வாசம் செய்து கொண்டே மோட்சமடைந்திருக்கையில், நீ வீட்டை விடுவதற்கு அவசிய மேது?" என்றார். பிறகு வேறொருவன் துறவியிடம் வந்து, "சுவாமி, வீடுவாயிலை விடாமலே மோட்சம் கிடைக்கக்கூடுமா?" என்று கேட்டான். அதற்குத் துறவி, "யார் அப்படிச் சொல்வது? வீட்டிலிருந்தபடியே எளிதாக மோட்சம் கிட்டுவதானால் சுகர் முதலியோர் வீடு வாயில்களைத் துறந்தார்களே, அவர்கள் மூடர்களா?" என்று கேட்டார். பிறகு அவ்

* कां रे प्रेमें मातलासी। उभे केलें विठ्ठलासी।
ऐसा कैसा रे तूं धीट। मागें भिरकाविली वीट॥

விருவரும் சந்தித்தபொழுது அவர்களுக்குள் பெரிய சண்டையா
விட்டது. ஒருவன் சாமியார் வீடுவாயில்களை விட்டு வெளியேற
சொன்னார் என, மற்றவன் வீடுவாயிலை விடத் தேவையில்லையென்
சொன்னார் என்றான். அப்பொழுது இருவரும் துறவியிடம் வந்தார்கள்
துறவி, "இருவர் சொல்வதும் சரியே. ஒருவரது மனப்போக்கி
படியேதான் அவருக்குரிய வழியும் இருக்கும். ஒருவர் கேட்கும் கேள்
யைப் பொறுத்தே அதன் விடையும் அமையும். வீடு வாயிலைத் துறக்
வேண்டும் என்பதும் உண்மை; துறக்க வேண்டியதில்லை என்பது
உண்மையே" என்றார். இதைத்தான் 'உம்' தத்துவம் என்பத
புண்டலீகனது உதாரணத்திலிருந்து பயனைத் துறத்தல் எவ்வள
தூரம் கொண்டுபோய் விடக்கூடியதென்று தெரிந்துவிடுகிறது. து
ராமுக்கு பகவான் காட்ட விரும்பியதை விடப் புண்டலீகனுக்குக் காட்டி
ஆசை அதிக மயக்கம் விளைவிக்கக் கூடியது. ஆனால் அவன் அதற்கு
மயங்கவில்லை; மயங்கியிருந்தால் அவன் அதிலேயே சிக்கியிருப்பான்
ஆகையால், கருவி இன்னதென்று முடிவு செய்துகொண்டானபின் இ
யில் பகவானது தரிசனம் போன்ற தடை குறுக்கிட்டாலும், அதற்கா
ஏற்ற கருவியை விடாது இறுதிவரைக் காரியம் செய்துகொண்டே போ
வேண்டும். உடல் எஞ்சியிருப்பது சாதனையின் பொருட்டே; பகவ
னுடைய தரிசனம் எங்கே போய்விடுகிறது? அதுதான் கையிலே
இருக்கிறதே! "உன் பக்தியிலேயே என் மனம் தோய்ந்திருக்கையி
என் எங்கும் பரந்த தன்மையை யாரால் பறித்துப் போக இயலும்
இப் பக்தியைப் பெறுவதற்கே இப் பிறவி கிடைத்திருக்கிற
'मा ते संगोऽस्त्वकर्मणि' (மாதே ஸங்கோ஽ஸ்த்வகர்மணி) என்ற கீ
யின் இவ் வாக்குக்குப் 'பற்றற்றுக் காரியம் செய்யுங்கால் அகர்மத்தி
இறுதியான கர்ம முக்தியின், மோட்சத்தின் வாஞ்சையும் கொள்ளாதே
என்னும் அளவுக்குப் பொருள் ஏற்படுகிறது. வாசனையிலிருந்
அல்லது வாஞ்சையிலிருந்து பெறும் விடுதலையே மோட்சம். மோட்
திற்கு வாசனையினால் ஆக வேண்டியது என்ன? பயனைத் துறத்
இவ்வளவு தொலைவை எட்டிவிடும்பொழுது வாழ்க்கைக்கலை பூரண
பெற்றுவிட்டதெனக் கொள்ளலாம்.

## (10) ஆதரிச குருமூர்த்தி

சாத்திரம் சொல்லியாகிவிட்டது. கலையையும் விளக்கியாகிவிட்ட
ஆனால் இவைகளினாலேயே முழுச் சித்திரமும் காணக்கிடைத்துவி
தென்று சொல்ல முடியாது. சாத்திரம் நிர்குணமானது, கலை

சகுணம். ஆனால் சகுணமான ஒன்றும் உருப் பெற்றாலன்றி கண்ணுக்குப் புலனாவதில்லை. நிர்குணமானது காற்றோடு காற்றாய் இருப்பது போலவே சகுணமும் உருவற்ற நிலையில் இருக்கக் கூடும். இதற்கு உபாயம், குணம் உருப் பெற்றிருக்கும் குணியைக் காணுதல். இதனாலேயே, அர்ஜுனன், "ஆண்டவனே, நீங்கள் வாழ்க்கையின் முக்கியத் தத்துவங்களைச் சொல்லிவிட்டீர்கள். அத் தத்துவங்களை அனுஷ்டானத்திற்குக் கொணர உதவும் கலையையும் கூறிவிட்டீர்கள். ஆயினும் இதன் தெளிவான உரு கண்முன் தோன்றவில்லையே. ஆகையால் எனக்கு இப்பொழுது இதற்கு உதாரணம் தாருங்கள்; இதன் வரலாற்றைச் சொல்லுங்கள். அறிவில் சாங்கிய நிஷ்டை உறுதி பெற்றவரது, பயனைத் துறத்தல் என்ற யோகம் ஒவ்வொரு நரம்பிலும் பரவியுள்ளவரது இலட்சணங்களைச் சொல்லுங்கள். நாம் ஸ்திதப் பிரக்ஞர் (நிலைத்த மதியுடையர்) என்போர், பயனைத் துறத்தலின் முழு ஆழத்தைக் காட்டுவோர், கர்ம சமாதியில் ஆழ்ந்து போயிருப்போர், உறுதியின் மாமலை போன்றோர் எப்படிப் பேசுவர், எப்படி அமருவர், அவர் நடப்பதெப்படி? இவைகளையெல்லாம் எனக்குத் தெரிவிக்க வேண்டும். அவர் எப்படி இருப்பார், அதைப் புரிந்து கொள்வதெப்படி என்பதையெல்லாம் சொல்லுங்கள்" என்கிறான்.

இதற்காகப் பகவான் இரண்டாம் அத்தியாயத்தின் இறுதி சுலோகங்கள் பதினெட்டில் ஸ்திதப் பிரக்ஞனது ஆழ்ந்த, உயர்ந்த வரலாற்றை விவரித்திருக்கிறார். இப் பதினெட்டு சுலோகங்களில் கீதையின் பதினெட்டு அத்தியாயங்களின் சாரத்தையே பிழிந்து வைத்துவிட்டாரெனலாம். ஸ்திதப்பிரக்ஞன் கீதையின் இலட்சிய உருவாகும். இச் சொல்லே கீதையின் தனிச் சிறப்பு வாய்ந்த சிருஷ்டி. மேலே ஐந்தாம் அத்தியாயத்தில் ஜீவன்முக்தன், பன்னிரண்டில் பக்தன், பதினான்கில் குணாதீதன், பதினெட்டில் ஞானநிஷ்டன் ஆகியோரின் வருணனை இதே வகையில் வந்திருக்கிறது. ஆனால் ஸ்திதப்பிரக்ஞனது வருணனை இவை அனைத்தினும் அதிக விஸ்தாரமாயும் அதிக விபரங்களோடும் அமைந்துள்ளது. இவைகளில் சித்தனது இலட்சணங்களோடு சாதகனது இலட்சணங்களையும் சொல்லியிருக்கிறார். ஆயிரக்கணக்கான சத்தியாக்ரஹிகள், ஆண்களும் பெண்களும் மாலைப் பிரார்த்தனையில் இவ்விலட்சணங்களை ஓதுகிறார்கள். ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு வீட்டிலும் இவை அமையுமாறு செய்ய இயலுமானால் எவ்வளவு ஆனந்தமாய் இருக்கும்! ஆனால் முதலில் நம் உள்ளங்களில் பதிந்துவிடின் பின் வெளியிலும் தாமே பரவிவிடும். தினமும் பாராயணம்

செய்யும் ஒன்று கிளிப்பாடமாகிவிடுமாயின் அது சித்தத்தில் பொறிக்கப் படுவதற்கு மாருக மறைந்து போகும். ஆனல் இக் குறைபாடு தினமும் பாராயணம் செய்வதால் விளைவதன்று, பாராயணம் செய்வதைச் சிந்தியாமையினுல் விளைவதே. தினந்தோறும் பாராயணம் செய்வதோடு சிந்திக்கவும் ஆன்ம சோதனை புரியவும் வேண்டும்.

ஸ்திதப்பிரக்ஞன் என்றல் நிலைத்த மதியுடையன் என்பது பொருள். இது அவன் பெயரிலிருந்தே வெளியாகிறது. ஆனல் புல னடக்கம் இல்லாதபொழுது மதி எப்படி ஒரு நிலையிலிருக்கும்? ஆகை யால் ஸ்திதப்பிரக்ஞன் புலனடக்கமே உருவானவன் என்று சொல்லப்பட் டிருக்கிறது. மதி ஆன்மாவில் ஆழ்ந்தும், புலன்களும் பொறிகளும் மதிக்கு அடங்கியும் இருத்தல் என்பதே புலனடக்கம் என்பதின் பொருள். ஸ்திதப்பிரக்ஞன் எல்லாப் புலன்களுக்கும் கடிவாளம் பூட்டி அவைகளைக் கர்மயோகத்தில் ஈடுபடுத்துகிறன். புலன்களென்ற எருதுகளைக் கொண்டு அவன் பயன் கருதாச் சுதர்மம் இயற்றுகை என்ற விவசாயத் தைச் சிறப்பாய்ச் செய்வித்துக்கொண்டு, இழுத்து விடும் ஒவ்வொரு மூச்சையும் பரமார்த்தத்தில் பயன்படுத்துகிறன்.

புலனடக்கம் என்னும் இது எளிதல்ல. இந்திரியங்களிடம் வேலையே வாங்காதிருத்தல் ஒருக்கால் எளிதாயிருக்கக் கூடும். மௌனம், உபவாசம் ஆகியவை அவ்வளவு சிரமமானவையல்ல. இதற்கு மாருக, புலன்களை அவைகளின் இஷ்டம்போல் விட்டுவிடுதல் என்பதோ எல்லோருக்கும் பழக்கமானதொன்று. ஆனல் ஆமை ஆபத் துள்ளவிடங்களில் தன் அவயவங்களை யெல்லாம் உள்ளே இழுத்துக் கொண்டு, அச்சமில்லாத விடத்தில் அவைகளைப் பயன்படுத்துவதைப் போல விஷய போகங்களிலிருந்து புலன்களை இழுத்துக்கொள்ளலும் பாரமார்த்திகப் பணியில் அவைகளைத் தகுந்த முறையில் உபயோகித் தலும் என்ற இப் புலனடக்கம் சிரமமானது. இதற்கு மிகுந்த முயற்சி தேவை, ஞானமும் வேண்டும். ஆனல் இதெல்லாம் செய்தும் அது எப்பொழுதும் நன்கு கைகூடும் என்று சொல்வதற்கில்லை. அப்படியானல் நாம் நம்பிக்கையை இழந்துவிடுவதா? வேண்டாம். சாதகன் ஒருபொழுதும் நம்பிக்கையை இழக்கக் கூடாது. அவன் சாதனைக்குரிய எல்லா யுக்திகளையும் கையாண்டு பார்க்கவேண்டும். பிறகும் குறைபாடிருக்குமேல் அதில் பக்தியைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். மிகவும் மதிப்பிற்குரிய இந்த யோசனையைப் பகவான் ஸ்திதப்பிரக்ஞனுக்குரிய இலட்சணங்களில் தந்திருக்கிறர். ஆம், அவர் தந்திருப்பது பொறுக்கியெடுத்த சில சொற்களிலேயே ஆகும். ஆனல்

வண்டி வண்டியாய்ச் செய்யப்படும் சொற்பொழிவுகளைவிட அதற்குள்ள மதிப்பு அதிகம். ஏனெனில், பக்திக்கு இன்றியமையாத தேவையிருக்குமிடத்திலேயே அது குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஸ்திதப்பிரக்ஞனது இலட்சணங்களை நான் இன்று இங்கே விஸ்தாரமாய் விவரிக்கப் போவதில்லை. ஆனால் நாம் நம் சாதனைகள் அனைத்திலும் பக்திக்குள்ள நிச்சயமான இடத்தை மறவாமல் இருக்கவேண்டும் என்பதற்காகவே அதில் கவனம் செலுத்தச் செய்தேன். பூரண ஸ்திதப்பிரக்ஞனாய் இவ்வுலகில் யார் இருந்திருக்கிறார் என்பது கடவுளுக்குத்தான் தெரியும். ஆனால் சேவையில் ஈடுபட்டு நிற்கும் ஸ்திதப்பிரக்ஞனுக்கு உதாரணம் என்ற வகையில் புண்டலீகனது உருவம் எப்பொழுதும் என் கண்முன் தோன்றிக் கொண்டேயிருப்பதை நான் உங்களுக்கும் தெரிவித்துவிட்டேன்.

சரி, இப்பொழுது ஸ்திதப்பிரக்ஞனது இலட்சணங்கள் பூர்த்தியாகி விட்டன. இரண்டாம் அத்தியாயமும் முடிவுற்றது.

(நிர்குணம்) சாங்கிய புத்தி + (சகுணம்) யோக புத்தி + (உருவுள்ளது) ஸ்திதப்பிரக்ஞன்



சேர்ந்தது
பூரண வாழ்க்கைச் சாத்திரம்

இதிலிருந்து பிரம்ம நிர்வாணம் அல்லது மோட்சம் தவிர வேறு என்ன பயன் கிட்டக் கூடும்?

ஞாயிறு, 28-2-'32

## மூன்றும் அத்தியாயம்

# கர்ம யோகம்

### (11) பயனைத்துறப்போன் அளவிலாப் பயன்பெறுவான்

சகோதரர்களே, நாம் இரண்டாம் அத்தியாயத்தில் வாழ்க்கைச் சாத்திரம் முழுவதிலும் நோக்கைச் செலுத்தினோம். இப்பொழுது இம் மூன்றும் அத்தியாயத்தில் இதே வாழ்க்கைச் சாத்திரத்தை விளக்க வேண்டும். முதலில் நாம் தத்துவங்களைக் குறித்துச் சிந்தித்தோம். இப்பொழுது அவைகளை விவரமாய் ஆராயப் போகிறோம். சென்ற அத்தியாயத்தில் கர்மயோகத்தை விவரித்தோம். கர்மயோகத்தில் உள்ள முக்கியமான விஷயம் பயனைத் துறத்தலாகும். கர்மயோகத்தில் பயனைத் துறத்தல் என்பது என்னவோ இருக்கிறது; அதனால் பின் பயனே கிட்டுமோ கிட்டாதோவென்ற கேள்வி எழுகிறது. ஆகையால் மூன்றும் அத்தியாயத்தில் கர்மத்தின் பயன்களைத் துறப்பதனால் அவற்றை இழப்பதற்கு மாறாக, கர்மயோகி அளவிலடங்காப் பயன் பெறுகிறானென்று சொல்லுகிறார்.

இங்கே எனக்கு இலட்சுமி தேவியின் கதை நினைவுக்கு வருகிறது. அவருக்குச் சுயம்வரம் நடந்தது. தேவர், அசுரர் அனைவரும் பேராவ லுடன் வந்திருந்தார்கள். இலட்சுமி தேவி தாம் கொண்டிருந்த விரதத்தை முதலில் வெளியிடவில்லை. அவர் சுயம்வர மண்டபத்தில் வந்து, "என்னிடம் விருப்பமில்லாதவருக்கே நான் மாலை சூட்டுவேன்" என்றார். அவர்கள் அனைவரும்தான் ஆசை பிடித்தவர்களாயிற்றே! ஆகவே இலட்சுமி தேவி ஆசையற்ற வரனைத் தேடத் தொடங்கினார். இதற்குள் ஆதிசேஷன்மீது அமைதியாய்ப் பள்ளிக்கொண்டிருக்கும் விஷ்ணுபகவானது உருவம் அவர் கண்முன் தோன்றிற்று; அவர் கழுத்தில் மாலையைச் சூட்டிவிட்டு இன்றுவரை அவருக்குப் பாத சேவை புரிந்தபடியே வீற்றிருக்கிறார். 'தன்னை விரும்பாதவருக்கு இலட்சுமி தேவி அடிமை ஆகிறார்.'* இதுவல்லவோ விசேஷம்!

சாதாரண மனிதன் தன் பயனைச் சூழ முள்வேலி அமைக்கிறான்; இதனால் அவன் கிடைக்க விருக்கும் அளவிலாப் பயனை இழந்துவிடு கிறான். உலக வாழ்வில் உழலும் மனிதன் கணக்கிலாக் காரியம் செய்து அற்பப் பயனை அடைகிறான். ஆனால் கர்மயோகியோ சிறிதே காரியம் செய்தும் அளவிலடங்காப் பயன் பெறுகிறான். இவ் வேற்றுமை ஒரு மனோபாவனை காரணமாக ஏற்படுவது. டால்ஸ்டாய் ஓர் இடத்தில்,

---

* न मागे तयाची रमा होय दासी ।

"மக்கள் ஏசுநாதரது தியாகத்தை வெகுவாய்ப் புகழ்கிறார்களே, ஆனால் உலக வாழ்விலுள்ள இம் மக்கள் பிரதி தினமும் தம் இரத்தம் சுண்ட எவ்வளவு ஓடியாடி உழைக்கிறார்கள்! இரண்டு கழுதைச் சுமையை முதுகிலே தாங்கிக்கொண்டு வளையவரும் இவ்வுலகில்வாழ் மக்களுக்கு ஏசுநாதரைவிட எவ்வளவு அதிகக் கஷ்டமும் அவமானமும் ஏற்படுகின்றன! இதில் பாதியளவாவது பகவானுக்காகப் பாடுபடுவார்களாயின் உண்மையில் இவர்கள் ஏசுவையும் விஞ்சிவிடுவார்களே!" என்று சொல்லியிருக்கிறார்.

உலக வாழ்விலுள்ள மனிதனது தவம் உண்மையில் பெரிது; ஆனால் அது இழிந்த பயன்களைக் கருதிச் செய்யப்படுவது. வாசனைக்கு ஏற்றவாறே பயனும் கிடைக்கும். நம் பொருளுக்கு நாம் அளிக்கும் மதிப்பைவிட அதிக மதிப்பு உலகில் ஏற்படாது. சுதாமா (குசேலர்) அவலுடன் பகவானைக் காணப் போனார். அவ்வவலின் மதிப்பு ஒரு சல்லிகூட இராது. ஆனால் சுதாமாவுக்கு அது விலை மதிக்க வொண்ணாததாய்த் தோன்றிற்று. ஏனெனில் அதில் அவரது பக்தி கலந்திருந்தது; அதில் மந்திரம் ஏறியிருந்தது; அதன் ஒவ்வொரு துணுக்கிலும் பக்தி பாவனை தோய்ந்திருந்தது. பொருள் இழிந்ததாயிருந்தபோதிலும் மந்திரத்தினால் அதன் மதிப்பு, அதன் ஆற்றல் அதிகமாகிவிடுகிறது. நோட்டின் எடை எவ்வளவு இருக்கும்? அதை அடுப்பில் கொளுத்திப் போட்டால் ஒரு துளி நீரைக் காய்ச்சவும் அது உதவாது. ஆனால் அதன் மீது ஒரு முத்திரை போட்டிருக்கிறதே, அதனால் அதற்கு மதிப்பு ஏற்பட்டுவிடுகிறது.

கர்மயோகத்திலுள்ள விசேஷம் அனைத்தும் இதுவே. கர்மத்தை நோட்டென்றே எண்ணிக் கொள்ளுங்கள். பாவனை என்ற முத்திரைக்கு மதிப்புண்டேயன்றி, கர்மமென்ற காகிதத் துண்டுக்கு மதிப்பில்லை. ஒரு வகையில் நான் இவ்வாறு விக்கிரக வழிபாட்டின் இரகசியத்தையே சொல்லிக்கொண்டிருக்கிறேன் எனலாம். விக்கிரக வழிபாடு பற்றிய கருத்தில் மிக்க அழகு பொதிந்திருக்கிறது. இவ் விக்கிரகத்தை யார் சிதைக்க முடியும்? இவ் விக்கிரகம் தொடக்கத்தில் ஒரு வெறும் கல் துண்டுதான். நான் இதில் உயிரைப் புகுத்தினேன், என் பாவனையைச் சேர்த்தேன். இப் பாவனையை எவரேனும் துண்டாட முடியுமா? கல்லை உடைத்துத் தகர்க்க முடியுமேயன்றி பாவனையை ஏதும் செய்ய வியலாது. நான் என் பாவனையை விக்கிரகத்திலிருந்து அகற்றும் பொழுதுதான் கல் எஞ்சி நிற்கும்; அப்பொழுதுதான் அதை உடைத்துத் தகர்க்க இயலும்.

கர்மம் என்பதற்கு கல் அல்லது காகிதத்துண்டு என்பது பொருள். என் தாய் ஒரு காகிதத் துண்டில் கோணல் மாணலாக இரண்டு மூன்று வரிகள் எழுதி அனுப்பியிருக்க, வேறொருவர் ஐம்பது பக்கங்களில் அவருக்குத் தோன்றியதை யெல்லாம் வியாசம்போன்று எழுதி அனுப்பினுர். இப்பொழுது இவை இரண்டினுள் எதற்கு மதிப்பு அதிகம்? தாயின் அந்தச் சில வரிகளிலுள்ள பாவத்திற்கு உள்ள மதிப்பு அளவிட முடியாதது; அது புனிதமானது. இதற்கும் அந்தக் காகிதக் கத்தைக்கும் ஒப்புவமையே இல்லை. காரியத்தில் உள்ளக்கனிவு இருக்க வேண்டும், பாவனையிருக்கவேண்டும். நாம் வேலையாளின் வேலைக்கு ஒரு மதிப்பை இட்டு அவனுக்குக் கூலி கொடுத்துவிடுகிறோம். ஆனால் தக்ஷிணை கொடுப்பது இப்படியல்ல. தக்ஷிணையை நீரூற்றி நனைத்துக் கொடுப்பது வழக்கம். தக்ஷிணையின் விஷயத்தில் எவ்வளவு கொடுத்தோமென்ற கேள்வியே எழுவதில்லை. ஆனால் அதில் நைப்பு இருக்கிறதா, இல்லையா என்பதே முக்கியமாய் கவனிக்கப்படுவது வழக்கம். மனுஸ்மிருதியில் ஒரு விநோதமான விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு சீடன் பன்னிரண்டு வருஷம் குருகுல வாசம் செய்து மிருகத்திலிருந்து மனிதனானன். இப்பொழுது அவன் குருதக்ஷிணையாக எதைக் கொடுப்பது? பண்டைக் காலத்தில் முன்கூட்டியே சம்பளம் வாங்கிக்கொள்ளும் வழக்கம் இல்லை; பன்னிரண்டு வருஷம் படித்தான பிறகு குருவுக்குக் கொடுக்கவேண்டியதைக் கொடுப்பதுண்டு. மனு, "குருவுக்குக் கொஞ்சம் இலையோ, பூவோ, ஒன்றிரண்டு விசிறிகளோ, மிதியடியோ, நீர்ச்செம்போ கொடு" என்கிறார். இதை நீங்கள் வேடிக்கையாகச் சொன்னதென்று எண்ணவேண்டாம். ஏனெனில் கொடுக்க வேண்டியதைச் சிரத்தையின் அறிகுறியாய்க்கருதிக் கொடுக்க வேண்டும். ஒரு பூவின் எடை என்ன இருக்கப் போகிறது? ஆனால் அந்தப் பக்திப் பாவனை பிரம்மாண்டத்திற்கு நிகரான எடை யுடையது.

"ருக்மிணி ஒரு துளசி இலையைக் கொண்டு
கிரிதாரியாம் பிரபுவை எடை போட்டாள்."

சத்தியபாமையின் மணுக் கணக்கான நகைகளினால் பயன் இல்லை. ஆனால் பக்தி நிறைந்த ஒரு துளசி இலையை ருக்மிணி தராசின் தட்டில் இட்டவுடன் எல்லாம் சரியாகிவிட்டதாம். அந்தத் துளசி இலை மந்திரம் ஏறிய இலை, சாதாரண இலை அல்ல. கர்மயோகியின் காரியமும் இத்தகையதே.

இரண்டு மனிதர்கள் கங்கையில் நீராடப் போகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அவர்களுள் ஒருவன், "ஜனங்கள் கங்கை,

கங்கையென்று கதறுகிறார்களே; அதில் அப்படி என்ன இருக்கிறது? இரண்டு பங்கு ஹைடிரஜன் (நீரகம்), ஒரு பங்கு ஆக்ஸிஜன் (பிராண வாயு); இந்த இரண்டு வாயுக்களையும் சேர்த்து விட்டால் கங்கை (நீர்) கிடைத்துவிடுகிறது! இதற்கு அதிகமாய் அதில் அப்படி என்ன இருக்கிறது?'' என்று சொல்லுகிறான். மற்றவனோ, "விஷ்ணு பகவானது பாத கமலங்களிலிருந்து இவள் தோன்றி, சங்கரனது ஜடாமகுடத்தில் வாசம் செய்கிறாள். ஆயிரக்கணக்கான பிரம்ம ரிஷிகளும் ராஜரிஷிகளும் இவள் கரையில் தவம் புரிந்திருக்கிறார்கள். இவள் கரையில் நிகழ்ந்துள்ள புண்ணியக் காரியங்களுக்கு அளவில்லை. ஆகா, எவ்வளவு புனிதமானவள் என் கங்கைத்தாய்!'' என்கிறான். இந்தப் பாவனையினால் ஆட்கொள்ளப்பட்ட அவன் கங்கையில்போய் நீராடுகிறான். அந்த நீரக - பிராணவாயுப் பேர்வழியும் அதில் முழுக்குப் போடுகிறான். உடல் துப்புரவு என்ற பயன் இருவருக்குமே கிட்டிவிட்டது. கங்கையில் ஓர் எருது போய் விழுந்தால் அதன் உடலும் துப்புரவாகிவிடும்; அதன் உடல் அழுக்கு அகன்று விடும். ஆனால் மனத்தின் மாசைக் கழுவுவது எப்படி? ஒருவனுக்கு உடல் துப்புரவென்ற இழிந்த பயன் கிட்ட, மற்றவனுக்கோ அதோடு சித்தசுத்தியென்ற மதிப்பிட வியலாத பயனும் கைகூடிற்று.

ஸ்நானம் செய்துவிட்டுச் சூரிய நமஸ்காரம் செய்பவனுக்கு உடற்பயிற்சி செய்தலின் பயன் கிடைக்கவே செய்கிறது. ஆனால் அவன் நமஸ்காரம் செய்வது ஆரோக்கியத்தின் பொருட்டல்ல, வழிபாடு என்று கருதியேயாகும். இதனால் அவன் உடல் ஆரோக்கியம் அடைவதுடன் அவனது அறிவின் ஒளியும் ஓங்குகிறது. ஆரோக்கியத்தோடு கற்பனைத் திறனும் மேதையும் அவனுக்குச் சூரியநாராயணரிடமிருந்து கிடைக்கின்றன.

காரியம் என்னவோ அதுவேதான்; ஆனால் பாவனை வேறுபாட்டினால் அதில் வேற்றுமை தோன்றிவிடுகிறது. பாரமார்த்திகனுடைய காரியம் ஆன்மீக வளர்ச்சிக்கு உதவ, சம்சாரியின் காரியம் ஆன்மாவுக்குத் தளையிட்டுவிடுகிறது. கர்மயோகி ஒரு விவசாயியாயிருந்தால் அவன் விவசாயத்தைச் சுதர்மமாய்க் கருதிச் செய்வான். இதனால் அவன் வயிறு என்னவோ நிச்சயமாய் நிரம்பும். ஆனால் அவன் தன் வயிற்றுக்காகவென்றே காரியம் செய்வதில்லை. அவன் கொள்ளும் உணவை, விவசாயம் செய்வதற்குத் தகுந்ததாய் உடல் இருந்துவர உதவும் ஒரு சாதனமாகவே கருதுவான். சுதர்மம் அவனது இலட்சியமும் உணவு அதற்குரிய கருவியும் ஆயின. ஆனால் வேறொரு விவசா

யிக்கோ தன் வயிற்றை நிரப்புவதே குறிக்கோளாயிருக்க, விவசாய மென்ற சுதர்மம் அதற்குதவும் கருவியாய் இருக்கும். இவ்வாறு இவை ஒன்றுக்கொன்று மாறுபட்ட நிலைகளாம்.

இரண்டாம் அத்தியாயத்தில் ஸ்திதப்பிரக்ஞனது இலட்சணங்களை விவரிக்கையில் இவ்விஷயம் விஞேதமான முறையில் கூறப்பட்டிருக்கிறது. பிறர் விழித்துக்கொண்டிருக்கையில் கர்மயோகி தூங்கிக்கொண்டிருக்கிறன். மற்றவர் தூங்குகையிலோ கர்மயோகி விழித்துக்கொண்டிருக்கிறன். நாம் வயிற்றுப் பாட்டுக்காக விழித்துக்கொண்டிருப்போமாயின் கர்மயோகி தன் பொழுதில் ஒரு கணமும் வீணுகக்கூடாது என்று விழிப்புடனிருப்பான். அவன் சாப்பிடுவதும் நிர்ப்பந்தத்திஞலேயே. இவ் வயிற்றுச் சாலில் ஏதாவது போட்டாக வேண்டுமே என்பதற்காகவே அவன் எதையும் உண்பான். சம்சாரிக்கு, உலக வாழ்வில் உழலுபவனுக்கு உணவு கொள்வதில் ஆனந்தம் உண்டாக, யோகிக்கோ அதில் கஷ்டம் ஏற்படுகிறது. இதஞல் அவன் சுவைத்துச் சுவைத்து எதையும் உண்ணமாட்டான். எதையும் அடக்கமாக உட்கொள்வான். ஒருவனுக்கு இரவாயிருப்பது மற்றவனுக்குப் பகல்; ஒருவனுக்குப் பகலாயிருப்பது மற்றவனுக்கு இரவு. அதாவது, எதில் ஒருவனுக்கு ஆனந்தமோ அதில் மற்றவனுக்குத் துக்கமும், எதில் ஒருவனுக்குத் துக்கமோ அதில் மற்றவனுக்கு ஆனந்தமும் ஏற்படுகிறது. உலகஜீவி, கர்மயோகி ஆகிய இருவரின் காரியங்களும் ஒன்றுபோல இருந்தபோதிலும் கர்மயோகியினிடமுள்ள சிறப்பு, அவன் பயனிடம் பற்றில்லாது காரியத்தில் ஈடுபடுவதாகும். உலகஜீவியைப்போல யோகியும் உண்பான், அருந்துவான், உறங்குவான். ஆஞல் அவைபற்றிய அவனது பாவனை வேருயிருக்கும். இதஞலேயே கீதையில் இன்னும் பதிஞறு அத்தியாயங்கள் எஞ்சியிருக்கையில், ஆரம்பத்திலேயே ஸ்திதப் பிரக்ஞனது அடக்கமான உருவம் நமக்குக் காட்டப்பட்டிருக்கிறது.

உலகஜீவி, கர்மயோகி ஆகிய இருவரின் காரியங்களின் ஒற்றுமை வேற்றுமைகள் உடனே நமக்குத் தெளிவாகி விடுகின்றன. கர்மயோகி பசுப் பாதுகாப்புச் செய்துகொண்டிருப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். அதை அவன் எந்த நோக்குடன் செய்வான்? கோ சேவையிஞல் சமூகத்திற்குத் தேவையான பால் கிடைக்கும், பசுவை ஒரு காரணமாகக் கொண்டு, மனிதனிலும் இழிந்த ஜீவப் பிராணிகளுடன் அன்புத் தொடர்பு கொள்ளலாம் என்பது அவனது பாவனையாயிருக்குமே யல்லாது தனக்கு ஊதியம் கிடைக்கும் என்பது அவன் எண்ணமாயிராது. ஊதியம் எங்கும் போய்விடப்போவதில்லை; ஆஞல் உண்மை ஆனந்தம்,

உண்மைச்சுகம் இந்தத் தெய்வீக பாவனையிலேயே அடங்கியிருக்கிறது.

கர்மயோகியின் காரியம் அவனை இந்தச் சிருஷ்டி முழுவதுடனும் ஒருமைப்பாடு கொள்ளுமாறு செய்கிறது. துளசிச் செடிக்குத் தண்ணீர் ஊற்றுது உணவு கொள்ளாமை தாவர சிருஷ்டியுடன் நமக்கு அன்புப் பிணிப்பை உண்டாக்குகிறது. 'துளசியைப் பட்டினி போட்டுவிட்டு நான் எப்படி முதலில் சாப்பிடுவேன்?' என்ற இவ்வகையில் பசுவுடனும் தாவரங்களுடனும் ஒருமைப்பாடு ஏற்படுத்திக்கொண்டு சகல சிருஷ்டியுடனும் நாம் ஒன்றிப்போய்விட வேண்டும். மகாபாரத யுத்தத்தில் பொழுது சாய்ந்ததும் எல்லோரும் சந்தியாவந்தனம் செய்யப் போய்விட, கிருஷ்ணபகவான் ரதத்தின் குதிரைகளை அவிழ்த்துவிட்டு, அவைகளுக்குத் தண்ணீர் காட்டி, கொள்ளு வைத்து, உடலைத் தேய்த்து, உடலிலுள்ள உண்ணிகளை அகற்றுகிறார். இச் சேவையில் பகவானுக்கு எவ்வளவு இன்பம் தெரியுமா? கவிக்கு அதை வர்ணிப்பதில் அலுப்புச் சலிப்பே தோன்றவில்லை. தம் பீதாம்பரத்தின் முந்தாணியில் கொள்ளும் பொட்டும் எடுத்துக்கொண்டு குதிரைகளுக்குக் கொடுக்கும் அந்தப் பார்த்தசாரதியின் உருவை உங்கள் கண் முன் நிறுத்தி கர்ம யோகத்தினுல் விளையும் இன்பத்தைக் கற்பனையிலேயே அனுபவியுங்கள்! ஒவ்வொரு காரியமும் உயர்ந்த பாரமார்த்திகக் காரியமே. கதர் வேலையையே எடுத்துக் கொள்ளுங்கள். தோள்மீது கதர் மூட்டையைச் சுமந்து கொண்டு தெருத்தெருவாய்ச் சுற்றுகிறவன் அலுத்துப் போகமாட்டானு? மாட்டான். ஏனெனில், 'நாட்டில் கோடிக்கணக்கான என் சகோதர சகோதரிகள் உணவும் உடையும் இன்றி வாடுகிறார்களே; அவர்களுக்குக் கால்வயிற்றுக் கஞ்சியாவது ஊற்றவேண்டுமே!' என்ற எண்ணத்தில் அவன் வேறு எதையும் நினைப்பதில்லை. அவன் ஒரு கஜம் கதர் விற்பதின் மூலம் தன்னைத் தரித்திரநாராயணர் அனைவருடனும் இணைத்துக் கொண்டு விடுகிறான்.

## (12) கர்மயோகத்தின் பல்வேறு பயன்கள்

பயனைக் கருதாத கர்மயோகத்திற்கு அற்புதமான ஆற்றலுண்டு. இத்தகைய காரியத்தினுல் தனி மனிதனுக்கும் சரி, சமூகத்திற்கும் சரி, பெருத்த நன்மை விளையும். சுதர்மத்தை அனுஷ்டிக்கும் கர்ம யோகியின் உலக வாழ்க்கை நடந்து வருவதோடு, அவன் எப்பொழுதும் செயலிலேயே ஈடுபட்டிருப்பதால் அவனுடைய உடல் நோய் நொடியின்றிச் செம்மையாயிருக்க, அவனது இக் காரியத்தின் பயனுய் அவன்

அங்கமாயிருந்துவரும் சமூகத்தின் அன்றாட நிர்வாகமும் சிறப்பாய் நடந்துவரும். கர்மயோகியான விவசாயி பணம் அதிகமாய்க் கிடைக்கும் என்பதற்காகக் கஞ்சாவோ புகையிலையோ பயிரிடமாட்டான். ஏனெனில், அவன் தான் செய்யும் காரியத்தைச் சமூகத்தின் நன்மையோடு பொருத்திப் பார்ப்பான். சுதர்மமான காரியம் சமூகத்திற்கு நன்மை பயப்பதாய்த்தான் இருக்கும். தன் தொழிலென்ற காரியம் சமூகத்திற்கு நன்மை பயப்பதாகவே இருக்க வேண்டுமென்று நினைக்கும் வியாபாரி விதேசித் துணியை ஒரு பொழுதும் வாங்கி விற்கமாட்டான்; அவன் செய்யும் வியாபாரம் சமூகத்திற்கு நன்மை விளைப்பதாயிருக்கும். தம்மை மறந்து தம்மைச் சூழவுள்ள சமூகத்துடன் ஒன்றி வாழும் கர்மயோகிகள் தோன்றும் சமூகத்தில் ஒழுங்கும் செல்வமும் சமாதானமும் நிலவும்.

கர்மயோகி புரியும் காரியத்தின் விளைவாய் அவனது வாழ்க்கை நடப்பதோடு, அவனது உடலும் அறிவும் ஒளிபெற்று விளங்க, சமூகத்திற்கும் நன்மை விளையும். இவ்விரு பயன்களைத் தவிர சித்த சுத்தியென்ற பெரும் பயனும் அவனுக்குக் கிட்டும். ‘कर्मणा शुद्धिः’ (கர்மணா ஶுத்தி:) என்று சொல்லப்பட்டிருக்கிறது. காரியம் சித்த சுத்திக்கு ஒரு சாதனமாகும். ஆனால் அது எல்லோரும் செய்யும் சாதாரணமான காரியமல்ல. கர்மயோகி புரியும் மந்திரம் ஏறிய காரியத்தினாலேயே சித்த சுத்தி ஏற்படும். மகாபாரதத்தில் துலாதாரன் என்ற வைசியன் கதை வருகிறது. ஜாஜலி என்ற பிராமணன் ஒருவன் துலாதாரனிடம் ஞானம் பெறுவதற்காகப் போகிறான். துலாதாரன் அவனிடம், “தம்பி, இந்தத் தராசின் கோலை எப்பொழுதும் நேராய்ப் பிடிக்கவேண்டி யிருக்கிறது” என்கிறான். இப் புறக் காரியத்தைச் செய்து செய்து துலாதாரனது மனமும் நேரியதாய், கபடமற்றதாய் ஆகிவிட்டது. ஒரு சிறிய குழந்தை கடைக்கு வந்தாலும் சரி, விவரம் தெரிந்த வாலிபன் வந்தாலும் சரியே, அவனது துலாக்கோல் ஒரே மாதிரி நிற்கும்; மேலே எழவோ, கீழே இறங்கவோ செய்யாது. செய்யும் தொழிலினால் மனம் மாறுபடவே செய்கிறது. கர்மயோகியின் காரியத்தை ஒருவகை ஜபம் என்றே கருதலாம். அதனால் அவனுக்குச் சித்தசுத்தி ஏற்படவும், தூய சித்தத்தில் ஞானத்தின் விம்பம் பிரதிபலிக்கிறது. தம் பல்வேறு காரியங்களினால் கர்மயோகிகள் இறுதியில் ஞானம் அடைகிறார்கள். தராசின் கோலினால் துலாதாரனுக்குச் சமநோக்குக் கிட்டிற்று. சேனா என்ற நாவிதன் க்ஷவரத்தொழில் செய்துவந்தான். பிறரது தலை அழுக்கை நீக்கிக் கொண்டேயிருந்த அவனுக்கு ஞானம் கிட்டியது. “பார், நான் பிறர் மண்டை அழுக்கை அகற்றிக்கொண்டே யிருக்கிறேனே, எப்பொழுதேனும் என் தலையில்,

என் அறிவில் உள்ள அழுக்கையும் போக்கிக் கொண்டேனு ?'' என்பது போன்ற தத்துவப் பேச்சு அவனுக்கு அக் காரியத்திலிருந்தே தோன்றலாயிற்று. வயலின் களையை அகற்றிக்கொண்டேயிருக்கும் கர்ம யோகிக்குத் தன் உள்ளத்தின் வாசனைகள், விகாரங்கள் என்ற களைகளை அகற்றும் அறிவு உண்டாகிறது. பச்சை மண்ணைப் பிசைந்து பிசைந்து சமூகத்திற்குக் கெட்டியான சட்டிபானைகள் செய்து தரும் கோரா என்ற குயவன் தன் வாழ்க்கைச் சட்டியையும் உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும் என்ற படிப்பினையைப் பெறுகிறுன்; இவ்வாறு அவன் கையினுல் தட்டித் தட்டிச் சட்டி வெந்ததா வேகாததா என்று மகான்களை யெல்லாம் சோதித்துத் தெரிந்துகொள்ளும் திறமை பெறுகிறுன். இதிலிருந்து கர்ம யோகிகளுக்குத் தாம் செய்யும் காரியங்கள் அல்லது தொழில்களின் பரிபாஷையிலிருந்தே சிறந்த ஞானம் கிடைத்திருக்கிறது என்பது புலனுகிறது. அக் காரியங்கள் அவர்களது ஆன்மீக வளர்ச்சிக்குதவும் சோதனைக் கூடமாகவே அமைந்தன. அவர்களது அக் காரியங்கள் உபாசனை மயமாய், சேவை மயமாய் இருந்தன. மேற்பார்வைக்கு உலக நடவடிக்கைகளாய்த் தோன்றினும் உண்மையில் அவை பாரமார்த்திக மானவையே.

கர்மயோகியின் காரியத்தினுல் இன்னும் ஒரு சிறந்த பயனும் விளைகிறது. அதாவது, சமூகத்திற்கு அது ஓர் எடுத்துக் காட்டாய் அமைகிறது. சமூகத்தில் ஒருவன் முன் பிறப்பதும் இன்னெருவன் பின் பிறப்பதும்தான் உள்ளதாயிற்றே. முன் பிறப்போருக்கு தமக்குப் பின் பிறப்பவர்களுக்கு உதாரணமாய் நடந்துகொள்ள வேண்டிய பொறுப்பு ஏற்படுகிறது. அண்ணனுக்குத் தம்பியின் விஷயத்திலும், பெற்ருேருக்குப் பிள்ளைகள் விஷயத்திலும், தலைவனுக்குத் தொண்டர் விஷயத்திலும், குருவுக்குச் சீடர் விஷயத்திலும், தம் செயல்களினுல் முன்மாதிரியாய் இருக்கவேண்டிய பொறுப்பு அமைகிறது. இவ்வாறு முன்மாதிரியாய் அமைவதைக் கர்மயோகிகளைத் தவிர வேறு யாரால் சாதிக்க இயலும்?

கர்மயோகி எப்பொழுதும் காரியத்திலேயே ஈடுபட்டிருப்பான். ஏனெனில், காரியத்தில்தான் அவனுக்கு ஆனந்தம் ஏற்படும். இதனுல் சமூகத்திலிருந்து டம்பமும் மோசடியும் நீங்கும். கர்மயோகி போதுமென்ற மனமுள்ளவனுய் தன்னில் தான் திருப்தியுடன் இருந்தபோதிலும் காரியம் செய்யாது அவனுல் வாழவே முடிவதில்லை. துகாராம், ''பஜனையினுல் பகவான் கிட்டிவிட்டார் என்பதற்காக, நான் பஜனை செய்வதையே விட்டு விடுவதா? பஜனைதான் இப்பொழுது என் இயற்கைத் தருமமாகிவிட்டதே!'' என்கிறுர்.

" நல்லோரிணக்கம் பெற்றுத் துகா பாண்டுரங்கனுனன் ;
வழிபாட்டை விடுவானேன், இயற்கை மாறுவானேன் ?"*

கர்மத்தின் படிகள் வழியே ஏறி உச்சியை அடைந்தாகிவிட்டது. ஆனுல் அப்பொழுதும் கர்மயோகி தான் ஏறிய ஏணியை விடுவதில்லை ; அது அவனைவிட்டுப் பிரியவே பிரியாது. அவனுடைய பொறிகளுக்கு அக் காரியங்களைச் செய்வதில் ஓர் இயற்கையான பழக்கம் ஏற்பட்டுவிடுகிறது. இவ்வாறு சுதர்மக் காரியமென்ற சேவை-ஏணியின் பெருமையை அவன் சமூகத்திற்கு உணர்த்திக்கொண்டேயிருக்கிருன்.

சமூகத்திலிருந்து வேஷமும் மோசடியும் அகலுதல் மிகவும் முக்கிய மாகும். வேஷம்-மோசடியினுல் சமூகமே அழிந்து போகிறது. ஞானி எதுவும் செய்யாது உட்கார்ந்து விடுவானுயின் அவனைப் பார்த்துப் பிறரும் கையைக் கட்டிக்கொண்டு சும்மாவிருக்கத் தொடங்கிவிடுவார்கள். ஞானியோ என்றும் திருப்தியோடிருப்பதால் அவன் உள்ளத்தின் சுகத்திலாழ்ந்தவனுய் வெளியே வாளாயிருப்பான். ஆனுல் பிற மனிதர்களோ உள்ளுக்குள் அழுதுகொண்டே வெளியில் வேலையின்றி இருப்பர். ஒருவன் அகத்திருப்தியுடன் வாளாயிருக்க, மற்றவனே மனத்தில் வெதும்பிக்கொண்டே எதுவும் செய்யாதிருக்கிருன். இத்தகைய நிலை கொடிது. இதனுல் வேஷமும் ஆடம்பரமும் வளரும். ஆகையால் மகான்களெல்லோரும் சிகரத்தை எட்டிப் பிடித்த பிறகும், சாதனையை விடாது செய்துகொண்டே இருந்திருக்கிருர்கள் ; இறுதிவரை தமக்குரிய காரியத்தைச் செய்து வந்திருக்கிருர்கள். தாய் குழந்தைகளின் பொம்மைக் கலியாண விளையாட்டை ரசிக்கிருள். அவளுக்கு இதெல்லாம் உண்மையல்ல, வெறும் விளையாட்டேயென்று தெரிந்திருந்தும், அவர்களின் விளையாட்டில் தானும் கலந்துகொண்டு அவர்களுக்கு அதில் ருசி உண்டாக்குகிருள். தாய் அவ் விளையாட்டுக்களில் கலந்து கொள்ளாவிடில் குழந்தைகளுக்கு அதில் இன்பம் தோன்ருது. கர்மயோகி திருப்தி ஏற்பட்டுவிட்டதனுல் காரியத்தை விட்டுவிடுவானுயின் மற்றவர்கள் திருப்தியற்றிருந்தும், மனத்தில் ஆசையும் அதிருப்தியும் கொண்டிருந்தும், காரியம் செய்வதை நிறுத்திவிடுவார்கள்.

ஆகையால் கர்மயோகி சாதாரண மனிதனைப்போலவே காரியம் செய்துகொண்டிருப்பான். அவனுக்குத் தான் ஏதோ பெரிய மனிதன், மற்றவர்களைப் போன்றவனல்ல என்றே தோன்ருது. மற்றவர்களைவிட

---

* आधीं होता संतसंग । तुका झाला पांडुरंग ।
त्याचें भजन राहीना । मूळस्वभाव जाईना ॥

அவன் எவ்வளவோ அதிகம் உழைப்பான். குறிப்பிட்ட ஒரு காரியம் பாரமார்த்திகமானது என்று அதற்குத் தனி முத்திரை இடவே தேவை யில்லை; காரியத்தை விளம்பரப் படுத்தவேண்டிய அவசியமுமில்லை. நீ சிறந்த பிரம்மசாரியானல் உன் காரியத்தில் பிறரைவிட நூறு மடங்கு உற்சாகம் புலனுகுமாறு செய். உணவு குறைவாகவே கிடைத்தபோதி லும் மும்மடங்கு வேலை செய்; சமூகத்திற்கு நீ செய்யும் பணி அதிக மாகவே இருக்கட்டும். உன் பிரம்மசரியம் உன் நடத்தையின் மூலம் வெளியாகட்டும். சந்தனத்தின் மணம் தானே புறத்து வீசட்டும்!

கர்மயோகி பயனைக் கருதாதிருந்துவிடுவதனல் அளவிலடங்காப் பயன்பெறுவான் என்பது கருத்து. அவனது உலக வாழ்வு நடந்து வரும்; அவன் உடலும் அறிவும் ஒளிபெற்றுத் திகழும்; அவன் வளைய வரும் சமூகம் சுகம் பெறும். அவனுக்குச் சித்தசுத்தி ஏற்பட்டு ஞானம் கிடைப்பதோடு சமூகத்தில் வேஷமும் மோசடியும் அழிய, வாழ்க்கையின் புனித ஆதரிசமும் கிட்டும். இது அனுபவத்தில் அறிந்த கர்ம யோகச் சிறப்பாகும்.

## (13) கர்ம யோக விரதங்களுக்கு இடையூறுகள்

கர்மயோகி தன் காரியத்தைப் பிறரைவிடச் சிறப்பாகச் செய்வான். ஏனெனில், காரியமே அவனுக்குக் கடவுள் வழிபாடும் பூஜை நியமங்களு மாகும். நான் பகவானைப் பூஜை செய்தேன். பூஜையின் நிவேதனம் எனக்குப் பிரசாதமாகக் கிடைத்தது. இந்த நிவேதனம் அந்தப் பூஜை யின் பயனு? நிவேதனத்திற்காகப் பூஜை செய்பவனுக்கு பிரசாதத்தின் பகுதி உடனே கிடைக்கவே செய்யும். ஆனல் கர்மயோகியோ தன் காரிய மென்ற பூஜையிலிருந்து கடவுள் தரிசனமென்ற பயனை விரும்புகிறன். அவன் பிரசாதம் கிடைத்தால் போதுமென்று நினைக்குமளவுக்குத் தன் காரியத்தைக் குறைத்து மதிப்பிடுவதில்லை; அவன் தன் காரியத் தைக் குறைத்து மதிப்பிடச் சம்மதியான். ஸ்தூலமான கோலைக் கொண்டு அவன் தன் காரியங்களை அளப்பதில்லை. ஸ்தூல நோக்கமுள்ள வனுக்குக் கிடைக்கும் பயனும் ஸ்தூலமாகவேதானிருக்கும். மராத்திய விவசாயிகளிடையே 'ஆழ உழு, ஆனல் ஈரமாய் விதை'* என்று ஒரு பழமொழியுண்டு. ஆழ உழுதால் மட்டும் போதாது; கீழே நைப்பும் இருக்க வேண்டும். ஆழமும் ஈரமும் இருக்கும்பொழுது தானியம் பெரிது பெரிதாய் விளையும். ஆகையால் காரியம் ஆழ்ந்ததாய் அல்லது சிறந்த தாய் இருக்கவேண்டும். மேலும், அதில் கடவுள் பக்தியும் ஆண்டவ

---

* खोलीं पेर, पण ओलीं पेर।

னுக்கே உரிமையாக்கும் நைப்பும் இருத்தல் வேண்டும். கர்மயோகி ஆழ்ந்த காரியத்தைச் செய்து அதை ஆண்டவனிடம் சமர்ப்பித்து விடுவான்.

பரமார்த்தம்பற்றிச் சில அர்த்தமற்ற கற்பனைகள் நம்மிடையே நிலவுகின்றன. பரமார்த்தி தன் கைகால்களை அசைக்கத் தேவையில்லை, வேலை எதுவும் செய்ய வேண்டியதில்லை என்று நினைக்கிறார்கள். 'விவசாயம் செய்வோனும் கதர் நெய்வோனும் எங்ஙனம் பரமார்த்தியாவர்?' என்று கேட்கிறார்கள். ஆனால் உணவு அருந்துகிறவன் எத்தகைய பரமார்த்தி என்று எவரும் விசாரிப்பதில்லை. கர்மயோகிகளின் கடவுள் குதிரைகளுக்கு உடம்பைத் தேய்த்துவிட்டுத் தீனி வைக்கிறார்; ராஜசூய யாகத்தில் எச்சில் இலைகளை அள்ளுகிறார்; காட்டில் மாடு மேய்க்கப் போகிறார்! அத் துவாரகாநாதன் மீண்டும் கோகுலத்திற்குப் போவானாயின் சிற்றடி எடுத்துவைத்துக் குழலூதிக்கொண்டே மாடு மேய்ப்பான்! ஆகையினால் மகான்கள் குதிரைகளின் உடலைத் தேய்ப்பவனும், மாடு மேய்ப்பவனும், தேர் ஓட்டுவோனும், எச்சில் இலை அள்ளுவோனும், தரையை மெழுகுவோனும் ஆன கர்மயோகியாம் கடவுளை உருவாக்கித் தாமும் ஒருவர் தையற்காரராகவும், ஒருவர் வேளாராகவும், ஒருவர் கைக்கோளராகவும், ஒருவர் தோட்ட வேலை செய்பவராகவும், ஒருவர் நெல் குத்துவோராகவும், ஒருவர் வியாபாரியாகவும், ஒருவர் நாவிதராகவும், இன்னொருவர் சக்கிலியாகவும் காரியம் செய்துகொண்டே முக்திபெற்றிருக்கிறார்கள்.

இத்தகைய இந்தத் தெய்வீகமான கர்மயோக விரதத்திலிருந்து மனிதன் இரு காரணங்களினால் வழுவுகிறான். இச் சந்தர்ப்பத்தில் நாம் புலன்களின் சிறப்பான தன்மையைக் கவனத்தில் இருத்த வேண்டும். நம் புலன்கள் எப்பொழுதும் 'இது வேண்டும், அது வேண்டாம்' என்று கூறும் துவந்தம் அல்லது இரட்டையினால் சூழப்பட்டிருக்கின்றன. வேண்டுவதில் விருப்பு (ராகமு)ம், வேண்டாததில் வெறுப்பு (துவேஷமு)ம் உண்டாகின்றன. இத்தகைய இந்த ராகத் துவேஷமு (விருப்பு-வெறுப்பு)ம், காமக்குரோதமு (காம-வெகுளிகளு)ம் மனிதனை நோண்டி நோண்டித் தின்கின்றன. கர்மயோகம் எவ்வளவு சிறந்தது, எவ்வளவு இன்பமானது, எவ்வளவு அளவற்ற பயன் அளிப்பது! ஆனால் இந்தக் காமம், வெகுளி என்பவை 'இதை ஏற்றுக்கொள், அதை விடு' என்ற தொல்லையை அல்லும் பகலும் கொடுத்துக்கொண்டே நம் கழுத்தைக் கெட்டியாய்ப் பற்றி நிற்கின்றன. ஆகையினால் பகவான் இவ்வத்தியாயத்தினிறுதியில் இவைகளின் தொடர்பை

டு, இவைகளிடமிருந்து தப்பு என்று சொல்லி எச்சரிக்கை மணி அடிக்
ருர். ஸ்திதப்பிரக்ஞன் அடக்கமே உருவாய் அமைந்திருப்பது
போலவே கர்மயோகியும் ஆகவேண்டும்.

ஞாயிறு, 6–3–'32

நான்காம் அத்தியாயம்

## கர்மயோகத்திற்குதவும் சாதனை : விகர்மம்

### (14) கர்மத்திற்கு விகர்மத்தின் உதவி தேவை

சகோதரர்களே, சென்ற அத்தியாயத்தில் நாம் பயன் கருதாக் கர்ம
யோகத்தை ஆராய்ந்தோம். நாம் சுதர்மத்தைத் தட்டிக் கழித்துவிட்டு
பிறர் தர்மத்தை ஏற்போமாயின் பயன் கருதாமை என்ற பயன் சாத்திய
மில்லை என்றே கருதுங்கள். சுதேசிப் பண்டங்களை விற்றல் வியாபாரி
யின் சுதர்மம். ஆனுல் இச் சுதர்மத்தைவிட்டு அவன் ஏழு சமுத்திரங்
களுக்கப்பாலிருந்து வரும் விதேசிச் சரக்கை விற்கத் தொடங்குகையில்
அவனது எண்ணம் பெருத்த இலாபம் கிடைக்க வேண்டும் என்பதே.
ஆகவே அக் காரியத்தில் பயன் கருதாமைக்கு இடமேது? ஆகையால்
காரியம் பயன்கருதாததாய் அமையச் செய்வதற்குச் சுதர்மத்தை அனுஷ்
டித்தல் இன்றியமையாததாகிறது. ஆனுல் இச் சுதர்ம அனுஷ்
டானமும் பயனைக் கருதியதாய் இருக்கக்கூடும். அஹிம்சையின் விஷ
யத்தையே எடுத்துக் கொள்வோமே; அஹிம்சையின் பக்தனுக்கு ஹிம்சை
தவிர்க்க வேண்டியதொன்ருகிறது. ஆனுல் வெளிப் பார்வைக்கு
அஹிம்சாவாதியாய்த் தோன்றினும் உண்மையில் ஒருவன் ஹிம்சை
மயமாய் இருத்தல் கூடும். ஏனெனில், ஹிம்சை என்பது மனம்பற்றிய
ஒரு தர்மம். வெளிப்பார்வைக்கு ஹிம்சைச் செயல் புரியாதிருப்பதினு
லேயே மனமும் அஹிம்சைமயமாய் இருக்கும் என்பதில்லை. கையில்
வாளைத் தாங்குவதனுல் ஒருவனது ஹிம்சைப்போக்கு தெளிவாய் வெளி
யாகிறது. ஆனுல் வாளைத்துறந்து விடுவதனுல் மனிதன் அஹிம்சை
மயமாகிவிடுகிருன் என்பதில்லை. இதே விஷயம் சுதர்ம அனுஷ்டானத்
திற்கும் பொருந்தும். பயனைக் கருதாதிருக்க பிறர் தர்மத்திலிருந்து
விலகியே தீரவேண்டும். ஆனுல் இது பயன் கருதாமையின் ஆரம்பமே;
இதனுலேயே நாம் நம் இலட்சியத்தை எய்தியவராகமாட்டோம்.

பயன் கருதாமை மனத்தின் தர்மமாகும். இது தோன்றுவதற்குச்
சுதர்மத்தை அனுஷ்டித்தல் என்ற சாதனம் ஒன்று மட்டும் இருந்தால்
போதாது; பிற சாதனங்களின் உதவியும் இதற்குத் தேவையாகும்.

வெறும் எண்ணெயும் திரியும் மட்டும் இருந்தால் விளக்கு எரியாது; அதைக் கொளுத்தத் தீ தேவைப்படுகிறது. தீயினால் ஒளிதோன்றும் பொழுது இருள் அகலும். இந்த ஒளியைத் தோற்றுவிப்பதெப்படி? இதற்கு மனத்தைச் சோதித்தல் அவசியமாகும். தன்னையே பரீட்சித்து, சோதித்துப் பார்த்துக் கொள்வதன் மூலம் சித்தத்தின் அழுக்கை, குப்பை கூளங்களை அகற்றிக் கழுவிவிடவேண்டும். மூன்றும் அத்தியா யத்தினிறுதியில் இம் முக்கியமான விஷயத்தையே பகவான் சொன்னார். அதிலிருந்தே நான்காம் அத்தியாயம் தோன்றியுள்ளது.

கீதையில் 'கர்மம்' என்ற சொல் 'சுதர்மம்' என்ற பொருளில் வழங்கப்பட்டிருக்கிறது. நாம் உண்பதும் அருந்துவதும் உறங்குவதும் கர்மங்களே. ஆனால் கீதையில் கர்மமென்ற சொல்லினால் இக் காரி யங்கள் குறிப்பிடப்படவில்லை. கர்மமென்பதற்கு அங்கே சுதர்மம் என்றே பொருள். ஆனால் சுதர்மம் செய்தல் என்ற கர்மம் புரிந்து பயன் கருதா மையை எய்துவதற்கு இன்னும் ஒன்றின் உதவி தேவையாகிறது. அதுவே காமம், வெகுளி என்பவைகளை வெல்லுதல். சித்தம் கங்கை நீரைப் போன்ற தெளிவும் அமைதியும் அடையாதிருக்கும் வரை பயன் கரு தாமை நமக்குக் கைவரமுடியாது. இவ்வாறு சித்தத்தைச் சோதிப்ப தற்கு இயற்றவேண்டிய காரியங்கள் அனைத்தையும் கீதை 'விகர்மம்' என்று குறிப்பிடுகிறது. 'கர்மம்', 'விகர்மம்', 'அகர்மம்' என்ற இம் மூன்று சொற்களும் நான்காம் அத்தியாயத்தில் மிகவும் முக்கியமானவை. கர்மம் என்பதற்குச் சுதர்மம் புரிதல் என்ற ஸ்தூலமான புறச்செயல் பொருளாகிறது. இப் புறச் செயலில் சித்தத்தைப் புகுத்தலே விகர்மம் என்பது. நாம் வெளிப்பார்வைக்கு ஒருவரை நமஸ்கரிக்கி றோம். ஆனால் வெளியே தலை வணங்கினோமே, அச்செயலோடு பொருந்தி உள்ளே மனமும் வணங்காதபொழுது அப் புறச்செயல் பயனற்ற தாகிறது. அகமும் புறமும், உள்ளும் வெளியும் இரண்டும் ஒன்ற வேண்டும். நான் வெளியே சிவலிங்கத்தின்மீது நீரை ஊற்றி அபி ஷேகம் செய்தேன். ஆனால் இந் நீர் ஒழுக்குடன் மனத்தின் சிந்தனை யென்ற ஒழுக்கும் இடையறாது வீழ்ந்து கொண்டிராவிடில் இவ் வபிஷேகத்திற்கு மதிப்பு ஏது? அந்நிலையில் அச் சிவலிங்கம் ஒரு கல்லாக, நான வேறொரு கல்லாகவே இருப்பேன். ஒரு கல்லின் எதிரில் பிறிதொரு கல் இருப்பதென்பதே அதன் பொருளாகும். நம் புறச்செய லோடு அகத்தில்சித்தசுத்தி என்ற கர்மமும் இணையும்பொழுதே பயன் கருதாக் கர்மயோகம் கைகூடும்.

'பயன் கருதாக் காரியம்' என்ற இச் சொல்லாட்சியில் 'காரியம்'

என்ற சொல்லைவிடப் 'பயன் கருதாமை' என்ற தொடருக்கே—'அஹிம்சைமயமான ஒத்துழையாமை' என்ற சொற்றொடரில் 'ஒத்துழையாமை' என்ற சொல்லைவிட 'அஹிம்சைமயமான' என்ற அடைமொழிக்கே அதிகச் சிறப்பிருப்பதைப்போல—முக்கியத்துவமதிகம். அஹிம்சையை அகற்றிவிட்டு வெறும் ஒத்துழையாமை மட்டும் செய்து வருவோமாயின் அது பயங்கரமான பொருளாய் அமையக்கூடும். அதே வகையில் சுதர்மமியற்றல் என்ற காரியம் செய்கையில் மனத்தின் விகர்மமும் அதில் இணைந்திராவிடில் அதை மோசடி என்றே கொள்ள நேரும்.

இன்று பொது ஜனசேவை செய்கிறவர்கள் சுதர்மத்தையே அனுஷ்டிக்கிறார்கள். ஏழை—எளியோர், துன்புற்றோர், ஆபத்தில் சிக்கியவர் ஆகியோருக்குப் பணிபுரிந்து அவர்களைச் சுகமுறச்செய்தல் வழக்கமான தருமமாயிருக்கிறது. ஆனால் பொதுஜன சேவைசெய்யும் அனைவரும் கர்மயோகிகளாகி விட்டனரென்று எண்ணிக்கொண்டு விடக்கூடாது. பொதுஜன சேவை செய்கையில் மனத்தில் தூய பாவனை இல்லாதிருக்குமாயின் அந்த ஜனசேவையே பயங்கரமானதாய் மாறக்கூடும். நம் குடும்பத்திற்குச் சேவை செய்கையில் நமக்குத் தோன்றும் அகங்காரம், துவேஷம், பொறாமை, சுயநலம் என்ற விகாரங்கள் அத்தனையும் ஜன சேவையிலும் தோன்றுகின்றன என்பதை நாம் தற்காலத்தில் பொது ஜன சேவை செய்யும் சங்கங்களென்ற குழுக்களில் நிதரிசனமாய்க் காண்கிறோம்.

## (15) கர்ம—விகர்மக்கூட்டின் விளைவு அகர்மம்

கர்மத்துடன் மனம் இணைந்து நிற்கவேண்டும். இம் மன இணக்கத்தையே கீதை 'விகர்மம்' என்று சொல்லுகிறது. புறத்தே சுதர்மம் என்ற பொதுக்கர்மமும், இவ்வகம்பற்றிய சிறப்புக் கர்மமும். இச்சிறப்புக் கர்மம் அவரவர் மனத்தின் தேவையை ஒட்டி வெவ்வேறாகிறது. விகர்மத்தின் அநேக வகைகள் உதாரணமாய் நான்காம் அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கின்றன. அதுவே மேலே ஆறாம் அத்தியாயத்தில் விஸ்தரிக்கப்படுகிறது. இந்தச் சிறப்பான கர்மத்தை, இந்த மானசிக லயிப்பை நாம் பெறும்பொழுதே அதில் பயன் கருதாமை என்ற ஒளி தோன்றும். கர்மத்துடன் விகர்மம் இணையும்பொழுது பயன் கருதாமை சிறிது சிறிதாக நம்முள் வரத்தொடங்கும். உடலும் மனமும் வெவ்வேறு பொருள்களாகையால் அவற்றிற்குரிய சாதனைகளும் வெவ்வேறாகவே இருக்க வேண்டியுள்ளது. இவையிரண்டையும் இணைத்துவிடும் பொழுது

இலட்சியம் கைகூடுகிறது. மனம் ஒரு பக்கமும் உடல் வேருெரு பக்கமும் போகாதிருப்பதற்காகச் சாத்திரங்களை வகுத்தவர்கள் இரண்டுவகை வழிகளைச் சொல்லியிருக்கிருர்கள். பக்தியோகத்தில் புறத்தே தவமும் அகத்தே ஜபமும் விதித்திருக்கிருர்கள். உபவாசம் முதலிய தவங்கள் புறத்தில் நடக்கும்பொழுது அகத்தில் மானசிகமான ஜபமும் நடந்து வராவிட்டால் அத்தவம் முழுமையும் வீணும். தவம் பற்றிய என் பாவனை இடையருமல் எரிந்துகொண்டே, ஜொலித்துக் கொண்டேயிருக்க வேண்டும். 'உபவாசம்' என்ற சொல்லுக்குப் பொருளே பகவானுக்கு அருகில் அமர்தல் என்பது. பரமாத்மாவினிடம் நம் சித்தம் லயிக்கும் பொருட்டுப் புறப் போகங்களின் வாயில்களை அடைத்துவிடுதல் அவசியமாகும். ஆனுல் புறத்தே விஷய போகங்களை விட்டுவிட்டு மனத்தில் பகவானை நினையாதிருந்தால் புறத்தே நடக்கும் இவ்வுபவாசத்திற்கு மதிப்பேது? கடவுளை நினையாது உணவைப்பற்றியே நினைத்துக்கொண்டிருப்பின் அவ்வுணவு மிகவும் தீமை பயப்பதாகி விடும். மனத்திஞல் கொள்ளப்படும் இவ்வுணவைவிட, மனத்தின் இப் போகச்சிந்தனையைவிடக் கொடியது வேறில்லை. தந்திர (கர்ம)த் துடன் மந்திரமும் நடைபெற வேண்டும். வெறும் புறக்கர்மத்திற்கு மதிப்பெதுவுமில்லை; கர்மத்துடன் இணையாத மந்திரத்திற்கும் மதிப்புக் கிடையாது. கையினுலும் சேவை நடைபெறவேண்டும், இதயத்தினு லும் சேவை நடைபெறவேண்டும். அப்பொழுதுதான் உண்மையான சேவை சாத்தியம்.

புறக் கர்மத்தில் இதயத்தின் கருணை சேரவில்லையாயின் அச் சுதர்ம அனுஷ்டானம் உலர்ந்ததாகும்; அதில் பயன் கருதாமை யென்ற பூக்கள் பூத்துக் காய்க்கா. நாம் நோயாளி ஒருவனுக்குப் பணி செய்யத் தொடங்குவதாக வைத்துக்கொள்ளுங்கள். நாம் செய்யும் அப் பணிவிடையுடன் மனத்தில் தயையுணர்ச்சி இல்லையேல் அப் பணிவிடை யில் நமக்கு ருசியில்லாமற் போக, மனத்திலும் அலுப்புத் தோன்றும்; அது நமக்கு ஒரு சுமையாகவே இருக்கும். நோயாளிக்கும் நாம் செய்யும் பணிவிடை பாரமாகத் தோன்றும். மனத்தின் கூட்டுறவு இல்லாவிடில் அதில் அகங்காரம் வேறு தலையெடுக்கும். 'நான் இன்று அவனுக்காக வேலை செய்தேன். தேவையானபொழுது அவன் எனக்கு உதவவேண்டும், என்னைப் புகழவேண்டும், எனக்கு மதிப்பளிக்க வேண்டும்' என்பவை போன்ற ஆவல்கள் மனத்தில் எழும். அல்லது நாம் சலிப்புடன், 'நாம் இவனுக்கு இவ்வளவு பணிவிடை செய்தும் இவன் முணுமுணுத்துக்கொண்டே இருக்கிருனே!' என்று சொல்லு

வோம். நோயாளி சாதாரணமாகவே சிடுசிடு வென்றிருப்பான். அவனது இச் சிடுசிடுப்பினுல் உண்மையான சேவைப் பாவனை இல்லாத ஊழியனுக்கு அலுப்புத் தோன்றும்.

கர்மத்துடன் அகத்தின் பாவமும் சேர்ந்துவிடும்பொழுது அக் கர்மத்தின் தன்மையே மாறிவிடுகிறது. எண்ணெய், திரி ஆகியவற்றுடன் சுடரும் சேரும்பொழுது ஒளி உண்டாகிறது. கர்மத்துடன் விகர்மம் சேரும்பொழுது பயன் கருதாமை விளைகிறது. வெடிமருந்தில் திரியைக் கொளுத்தி வைப்பதனுல் அது 'படார்' என்று வெடிக்கிறது; அவ் வெடி மருந்தில் ஒரு சக்தி பிறக்கிறது. கர்மத்தைத் துப்பாக்கியின் வெடி மருந்தென மதியுங்கள். அதில் விகர்மமென்ற திரி அல்லது தீ இடப்பட்டதும் அது செயல்படுகிறது. விகர்மம் வந்து சேராதிருக்கும் வரை அக் கர்மம் ஜீவனற்றே கிடக்கும்; அதில் உயிரொளி இராது. விகர்மத்தின் தீப்பொறி பட்டவுடனே அக் கர்மத்தில் தோன்றக்கூடிய சக்தி வர்ணனையில் அடங்காதது. ஒரு சிட்டிகை அளவு வெடிமருந்து பையில் கிடக்கிறது, அல்லது நாம் கையில் வைத்துக்கொண்டிருக்கிறோம். ஆனுல் அதில் தீப்பட்டவுடனே அது உடலைச் சுக்கு நூறுக்கி விடுகிறது. சுதர்ம அனுஷ்டானத்தில் அடங்கியுள்ள அளவிடமுடியாத சக்தி இதே வகையில் உள்ளே அமுங்கிக் கிடக்கிறது. அதில் விகர்மத்தை இணைத்து விட்டுப் பாருங்கள், அது என்னென்ன வேலைகளைச் சாதிக்கிறதென்பதை! அது வெடிப்பதனுல் அகங்காரம், காமம், குரோதம் ஆகியவை மடிய, அதிலிருந்து பரமஞானம் உதயமாகும்.

கர்மம் ஞானத்தின் திரியாகும். ஒரு பெரிய மரத்துண்டு ஓர் இடத்தில் கிடக்கிறது. நீங்கள் அதை எரித்தீர்களானுல் அது தக தக வென்று ஜொலிக்கும் தணலாகும். ஏற்கெனவே யிருந்த மரத்திற்கும் இத் தீக்கும் எவ்வளவு வித்தியாசம்! ஆனுல் அம் மரந்தானே இத் தீயாக மாறிற்று? கர்மத்தில் விகர்மத்தைச் சேர்ப்பதனுல் கர்மம் தெய்வீக ஒளி பெறத் தொடங்குகிறது. தாய் குழந்தையின் முதுகைத் தடவிக் கொடுக்கிருள். ஒரு முதுகின் மேல் ஒரு கை இங்குமங்குமாய்ப் போய் வந்தது, அவ்வளவுதான். ஆனுல் இச் சாதாரணச் செயலினுல், அந்தத் தாய், குழந்தை ஆகியோரின் மனத்தில் தோன்றிய உணர்ச்சிகளை யாரால் வர்ணிக்க இயலும்? எவரேனும் இவ்வளவு நீள அகலமுள்ள முதுகின்மீது இவ்வளவு எடையுள்ள மெல்லிய கையால் தடவினுல் இவ்வளவு இன்பமுண்டாகு மென்று விகித சமக் கணக்கிடத் தொடங்குவாராயின் அது வெறும் கேலிக்கூத்தாகவே இருக்கும். கையால் தடவுதல் என்ற இக் காரியம் மிகவும் சாதாரணமானதொன்று. ஆனுல்

இதில் தாயின் உள்ளமே கலக்கப்பட்டிருக்கிறது, இதில் விகர்மம் இணைக் கப்பட்டிருக்கிறது. இதனுலேயே அந்த அபூர்வ ஆனந்தம் ஏற்படு கிறது. துளசீராமாயணத்தில் ஒரு சந்தர்ப்பம் : குரங்குகள் இராட்சதர் களுடன் போரிட்டுத் திரும்புகின்றன. அவைகளின் உடல்களிலெல்லாம் காயம் ; இரத்தம் வழிந்துகொண்டிருக்கிறது. ஆனுல் இராமபிரா னுடைய கருணைக் கடாட்சம் அவைகள்மீது ஒரு முறை பட்டவுடனே அவைகளுக்கு இருந்த வேதனைகளெல்லாம் மறைந்துபோயினவாம். இப்பொழுது வேருெருவன் அச் சமயத்தில் இராமனுடைய கண்களும் பார்வையும் எப்படியிருந்தனவென்பதைப் புகைப்படம் எடுத்துக் கணக்கிட்டுக்கொண்டு அதே வகையில் பார்ப்பானுயின் அதே பயன் விளையுமா ? அவ்வாறு செய்ய முயலுதல் கேலிக் கூத்தாகத்தான் இருக்கும்.

கர்மத்துடன் விகர்மம் சேரும்பொழுது அதிலிருந்து சக்தி வெடித் தெழவும், அகர்மம் உருவாகிறது. விறகு எரிந்தால் அது சாம்பலா கிறது. முதலில் அவ்வளவு பெரிதாயிருந்த மரத்துண்டு இறுதியில் ஒரு சிட்டிகைச் சாம்பலாய் மாறிவிடுகிறது ; அதைக் கையில் எடுத்து உடலெங்கும் ஆனந்தமாய்ப் பூசிக் கொள்ளலாம். இவ்வாறு கர்மத்தில் விகர்மம் என்ற தீயை இட்டோமாயின் இறுதியில் அதுவே அகர்மமாகி விடும். மரம் எங்கே, சாம்பலெங்கே ? (कः केन संबन्धः ? கः கேன ஸம்பந்த:?) அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம் ? அவைகளின் குண தர்மங்களில் ஒன்றுக்கொன்று ஒற்றுமையையே காணேம். ஆனுல் அச் சாம்பல் அம் மரத்துண்டினுடையதே என்பதில் ஐயமில்லை.

கர்மத்தில் விகர்மத்தைச் சேர்ப்பதனுல் அகர்மம் தோன்றுகிறது. இதன் பொருள் என்ன ? இதன் பொருள், கர்மம் எதுவுமே செய்வதாய்த் தோன்ருமையே ; அக் கர்மத்தின் பளுவே தோன்றுவதில்லை என்பதே. நாம் செய்தும் செய்யாதவர் போன்று ஆகிவிடுகிருேம். கீதை, 'கொன் றும் நீ கொலேஞுவதில்லை' என்கிறது. தாய் குழந்தையை அடிக்கிருள் என்பதனுல், நீ வேண்டுமானுல் அவனை அடித்துப்பாரேன். உன் அடியைக் குழந்தை பொறுக்கமாட்டான். தாய் அடித்தாலும் அவன் அவள் மடியிலேயே தன் முகத்தைக் கொண்டுபோய் மறைத்துக் கொள் வான். ஏனெனில், தாய் புறத்தே செய்யும் கர்மத்தில் சித்த சுத்தி இணைந்திருக்கிறது. அவள் அடிப்பதும் கண்டிப்பதும் பயன் கருதாது செய்யப்படுவன ; அக் காரியத்தில் அவளுக்குச் சுயநலமெதுவுமில்லை. விகர்மத்தினுல், மனத்தூய்மையினுல் கர்மத்தின் கர்மத்தன்மை அகன்றுவிடுகிறது. இராமனது அந்த நோக்கு அகத்தின் விகர்மம்

காரணமாக அன்பின் அமுதவாரியாய் அமைந்துவிட்டது. ஆனால் இராமனுக்கு அக் கர்மத்தினால் சிரமம் எதுவும் தோன்றவில்லை. சித்த சுத்தியுடன் செய்யப்படும் காரியம் நம்மீது ஒட்டிக்கொள்வதில்லை. அதில் பாவம் புண்ணியம் என்ற எதுவும் எஞ்சியிருப்பதில்லை. இல்லையேல் கர்மத்தின் எவ்வளவு பளு நம் அறிவின் மீது, உள்ளத்தின்மீது இருந்து கொண்டேயிருக்கும்! இன்று இரண்டு மணிக்கு நாளைக் காலையில் அரசியல் கைதிகளெல்லாம் விடப்படுவார்க ளென்ற செய்தி எழுமானால் நாற்புறமும் எவ்வளவு கூட்டம், எவ்வளவு குழப்பம், தடபுடல் ஆகும், எண்ணிப் பாருங்கள். நாம் கர்மம் நல்லதா கெட்டதா என்ற எண்ணத்தினால் எப்பொழுதும் கவலையிலேயே ஆழ்ந்திருக்கிறோம். கர்மம் நம்மை நாற்புறமும் சூழ்ந்தது போலும், நம் கழுத்தைப் பிடித்து அமுக்கிக் கொண் டிருப்பது போலும் நமக்குத் தோன்றுகிறது. கடலின் நீர் வேகமாய்த் தரையில் வந்து மோதித் தரையைக் குடைந்து விடுவதைப் போல, கர்மத்தின் இப் பூசல் சித்தத்தில் புகுந்து குழப்பம் விளைவிக்கிறது. இன்ப துன்ப மென்ற இரட்டைப் பிறவி தோன்றுகிறது; அமைதியே அழிந்து போகிறது. கர்மம் நடந்து முடிந்து போய்விடுகிறது, ஆனால் அதன் வேகம் இருந்துகொண்டே இருக்கிறது. கர்மம் சித்தத்தில் இடம் பெற்றதும் அதன் தூக்கமே கெட்டுப்போகிறது.

ஆனால் இத்தகைய கர்மத்தில் விகர்மத்தைச் சேர்த்து விடுவோமாயின் எவ்வளவு கர்மம் செய்தாலும் அதன் பளுவோ, சிரமமோ தோன்றவே செய்யாது. மனம் துருவ நட்சத்திரம் போன்று அமைதியாய், உறுதியாய் ஒளி மயமாய் இருந்து வரும். கர்மத்தில் விகர்மத்தைச் சேர்ப்பதனால் அது அகர்மமாகி விடுகிறது; கர்மத்தை எழுதி, பிறகு அதை அழித்துத் துடைத்ததுபோல் ஆகிவிடுகிறது.

## (16) அகர்மக்கலையை மகான்களிடம் கேட்டறி

கர்மம் அகர்மமாய் எப்படி மாறுகிறது? இக் கலை எவரிடம் கிடைக்கும்? மகான்களிடத்தில். இவ்வத்தியாயத்தின் இறுதியில் பகவான், "மகான்களிடம் போய் அமர்ந்து அவர்களிடம் பயிற்சி பெறு" என்று சொல்லுகிறார். கர்மம் அகர்மமாவது எப்படி என்பதை வருணிப்பதில் மொழியின் சக்தியெல்லாம் செலவாகி விடுகிறது. அதை உள்ளவாறே உணர வேண்டுமாயின் மகான்களை அணுகவேண்டும். கடவுளுடைய,

"शान्ताकारं भुजगशयनं"—சாந்தாகாரம் புஜக ஶயனம்

என்ற வருணனைதான் இருக்கிறதே. பகவான் ஆயிரம் படங்களுள்ள

ஆதிசேஷன்மீது துயின்றுகொண்டே அமைதியாயிருக்கிறார். இதே வகையில் மகான்கள் ஆயிரமாயிரம் கர்மங்களைச் செய்துகொண்டிருந்த போதிலும் தம் உள்ளத்தடாகத்தில் சிந்தையின் ஒரு சிறு அலையும் எழ விடுவதில்லை. இவ் விசித்திரம் மகான்களிடம் சென்று பார்த்தால் அல்லது விளங்காது.

இக்காலத்தில் புத்தகங்கள் மிகவும் மலிந்துவிட்டன. ஒரு அணு இரண்டணுவுக்கு கீதை, 'மனுசே சுலோக்'* முதலியவை கிடைத்து விடுகின்றன. குருமார்களுக்கும் குறைவில்லை. கல்வியோ தாராளமாயும் மலிவாயும் கிடைக்கிறது. சர்வகலாசாலைகளோ ஞானத்தைப் பொட்டலங்களாய்க் கட்டி வழங்குகின்றன. ஆனால் இந்த ஞானமுத உணவை உண்டும் எவருக்கும் திருப்தி ஏற்பட்டதாய்த் தெரியவில்லை. புத்தகங்களின் இம் மலையைப் பார்க்குந்தோறும் மகான்களின் சேவை எவ்வளவு அவசியம் என்பது வரவர அதிகம் புலனாகிறது. புத்தகங்களின் கெட்டியான அட்டைகளுக்கு வெளியே ஞானம் வருவதாகவே காணவில்லை! இத்தகைய சந்தர்ப்பத்தில் எனக்கு எப்பொழுதும் ஓர் அபங்கம்† நினைவுக்கு வருவதுண்டு—

"காம, வெகுளி மலைகள் எதிரே நிற்கின்றன;
அனந்தன் அதற்கப்பாலுக்கப்பாலுள்ளான்." ‡

காமம், வெகுளி என்ற மலைகளுக்கப்பால் வெகு தொலைவில் அனந்த நாராயணன் உள்ளான். அவ்வாறே இப் புத்தகக் குவியலின்பின் ஞானராஜன் மறைந்து வீற்றிருக்கிறான். புத்தக சாலைகளும், வாசக சாலைகளும் எங்கும் பரவியிருந்தும் மனிதன் எல்லா விடங்களிலும் நற்பழக்கமும் நல்லறிவுமில்லாத வானரமாகவே காணப்படுகிறானே! படௌதா (பரோடா)வில் ஒரு பெரிய புத்தகாலயம் இருக்கிறது. ஒரு சமயம் ஒரு கனவான் பெரிய புத்தக மொன்றை எடுத்துப் போய்க் கொண்டிருந்தார். அதில் சித்திரங்களிருந்தன. அவர் அதை ஆங்கிலப் புத்தகம் என்று எண்ணிக்கொண்டிருந்தார். "என்ன புத்தகம்?" என்று கேட்டேன். அவர் புத்தகத்தை என்னிடம் நீட்டினார். "இது பிரெஞ்சுப் புத்தகமாயிற்றே!" என்றேன். அவர் "உங்களுக்கு பிரெஞ்சும் தெரியுமா?" என்றார். மிகப் புனிதமான ரோமன் எழுத்து,

---

* 'मनाचे श्लोक'—சமர்த்த ராமதாச சுவாமிகள் இயற்றிய மராத்திப் புத்தகம்.

† ஒரு மராத்திச் செய்யுள் வகை.

‡ काम क्रोध आड पडिले पर्वत, राहिला अनंत पैलीकडे ॥

நேர்த்தியான சித்திரங்கள், அழகிய கட்டடம்—இவ்வளவும் இருக்கையில் ஞானத்திற்குக் குறைவேது !

ஆங்கிலத்தில் பிரதி வருஷமும் சுமார் பத்தாயிரம் புதிய புத்தகங்கள் தயாராகின்றன. பிற மொழிகளிலும் இப்படியே தானென்று எண்ணிக் கொள்ளுங்கள். ஞானம் இவ்வளவு விஸ்தாரமாய்ப் பரவியும் மனிதனது அறிவு இதுவரை எப்படிச் சோடையாகவே இருந்து வருகிறது? ஞாபக சக்தி குறைந்து விட்டதென்று ஒருவர் சொல்லுகிறார். கவனித்துப் படிக்கும் திறம் மழுங்கிவிட்டதென்கிறார் இன்னொருவர். வேறொருவரோ, படிப்பதெல்லாமே உண்மையென்று தோன்றுகிறதென்கிறார். இன்னுமொருவர், "ஐயா, எனக்குச் சிந்திக்கவே பொழுதில்லை" என்கிறார். ஸ்ரீகிருஷ்ணன், "அர்ஜுனா, எவ்வளவோ விஷயங்களைக் கேட்டுக்கேட்டு உன் அறிவு குழம்பிவிட்டது. அது உறுதி பெற்றுத் தெளியும் வரை உனக்கு யோகம் கைகூடாது. கல்வி கேள்விகளை இப்பொழுது நிறுத்திவிட்டு மகான்களை அணுகு; அங்கே வாழ்க்கை நூலைப் படிக்க இயலும். அவ்விடத்திய மௌன போதத்தினால் உன் ஐயங்கள் அகலும். அங்கே போவதனால் இடையறாது சேவைக்கர்மம் புரிந்துகொண்டிருக்கும் பொழுதே மனம் எப்படி அமைதியாய் இருக்க முடிகிறதென்பது விளங்கும். புறத்தே கர்மங்கள் வெகுவாய் நடந்து கொண்டிருக்கையிலேயே உள்ளத்தில் யாழ் எவ்வாறு இடையறாது இசைத்துக் கொண்டிருக்கும் என்பதை உணர்வாய்" என்கிறார்.

ஞாயிறு, 13–3–'32

### ஐந்தாம் அத்தியாயம்

## இருமுக அகர்மநிலை : யோகமும் சந்நியாசமும்

### (17) புறக்கர்மம்–மனத்தின் கண்ணாடி

சம்சாரம் மிகவும் பயங்கரமானது. 'சம்சார சாகரம்' என்று அதைக் கடலுக்கு ஒப்பிடுவதுதானுண்டே. கடலில் எங்கும் நீர்; சம்சாரத்தின் நிலையும் அதுவே, எங்கும் பசுமையாய்த் தோன்றுகிறது. ஒருவன் வீடு வாயில்களைத் துறந்து பொதுஜன சேவையில் இறங்குவானாயின், அங்கும் அவனுக்குத் தன் அங்கங்கள் அனைத்துடன் சம்சாரமே எதிர்ப்படுகிறது. ஒருவன் ஒரு குகையில் போய் அமருவானாயின் அவனது ஒட்டைக் கோவணத்திலேயே உலகம் நிரம்பி நிற்கிறது; அக் கோவணமே அவனது உடைமையின் தொகுப்பாகி விடுகிறது.

ஒரு சிறிய காகித நோட்டில் 1000 ரூபாய் அடங்கிவிடுவதைப் போல அச் சிறிய கோவணத்தில் அளவிடமுடியாத பாசம், பற்று நிரம்பிவிடு கிறது. வீடு வாயிலைத் தகர்த்து, அதன் பரப்பைக் குறைத்துக் கொண்டு விட்டதனாலேயே உலகம் குறுகி விடுவதில்லை. $\frac{10}{25}$ என்று சொன்னாலும் $\frac{2}{5}$ என்று சொன்னாலும் மதிப்பு ஒன்றே. வீட்டிலிருந்தாலும் சரி, காட்டில் போய் இருந்தாலும் சரி பற்று அல்லது பாசம் பக்கத்தில் இருந்து கொண்டே வருகிறது; சம்சாரம் ஒரு சிறிதும் குறைவதில்லை. இரண்டு யோகிகள் இமாலயத்தின் குகையில் போய் அமர்ந்தாலும் ஒருவர் மற்றவர் புகழைக் கேட்கச் சகிப்பதில்லை. பொதுஜன சேவையிலும் இதே காட்சியைத்தான் காண்கிறோம்.

இவ்வாறு இச் சம்சாரப் பிரபஞ்சம் விடாமல் பற்றிக்கொண்டே வருவதால் சுதர்மம் புரிதல் என்ற வரம்பினுள் இருந்துவந்தபோதிலும் சம்சாரத்திலிருந்து நாம் விடுபடுவதில்லை. பல அகடவிகடங்கள் செய் வதை விட்டுவிட்டோம், சிக்கல்களைக் குறைத்துக் கொண்டு விட்டோம், சம்சாரப் பிரபஞ்சத்தைப் பெயரளவுக்கே வைத்துக் கொண்டிருக்கிறோம் என்று சொன்னபோதிலும் மமத்துவம் (உடைமை உணர்ச்சி) நம்மை விடுவதில்லை. இராட்சதர்கள் சில சமயம் பேருருவும் சில சமயம் சிற்றுருவும் தாங்குவதைப்போல இச் சம்சாரமும் தன் உருவை மாற்றிக் கொள்கிறது. சிறியவர்களாய்த் தோன்றினும் பெரியவர்களாய்க் காணப் படினும் அவர்கள் இராட்சதர்கள்தாமே! இவ்வாறே தவிர்க்கமுடியாத ஒன்று அரண்மனையிலிருந்தாலும் குடிசையிலிருந்தாலும் ஒன்றே. சுதர்மமென்ற தனையிட்டுச் சம்சாரத்தைச் சம எடையில் வைத்துக் கொண்ட போதிலும் அங்கும் பல தொந்தரவுகள் தோன்ற, உன் மனம் அதிலும் அலுப்புற்றுவிடும். அங்கும் பல ஸ்தாபனங்களுடனும் நபர் களுடனும் உனக்குத் தொடர்பு ஏற்பட, நீ சலிப்புறுவாய். 'இதென் னடா ஆபத்தில் வந்து சிக்கிக் கொண்டோமே!' என்று சொல்லத் தொடங்குவாய். ஆனால் உன் மனம் அப்பொழுதுதான் உரை கல்லில் சரியாய் உரைக்கப்படும். சுதர்மத்தை அனுஷ்டிப்பதனாலேயே பற்றற்ற நிலை கைகூடிவிடாது; கர்மத்தின் பரப்பைக் குறைத்துக் கொள்ளுதலே பற்றற்ற நிலை ஆகிவிடாது.

அப்படியானால் பற்றற்ற நிலை எப்படிக் கைகூடும்? அதற்கு மனம் முழுமையும் ஒன்றி முயலவேண்டும். மனத்தின் உதவியில்லாத வரை எந்த விஷயமும் கைகூடாது. பெற்றோர் தம் பிள்ளையை ஒரு (கல்வி) ஸ்தாபனத்தில் சேர்க்கிறார்கள். அவன் அங்கே காலையில் எழுந்து சூரிய நமஸ்காரம் செய்கிறான்; தேனீர் அருந்துவதில்லை. ஆனால் வீட்டிற்கு

மலமாகவே கடைத்தேறிவிட, ‘ நான், நான் ’ என்று ஓலமிடும் பண்டி தரும் ஞானிகளும் கேட்பாரற்று மூலையிற்கிடப்பார்கள்!

## (46) வாழ்க்கை முழுவதையும் கடவுள்மயமாக்கலாம்

நம் அன்றாட வாழ்க்கையில் கழியும் ஒவ்வொரு கணமும் சாதாரண மானதாய்த் தோன்றினும் உண்மையில் அது அத்தகையதல்ல; அதில் பெரிய பொருள் பொதிந்திருக்கிறது. வாழ்க்கை முழுவதும் ஒரு பெரிய யக்ஞ கர்மமே. உனது உறக்கம் என்பது என்ன? அது ஒரு சமாதி. எல்லாவகைப் போகங்களையும் நாம் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து விட்டுத் தூங்குவோமாயின் அத் தூக்கம் சமாதியேயல்லாது வேறு என்ன? நம்மிடை ஸ்நானம் செய்யும்பொழுது ‘புருஷ ஸூக்தம்’ சொல்லும் வழக்கமுண்டு. செய்யும் இந்த ஸ்நானத்திற்கும் புருஷஸூக் தத்திற்கும் என்ன சம்பந்தமென்று எண்ணிப் பாருங்கள். பார்க்க விரும்பினால் நிச்சயம் புலனாகும். ஆயிரம் கைகளும், ஆயிரம் கண் களும் உள்ள விராட் புருஷனுக்கும் என் இந்த ஸ்நானத்திற்கும் என்ன சம்பந்தம்? சம்பந்தமென்னவென்றால், நீ எடுத்துத் தலையில் ஊற்றிக் கொள்ளும் அச் செம்பு நீரில் ஆயிரக்கணக்கான துளிகளிருக்கின்றன. அத் துளிகள் உன் தலையைக் கழுவி உன் பாவத்தைப் போக்குகின்றன. உன் தலைமீது ஆண்டவனது ஆசியே பொழிவதுபோல் ஆகும் அது. ஆண்டவனது ஆயிரம் கைகளும் ஆயிரம் நீரொழுக்குகளை உன்மீது பொழிந்து கொண்டிருக்கின்றன. இத் துளிகளின் மூலமாய் ஆண்ட வனே உன் தலையின் அகத்திலுள்ள அழுக்கையும் கழுவிக்கொண்டிருக் கிறான். இத்தகைய தெய்வீக பாவனையை அந்த ஸ்நானத்தில் புகுத்துவா மானால் அந்த ஸ்நானம் வேறு தன்மை பெறவும், அதில் அளவிட முடியாத சக்தி வந்து சேர்ந்துகொள்ளும்.

இப் பாவனையுடன், அதாவது இது ஆண்டவனுடையது என்ற உணர்ச்சியுடன் ஒரு சாதாரணக் காரியம் செய்த போதிலும், அது புனிதமாகிவிடுகிறது. இது அனுபவத்தில் உணரப்பட்டதொன்று. நம் வீட்டிற்கு வந்திருப்பவர் ஆண்டவனே என்று மனத்தில் சிறிது எண்ணிக் கொண்டு பாருங்கள். சாதாரணமாய் பெரிய மனிதன் ஒருவன் நம் வீட்டிற்கு வந்தாலே நம் வீட்டை எவ்வளவு துப்புரவெல் லாம் செய்கிறோம், விருந்துணவெல்லாம் தயாரிக்கிறோம்! வருவோன் ஆண்டவனென்று எண்ணத் தொடங்குவோமானால் நம் பாவனை எந்த அளவுக்கு மாறக்கூடுமென்று நீங்களே சொல்லுங்கள். கபீர் துணி

நெய்துகொண்டிருப்பார்; அதிலேயே ஆழ்ந்து போகும் அவர் ஆண்டவ னுக்கு அணிவிப்பதற்கே தாம் ஆடை நெய்வதாய்க்கொண்டு,

"झिनी झिनी झिनी झिनी बिनी चदरिया।"

(ஜீனீ ஜீனீ ஜீனீ ஜீனீ பினீ சதரியா)

என்று பாடியவராய் மெய்மறந்து போவார். ரிக்வேதத்தில் வரும் ரிஷி

"वस्त्रेव भद्रा सुकृता सुपाणी"

(வஸ்த்ரேவ பத்ரா ஸுக்ருதா ஸுபாணீ)

"நான் எனது இந்த ஸ்தோத்திரத்தை அழகிய கைகளினால் நெய்த ஆடையைப்போல் ஆண்டவனை ஏற்கச் செய்கிறேன்" என்கிறார். கவிஞன் இயற்றும் ஸ்தோத்திரம் ஆண்டவனுக்காகவே. கைக் கோளன் நெய்யும் ஆடையும் ஆண்டவனுக்கென்றே நெய்கிறான். உள்ளத்தைப் போய்த் தொடும் எத்தகைய கற்பனை! சித்தத்தைத் தூய்மைப்படுத்தி உள்ளத்தைத் தள்ளி எழச் செய்யும் எத்தகைய தூய கருத்துக்கள்! இப்பாவனை வாழ்க்கையில் வந்து விடுமானால் அது எவ்வளவு தூய்மை பெறும்! இருளில் மின்னல் ஒளிரும் பொழுது ஒரு கணத்தில் அவ்விருளெல்லாம் ஒளியாகிவிடுகிறது. இருள் மெல்ல மெல்லவா ஒளியாகிறது? இல்லை. ஒரே கணத்தில் அகமும் புறமும் எல்லாம் மாறிப்போகின்றன. அவ்வாறே ஒவ்வொரு காரியத்தையும் ஆண்டவனுடன் இணைத்ததும் வாழ்க்கையில் அற்புதமான சக்தி தோன்றிவிடும், ஒவ்வொரு காரியமும் தூயதாகத் தொடங்கிவிடும், வாழ்க்கையில் உற்சாகம் பரவும். இன்று நம் வாழ்க்கையில் உற்சாகம் எங்கே இருக்கிறது? நாம் வாழ்ந்திருப்பது சாவு வராமையினாலேயே! எங்கும் உற்சாகத்திற்குப் பஞ்சம். கலையில்லா ஒப்பாரியாயிருக்கிறது வாழ்க்கை. ஆனால் நம் காரியங்களனைத்தையும் ஆண்டவனுடன் இணைத்து விடுவதென்று சிறிது எண்ணிப்பாருங்கள். பிறகு உங்கள் வாழ்க்கை இனியதாய், மதிப்பிற்குரியதாய் ஆவது தெரியும்.

ஆண்டவனது ஒரு பெயரினால் உடனே மாறுதல் ஏற்படுகிறது. இதில் ஐயப்பாடு தேவையில்லை. 'இராமா' என்று சொல்லுவதனால் என்ன ஆகப்போகிறது என்று கூறுதீர்கள். சிறிது சொல்லித்தான் பாருங்களேன். மாலை நேரத்தில் உழவன் வேலையை முடித்துவிட்டு வீட்டிற்கு வந்துகொண்டிருக்கிறான். வழியில் அவன் ஒரு பிரயாணியைப் பார்க்கிறான். அவன் பிரயாணியிடம்—

"பிரயாணம் செய்யும் அண்ணா! ஏ நாராயணா, சிறிது நில்லும். பொழுது சாய்ந்துவிட்டது. பகவானே, என் வீட்டிற்கு எழுந்தருளும்"

ன்கிறான். அவ்வுழவன் வாயிலிருந்து இம்மாதிரியான சொற்கள் வெளி
ந்ததும் அப் பிரயாணியின் தன்மையே மாறிவிடுகிறதா இல்லையா,
ாருங்கள். அப் பிரயாணி வழிப்பறி செய்யும் திருடனாயிருப்பினும்
ல்லவனாகிவிடுவான். இம் மாறுபாடு பாவனை காரணமாக ஏற்படுவது.
ாவனையிலேயே எல்லாம் பொதிந்திருக்கிறது. வாழ்க்கையே பாவனை
யந்தான். இருபது வயதான பிற வீட்டுப் பையனொருவன் நம்
ீட்டுக்கு வருகிறான். தந்தை அவனுக்குத் தம் பெண்ணைக் கொடுக்
ிறார். அப் பையனுக்கு வயது இருபதே ஆகியிருந்த போதிலும்,
ம்பது வயதான அப் பெண்ணின் தந்தை அவன் காலைத் தொடுகிறார்.
தெற்கு என்ன அர்த்தம்? பெண்ணை அளிக்கும் அக் காரியம் எவ்வளவு
னிதமானது! எவனுக்கு அவள் அளிக்கப் படுகிறாளோ அவன்
ஆண்டவனாகவே காணப்படுகிறான். மருமகனிடம் கொள்ளப்படும் இப்
ாவனையையே இன்னும் மேலே கொண்டு போங்கள், முன்னே கொண்டு
சல்லுங்கள்.

இவ்வாறு பொய்க்கற்பனைகள் செய்துகொள்வதால் பயன் என்ன
வென்று சிலர் சொல்லலாம். எடுத்ததுமே உண்மை, பொய் என்றெல்
ாம் சொல்லாதீர்களென நான் சொல்லுகிறேன். முதலில் பயின்று
பாருங்கள், அனுபவம் பெறுங்கள்; அதன் பின் உங்களுக்கு உண்மை
ும் பொய்யும் தெரியவரும். அக் கன்னிகாதானத்தில் சொல்லளவோடு
ில்லாது மருமகன் உண்மையில் பரம்பொருளே என்று உணர்ந்தீர்க
ளானால் எவ்வளவு மாறுதல் தோன்றுகிறதென்று தெரியவரும். இப்
புனித பாவனையின் பயனாகக் குறித்த பொருள் அது ஏற்கெனவே இருந்த
தற்கும் பின் அது ஆவதற்கும் ஆகாயத்திற்கும் பாதாளத்திற்குமுள்ள
வேற்றுமை பெறும். தீயவன் நல்லவனாயும், தகுதியற்றவன் தகுதி
புள்ளவனாயும் மாறிவிடுவான். பால்யா* என்ற வேடன் மாறியது இதே
வகையில்தானே. வீணையின் மீது விரல்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன;
வாயினால் நாராயண நாமஜபம் நடந்துகொண்டிருக்கிறது. அவன்
கொல்லுவதற்கு ஓடிவருகிறான். அப்பொழுதும் அமைதி சிறிதேனும்
கலைவதற்கு மாறாக, அவன்பக்கம் அன்புடன் பார்க்கிறார் அவர். பால்யா
இத்தகைய காட்சியை இதற்குமுன் கண்டதே இல்லை. அவன் அக்கணம்
வரை இரண்டேவகைப் பிராணிகளைத்தான் பார்த்திருந்தான். ஒன்று,
அவனது வில்லையும் அம்பையும் பார்த்து ஓடுவது, மற்றதோ அவன்
மீது எதிர்த்துப் பாய்வது. ஆனால் நாரதரோ அவனைக் கண்டதும்
ஓடவுமில்லை, அவனை எதிர்க்கவுமில்லை; சாந்தமாய் நின்று கொண்

* வான்மீக முனிவரின் ஆரம்பகாலப் பெயர்.

டிருந்தார். பால்யாவின் அம்பும் வில்லும் அப்படியே நின்றுவிட்ட நாரதரோ இமையையும் அசைக்கவில்லை; கண்களையும் மூடவில்லை இனிய கீதம் எப்பொழுதும்போல் ஒலித்துக்கொண்டிருந்தது. நாரத பால்யாவிடம், "உன் அம்பு ஏன் நின்றுவிட்டது?" என்று கேட்டா அதற்கு பால்யா, "தங்கள் சாந்தத்தைப் பார்த்து" என்று பதி சொன்னான். நாரதர் பால்யாவின் தன்மையையே மாற்றிவிட்டா இம் மாறுபாடு உண்மையா, பொய்யா?

உண்மையில் ஒருவன் துஷ்டன் என்பதைத் தீர்மானிப்பது யார் உண்மைத் துஷ்டன் உன் எதிரில் தோன்றினாலும், இவன் ஆண்டவனே என்று பாவித்துக்கொள்ளேன். அவன் துஷ்டனாயிருப்பினும் மகாத்ம வாய் மாறிவிடுவான். அப்படியானால் பொய்யாகவே இவ்வாறு பாவி பதா? அவன் துஷ்டனே என்று யாருக்குத் தெரியுமென்று நான் கேட்கிறேன். சிலர், "நல்லவர்கள் தாம் நல்லவர்களாயிருப்பதா அவர்களுக்கு எல்லாமே நல்லதாய்த் தோன்றுகிறது. ஆனால் உண்மை யில் இவ்வாறு ஒன்றும் இருப்பதில்லை" என்கிறார்கள். அப்படியானா உனக்குத் தோன்றுவதைத்தான் உண்மை என்று எப்படிக் கொள்வது துஷ்டர்களிடம் மட்டுமே சிருஷ்டியைப் பற்றிப் பூரணமாய் அறிவதற்கு வேண்டிய சாதனங்கள் உள்ளன போலும்! சிருஷ்டி நல்லதுதான் ஆனால் நீ துஷ்டனாயிருப்பதால் அது உனக்குத் தீயதாய்த் தோன்று கிறது என்று ஏன் சொல்லக் கூடாதோ? சிருஷ்டி என்னவென்பதை பார். அது ஒரு கண்ணாடி. நீ இருப்பதுபோலவேதான் உனது பிரதி விம்பம் எதிரிலுள்ள சிருஷ்டியில் உனக்குத் தோன்றும். நமது கண் ணின் பார்வையைப் போன்றேதான் சிருஷ்டியின் உருவம் காண படும். ஆகையால் இச் சிருஷ்டி நல்லது, புனிதமானது என்று கொள் உன் சாதாரணக் காரியங்களிலும் இத்தகைய பாவனை இருக்குமாறு செய். பிறகு எத்தகைய அற்புதம் நிகழ்கிறது பார்! பகவான் இதே விஷயத்தை அறிவுறுத்த விரும்புகிறார்:

"ஆதலா லீவநோற்ப வுண்பவென் றிவைகளேகொண்
டீதெலா மெனக்காய்த் தந்தா லென்னையே யெய்தலாமால்."

நீ செய்யும் எல்லாவற்றையும் அப்படியே பகவானிடம் சமர்ப்பித்துவிடு

என் தாய், என் பிள்ளைப் பிராயத்தில் ஒரு கதை சொல்வதுண்டு விஷயம் வேடிக்கையானது தான், ஆனால் அதில் அடங்கியுள்ள கருத்து மிகவும் உயர்ந்தது. ஒரு பெண் இருந்தாள். அவள் தான் எதை செய்தாலும் கிருஷ்ணார்ப்பணமாக்குவதென்ற உறுதி கொண்டிருந் தாள். அவள் செய்து வந்ததென்ன? அடுப்பை மெழுகிவிட்டு எஞ்சுய

ணத்தை உருண்டையாய் உருட்டி வெளியே எறியும்போது கிருஷ் ர்ப்பணம் என்பாள். இதனால் அந்தச் சாண உருண்டை அங் நந்து எழும்பிக் கோயிலிலுள்ள கிருஷ்ண விக்கிரகத்தின் முகத்தில் பாய் ஒட்டிக்கொள்ளும். அர்ச்சகர் பாவம், விக்கிரகத்தைத் தினமும் ழுவிக் கழுவிக் கை சளைத்துப் போய்விட்டார். அவருக்கு என்ன சய்வதென்றே புரியவில்லை. இறுதியில் இது அப் பெண்ணின் வேலை ன்று தெரியவந்தது. சரி, அப் பெண் உயிரோடிருக்கும் வரை விக்கிரகம் ப்புரவாய் இருத்தல் சாத்தியமில்லை! ஒரு நாள் அப் பெண் நோயுற் ள்; சாகுந்தருணம் நெருங்கிவிட்டது. அவள் சாவையும் கிருஷ்ணார்ப் ணம் ஆக்கிவிடவே, கோயிலிலிருந்த விக்கிரகம் வெடித்து விழுந்து ட்டது. பெண்ணை அழைத்துப் போவதற்காக ஆகாயத்தில் விமானம் ந்து நின்றது. அவள் விமானத்தையும் கிருஷ்ணனுக்கு அர்ப்பணம் சய்து விட்டாள். வந்த விமானம் கோயிலில் போய் மோதிச் சுக்கு ாருகி விட்டது. சுவர்க்கமும் ஸ்ரீ கிருஷ்ணனின் நினைவின் முன் வீணே.

நாம் நல்லதோ, தீதோ எக் காரியம் செய்யினும், அவை எல்லாவற் றயும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்து விடுவதனால் அவைகளில் ரு புதிய சக்தி தோன்றுகிறது என்பதே இதன் கருத்து. மக்காச் சாளம் சிறிது மஞ்சளும் சிவப்பும் கலந்த நிறமுள்ளது. ஆனால் தையே மணலில் இட்டுப் பொரிக்கும்பொழுது எவ்வளவு நல்ல பொரி ாகி விடுகிறது! நல்ல வெண்மையும் தும்பைப் பூவைப் போன்ற மன்மையும் உள்ள அப் பொரியை இச் சோளத்தின் பக்கத்தில் வைத் ால் இரண்டிற்கும் எவ்வளவு வேற்றுமை! ஆனால் அப் பொரி இச் சாளத்திலிருந்தே ஆனது என்பதில் ஐயமில்லை. இவ் வேறுபாடு வறும் தீயினால் ஏற்பட்டது. இவ்வாறே அக் கெட்டியான சோளத்தை யந்திரத்திலிட்டு அரைப்பாயானால் அது மிருதுவான மாவாகிவிடும். யின் சேர்க்கையினால் பொரியானதுபோல் இயந்திரத்திலிட்டு அரைத்த னால் மிருதுவான மாவாகி விட்டது. இவ்வாறே நமது எந்தச் சிறு ாரியத்திலும் ஆண்டவன் நினைவைச் செலுத்தும்பொழுது அதன் ருவே மாறிவிடுகிறது. பாவனையினால் மதிப்பு உயர்ந்துவிடுகிறது. ந்தச் சாதாரணக் கொன்றைப் பூவையும், வில்வ இலைகளையும், துளசிக் காழுந்தையும், அருகம்புல்லையும் இழிந்தவையென்று நினையாதே.

"சேர்ந்ததால் விட்டலின்பேர் சார்ந்தது இனிப்பு மங்கே" *

வ்வொரு விஷயத்திலும் பகவானை இணைத்து, பின் அது எப்படியிருக் றதென்று பார். இந்த இராமன் என்ற கலவையைப் போன்றதொன்று

* तुका म्हणे चवी आले । जें का मिश्रित विठ्ठलें

உண்டா? இத் தெய்வீகக் கலவையை விடச் சிறந்ததொன்றை நீ எ
ருந்து கொணர்வாய்? ஆண்டவனென்ற இக் கலவையை உன
ஒவ்வொரு காரியத்திலும் சேர். பிறகு எல்லாம் அழகும் இனிமை
பெறும்.

இரவு எட்டு மணிக்குக் கோயில் தீபாராதனை நடக்கையில், சாம்
ராணி மணம் வீசிக்கொண்டிருக்கையில், விளக்கொளி செய்யப்ப
கையில், கற்பூர ஆரத்தி நடைபெறுகையில், நமக்கு உண்மை
ஆண்டவனை நம்முன் காண்பதுபோன்ற உணர்ச்சி ஏற்படுகிற
பகவான் பகல் முழுவதும் விழித்திருந்தார்; இப்பொழுது உறங்
வேண்டிய சமயம். பக்தர்,

"இனிது கண் வளர்ந்திடுவாய் கண்ணு!" †

என்று பாடுகிறார்.

ஒரு சந்தேகாதீமா, "போ ஐயா, ஆண்டவன் எங்கேயாவ
தூங்குவதுண்டா?" என்று கேட்கிறார். பகவான் என்னதான் செய்
மாட்டார்? முட்டாளே, பகவான் தூங்குவதில்லை, விழிப்பதில்லை என்று
இந்தக் கல் தூங்கவும் விழிக்கவும் செய்யுமா? அடே, பகவான்தா
தூங்குகிறார், பகவான்தான் விழிக்கிறார், பகவான்தான் உண்டு உடுத்
கிறார். துளசிதாசர் பொழுது புலர்ந்ததும் பகவானை எழுப்புகிற
வேண்டுகிறார்—

"ரகுநாதா, குழந்தாய், விழித்தெழு! பட்சிகள் வனத்தில் ஒலித்தன!"
தம் சகோதர சகோதரிகளை, ஆண் பெண் அனைவரையும் இராமச்சந்தி
னென்றே கொண்டு அவர், "என் இராமர்களே, எழுவீர்" என்கிற
எவ்வளவு அழகிய கருத்து! இல்லையேல், ஓர் உணவு விடுதியை எடு
துக்கொள்ளுங்கள்; அங்குள்ள பிள்ளைகளை எழுப்பும்பொழுது, "எ
கிறீர்களா, இல்லையா?" என்று அதட்டுகிறார்கள். மங்களமான கா
நேரத்தில் இத்தகைய கடூரமான குரல் நன்றாயிருக்கிறதா? விசுவ
மித்திரரது ஆசிரமத்தில் இராமச்சந்திரர் தூங்கிக்கொண்டிருக்கிற
விசுவாமித்திரர் அவரை எழுப்புகிறார். வான்மீக ராமாயணத்தில் அ
இவ்வாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது:

"रामेति मधुरां वाणीं विश्वामित्रोऽभ्यभाषत ।
उत्तिष्ठ नरशार्दूल पूर्वा सन्ध्या प्रवर्तते ॥"

(ராமேதி மதுராம் வாணீ விச்வாமித்ரோsப்ய பாஷத ।
உத்திஷ்ட நரசார்தூல பூர்வாஸந்த்யா ப்ரவர்த்ததே ॥)

† आतां स्वामी सुखें निद्रा करा गोपाळा

"குழந்தாய் ராமா, எழு!" என்று இனிய குரலில் விசுவாமித்திரர் வரை எழுப்புகிருர். இந்த முறை எவ்வளவு இனிது, உணவு விடுதியில் ழுட்பும் அந்த முறை எவ்வளவு கடூரம்! பாவம், உறங்கும் பிள்ளை நக்குத் தங்கள் ஏழு ஜன்ம விரோதி வந்து எழுப்புவதாகவே தோன் கா? முதலில் மெல்லக் கூப்பிடு, பிறகு சிறிது உரக்கக் கூப்பிடு. ஞல் கடூரம், கடுமை சிறிதும் கூடாது. எழாவிடில் பத்து நிமிஷம் ழ்த்தி மீண்டும் சென்று எழுப்பு. இன்று இல்லையேல் நாளை கட்டாயம் ழந்து விடுவானென்று நம்பு. அவனை எழுப்ப இனிய கீதங்களை, நம் ள்ளியெழுச்சிப் பாடல்களை, தோத்திரங்களைச் சொல்லு. தூங்குபவனை ழுப்புதல் என்பது ஒரு சாதாரணக் காரியம். ஆனல் நாம் அதையும் வ்வளவோ காவியமயமாய், உள்ளம் கலந்ததாய், அழகாய்ச் செய்ய மே! பகவானையே எழுப்புவதுபோல் ஆக்கிவிடலாமே! ஆண்டவனது ர்த்தியை மெதுவாகவே எழுப்பவேண்டும். தூக்கத்திலிருப்பவனை ழுப்புவதும் ஒரு சாத்திரமே.

தன் காரியங்கள் அனைத்திலும் இக் கருத்தைப் புகுத்து. போதனு த்திரத்திலோ இந்தக் கற்பனை மிகவும் தேவை. பிள்ளைகள் யார்? ண்டவனது உருவங்களே. நான் இந்தத் தேவதைகளுக்குப் பணி டை செய்துகொண்டிருக்கிறேன் என்ற பாவனையே ஆசிரியருக்கு ருக்கவேண்டும். அப்பொழுது அவர் பிள்ளைகளிடம், "போ வீட்டிற்கு! ந்த மணி முழுமையும் நில், நீட்டு கையை! சட்டை துணியெல்லாம் வ்வளவு அழுக்கு! கை, மூக்கு எல்லாம் என்ன ஆபாசம்!" என் றல்லாம் அதட்டமாட்டார். அதற்கு மாருக, மெதுவாய் மூக்கைத் டைத்துவிடுவார்; அழுக்குத் துணியைத் துவைத்துக் கொடுப்பார்; ழிந்த துணியைத் தைத்துக் கொடுப்பார். ஆசிரியர் இவ்வாறெல்லாம் சய்தால் அதற்கு நல்ல விளைவு உண்டாகும். அடியினுலும் கண்டிப்பி லும் எங்கேனும் நன்மை விளைந்ததுண்டா? பிள்ளைகளும் இதே தய்விக பாவனையுடன் ஆசிரியரிடம் நடந்துகொள்ள வேண்டும். ஆசிரியர் சீடர்களைக் கடவுளர் என்றும், சீடர்கள் ஆசிரியரைக் கடவு ளன்றும் கொள்ளவேண்டும். இத்தகைய பாவனை பரஸ்பரம் இருந்து ருமாஞல் கல்வி எவ்வளவு சிறந்ததாய் அமையும்! பிள்ளைகளும் கவான், ஆசிரியரும் பகவான்! பிள்ளைகள், 'இவர் நம் ஆசிரியர் ல்ல, பகவான் சங்கரரே; நாம் அவரது போதனை அமுதைப் பருகி ருகிருேம், அவருக்குப் பணி புரிந்து அறிவு விளக்கப் பெறுகிருேம்' ன்று எண்ணுவார்களாஞல் அவர்கள் இவரிடம் எப்படி நடந்துகொள் ர்களென்று நீங்களே சொல்லுங்கள்.

## (47) பாவ பயம் இல்லை

எல்லாவிடங்களிலும் ஆண்டவனிருக்கிருனென்ற பாவனை சித்தத்தில் பதிந்துவிடுமாயின் பிறகு நாம் பரஸ்பரம் நடந்துகொள்ள வேண்டிய நீதிமுறை நம் உள்ளத்தில் தானே தோன்றத் தொடங்கும். சாத்திரம் படிப்பதற்கு அவசியமே ஏற்படாது. அப்பொழுது எல்லா குறைகளும் விலகிப்போம், பாவம் ஓட்டம் பிடிக்கும், தீமைகளின் இருள் அகலும்.

துகாராம்,

"சொல்லிடு அரியின் பேரை, சுதந்திரம் எய்தநீயும்
அல்லல்செய் பாவம் நீங்கும், அருகுவந்தமாவான் தானும்" *

என்று சொல்லி யிருக்கிருர். உனக்குப் பாவம் செய்ய அனுமதி கிடைத்துவிட்டது. நீ பாவம் செய்து அலுக்கிருயா, ஹரிநாமந்தான் உன் பாவங்களை அழித்தழித்துச் சளைக்கிறதா என்று நான் பார்க்கிறேன். ஆண்டவன் பெயரினெதிரில் நிற்கக்கூடிய அவ்வளவு சக்தி வாய்ந்த பாவம் தான் எது? உனக்கு எவ்வளவு இஷ்டமோ அவ்வளவு பாவம் புரி ; பூரண சுதந்திரம் உனக்கு அளிக்கப்பட்டுவிட்டது. ஆண்டவன் பெயருக்கும் உன் பாவங்களுக்கும் மற்போர் நடக்கட்டும். அடே, இந்த ஆண்டவன் பெயருக்கு இப் பிறவியில் மட்டுமல்ல, எண்ணிலடங்காத எத்தனையோ பிறவிகளில் செய்த பாவங்களையும் ஒரிமைப் பொழுதில் பொசுக்கிச் சாம்பலாக்கும் சக்தி உண்டு. குகையில் எத்தனையோ யுகங்களாய் இருள் மண்டியிருந்தும் ஒரு தீக்குச்சியைக் கொளுத்திப் பிடித்ததும் அவ்விருள் ஓடிப்போய்விடுகிறது ; சற்றுமுன் இருளாயிருந்தது இப்பொழுது ஒளிமயமாகிவிடுகிறது ; பாவம் எவ்வளவு பழையதோ அவ்வளவுக்கு அது விரைவாய் அழிந்துபோகும். ஏனெனில் அது அழிவதற்குச் சித்தமாயிருக்கிறது. பழைய விறகு வெகு விரைவில் எரிந்து சாம்பலாகும்.

ராமநாமத்தின் அருகில் பாவத்தினுல் நிற்கவே இயலாது. குழந்தைகள் இராமன் பெயரைச் சொன்னதும் பூதம் ஓடிப்போகிறதென்று சொல்லுகிருர்கள் அல்லவா? நான் சிறு வயதில் இரவில் மயானத்திற்குப் போய்வருவதுண்டு ; மயானத்தில் போய் ஆணியை அடித்து வரும் பந்தயம் வைப்பதுண்டு. இரவில் அங்கே பாம்பிருக்கும், வழியில் முள் கிடக்கும், நாற்புறமும் ஒரே இருளாயிருக்கும் ; ஆயினும் அதெல்லாம்

---

* चाल केलासी मोकळा । बोल विठ्ठल वेळोवेळां
तुज पाप चि नाहीं ऐसें । नाम घेतां जवळी वसे

ப்பொழுது ஒன்றும் தோன்றியதில்லை. பேய் பிசாசு என்பவைகளோ ண்ணில் பட்டதே யில்லை. பேயும் பிசாசும் மனப் பேய்கள் தாமே! கையால் அவைகளை எங்கே காணமுடியும்? ஒரு பத்து வயதுப் பயனுக்கு மயானத்திற்குப் போய் வரும் தைரியம் எங்கிருந்து ந்தது? ராம நாமத்திலிருந்தே. சத்திய உருவினனுன பரம்பொரு ன் மகிமையாகும் இது. ஆண்டவன் என்னருகிலிருக்கிருன் என்ற வனை இருக்குமாயின் உலகமே புரண்டு போவதாயினும் பக்தனுக்குச் றிதும் பயம் தோன்ருது. அவனை எந்த இராட்சதன் சாப்பிட்டுவிட டியும்? இராட்சதன் ஒருவன் அவன் உடலைத் தின்று ஜெரித்துவிட் லும் அவனுக்குச் சத்தியம் ஜீரணமாகாது. சத்தியத்தை அழிக்கக் டிய சக்தி உலகில் எங்கும் இல்லை. ஆண்டவன் பெயரினெதிரில் வத்தினுல் சிறிதுநேரங்கூட நிற்கமுடியாது. ஆகையால் ஆண்டவ டம் மனத்தைச் செலுத்து. அவன் கருணையைப் பெறு. எல்லாக் மங்களையும் அவனுக்கு அர்ப்பணம் செய்துவிடு. நீ அவனுடைய ஆகிவிடு. தன் கர்மங்களனைத்தையும் ஆண்டவனுக்கு நிவேதனமாக ர்ப்பணம் செய்யவேண்டுமென்ற பாவனையை மேன்மேலும் தீவிர க்கிக்கொண்டே போவாயாகில் இழிந்த வாழ்வும் தெய்விக வாழ்வாகும்; ின வாழ்வும் அழகு பெற்றிலங்கும்.

## (48) சிறிதெனினும் இனிது

'पत्रं पुष्पं फलं तोयम्' (பத்ரம் புஷ்பம் பலம் தோயம்) என்றபடி துவாயிருந்தாலும் அதனுடன் பக்தியின் கனிவு இருக்குமாயின் ாதும். எவ்வளவு கொடுத்தாய், எவ்வளவு காணிக்கையளித்தாய் ன்பதில் அல்ல கணக்கு; எந்தப் பாவனையுடன் அளித்தாய் என்றே னக்கிடப்படும். ஒரு சமயம் ஒரு பேராசிரியரிடம் நான் பேசிக்கொண் ருந்தேன், போதனைச் சாத்திரத்தைப் பற்றி. எங்கள் இருவரின் பிப்பிராயங்களினிடையே ஒற்றுமையில்லை. இறுதியில் பேராசிரியர், சுவாமி, நான் பதினெட்டு வருஷங்களாய் இந்த உத்தியோகம் பார்க் றனே" என்ருர். பேராசிரியர் தம் யுக்தி வாதங்களினுல் என் அபிப் ராயத்தை மாற்றியிருக்கவேண்டும்; அவ்வாறு செய்யாது 'நான் வ்வளவு வருஷங்களாகப் போதனைத் தொழில் செய்து வருகிறவ பிற்றே' என்று சொல்லவே, நான் அவரிடம் வேடிக்கையாய், திினெட்டு வருஷம் ஓர் எருது ஓர் இயந்திரத்தைச் சுற்றிக்கொண்டே ந்தால், அது இயந்திர சாத்திரத்தில் வித்துவானுகிவிட முடியுமா?" று கேட்டேன். இயந்திர சாத்திரத்தைத் தெரிந்துகொள்ளுது

லென்பது வேறு விஷயம், கண்ணை மூடிக்கொண்டு மாட்டைப் இயந்திரத்தைச் சுற்றிவருதல் வேறு விஷயம். போதனைச் சாத் தைப் புரிந்துகொள்ளல் வேறு, போதித்தல் என்ற சுமையைத் தாங் கொண்டிருத்தல் வேறு. சாத்திரம் தெரிந்தவன் ஆறு மாதத்தில் பெ கூடிய அனுபவத்தை பதினெட்டு வருஷம் மூட்டை தூக்கி உழை கூலியாளினால் பெறமுடியாது. அதாவது அந்தப் பேராசிரியர் என இந்தத் தொழிலிலேயே தலை நரைகண்டுவிட்டதென்று சொன் ஆனால் தலை நரையினால் உண்மையை நிலைநாட்டவியலாது. இவ்வா ஆண்டவனெதிரில் எவ்வளவு கொண்டுபோய்க் குவித்தோம் என்ப கல்ல சிறப்பு. பேருக்கோ உருவுக்கோ பொருளின் விலைக்கோ அங் மதிப்பில்லை, பாவனை ஒன்றுக்கே மதிப்பு. எதை எவ்வளவு அர்ப்பண செய்தோம் என்ற கேள்வி இல்லை; எப்படி அர்ப்பணம் செய்தே என்பதே கேள்வி. கீதையில் மொத்தம் எழுநூறு சுலோகங்களே இ கின்றன. பத்தாயிரம் சுலோகங்களுள்ள நூல்களும் உண்டு. ஆ ஒரு பொருளின் உருவம் பெரிதாயிருப்பதனாலேயே அதன் உபயே மும் அதிகமாயிருக்குமென்று சொல்லவியலாது. பொருளின் ஆ எவ்வளவு என்பதையே நாம் பார்க்கவேண்டும். வாழ்க்கையில் எத்தனை காரியங்கள் நடந்தன என்பது முக்கியமல்ல; ஆன், எண்ண அர்ப்பணமென்ற அறிவோடு ஒரே ஒரு காரியம் செய்த ஒரினு அதுவே நமக்குப் பூரண இலாபம், அனுபவம் அளித்துவிடுகுகை சமயங்களில் நமக்கு பத்துப் பன்னிரண்டு வருஷங்களில் தெச்சினை அனுபவம் புனிதமான ஒரே கணத்தில் ஏற்படக்கூடும். சற்றுமு

வாழ்க்கையின் சாதாரணக் கருமங்களையும், கிரியைகளை எவ்வ வனுக்கு உரிமையாக்கிவிடுவோமாயின் அதிலிருந்து வாழ்க்னெனி தனித் திறன் தோன்றும், மோட்சம் கைக்கு வந்துவிடுவிரைவ கருத்து. கருமத்தைச் செய்தும் அதன் பயனை விடாது ஆ அர்ப்பணம் செய்தல் என்ற இந்த இராசயோகம் கர்மயோ. கு ஓர் அடி முன்னே போகிறது. கருமயோகம், "கருமம் செறதெ விடு, பயனிடம் ஆசை வையாதே" என்று சொல்லுகிறது. தீதிற் கருமயோகம் முடிந்துவிடுகிறது. இராசயோகமோ, "கருமத்! வ களை விடாதே; எல்லாவற்றையும் ஆண்டவனுக்கு உரிமை முன் அவை புஷ்பங்கள், உன்னை மேலே அழைத்தேகும் சாதல அவைகளை அம் மூர்த்திக்கு அணிவித்துவிடு. ஒரு புறம் மறுபுறம் பக்தியுமாய் ஒன்று சேர்ந்து வாழ்க்கையை அழகுட கொண்டே போ. பயன்களைத் துறவாதே; பயன்களைத் து

டன் இணை" என்கிறது. கருமயோகத்தில் விடப்பட்ட ராசயோகத்தில் சேர்ந்து இணைக்கப்படுகிறது. விதைப்ப எறிவதற்கும் வித்தியாசமுண்டு. விதைக்கப்பட்டது சிறிதா ண்ணமுடியாத அளவு பெருகிப் பயனளிக்கும்; எறியப்பட் னில்லாது போகும். ஆண்டவனிடம் அர்ப்பணம் செய்யப் ம் வயலில் விதைத்த விதை போன்றது; அதனால் வாழ்க்கை லடங்கா ஆனந்தமும் தூய்மையும் ஏற்படும்.

று, 17-4-'32

பத்தாம் அத்தியாயம்

## விபூதி சிந்தனை

### பகீதையின் முற்பகுதி—ஒரு கண்ணோட்டம்

ளே, கீதையின் முற்பகுதி முடிந்தது. பிற்பகுதிக்குப் டிந்த பகுதியின்மீது ஒரு கண்ணோட்டம் விடுதல் நலம். யாயத்தில் கீதை நம் மோகத்தை அழித்து நம்மைச் சுதர் த்த ஏற்பட்டதென்று சொல்லப்பட்டது. இரண்டாம் அத்தி ழ்க்கையின் தத்துவங்களையும் கர்மயோகத்தையும் ஸ்திதப் கண்டோம். மூன்றும், நான்காம், ஐந்தாம் அத்தியாயங் விகர்மம், அகர்மம் ஆகியவை விவரிக்கப்பட்டன. கர்மம் சுதர்மம் செய்தல் என்பது பொருள்; விகர்மம் என் த்தே செய்யப்படும் சுதர்மத்திற்கு உதவியாய் அகத்தில், எய்யப்படவேண்டிய கர்மம் என்பது பொருள். கர்மமும் ருமிக்கச் சேருவதனால் சித்தம் தூய்மை பெற்று, எல்லா தம் கழுவப்பட்டு, வாசனை குறைந்து, விகாரங்களடங்கி, உணர்ச்சிகள் அழிந்துபோகும்பொழுது அகர்மநிலை . இவ்வகர்ம நிலையே இருவகைத்தென்று மேலே சொல் து. ஒரு வகையோ, அல்லும் பகலும் கர்மம் செய்து ந்தும் ஒரு சிறிதும் கர்மம் செய்யாதது போன்றுணர்தல். மற்றொருவகையோ, எதுவுமே செய்யாதிருந்தும் இடை செய்துகொண்டேயிருத்தல். இவ்வாறு அகர்மநிலை இரு றிப்போகிறது. இருவகையாய்த் தோன்றினும் அவை றே. அவைகளுக்குப் பெயர்கள் கர்மயோகம், சந்நி வெவ்வேறாய்க் கூறப்படினும் உள்ளே சார அமிசமாய்

இரண்டிலும் இருப்பது ஒன்றே. அகர்மநிலையே இறுதியிற் பெற
டிய நிலை, போய்ச் சேரவேண்டிய கட்டம். இந்நிலைக்கு மோட்சம்
பெயர் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் கீதையின் முதல்
அத்தியாயங்களில் வாழ்க்கைச் சாத்திரம் எல்லாம் சொல்லப்
விட்டது.

அதன் பிறகு ஆறாம் அத்தியாயத்திலிருந்து அகர்மமென்ற
சியத்தை எய்த உதவும் விகர்மத்தின் பல்வேறு வழிகளும், மன
உள்ளேயே சுத்தம் செய்வதற்குள்ள பல சாதனங்களுள் முக்கி
வையும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆறாம் அத்தியாயத்தி
தின் ஏகாக்ரதைக்காகத் தியான யோகத்தைக் கூறி, அதற்
பயிற்சி, வைராக்கியம் ஆகியவை குறிப்பிடப்பட்டிருக்கின்ற
அத்தியாயத்தில் பரந்த பக்தியென்ற உயர்ந்த சாதனம் கூ
'நீ ஆண்டவனிடம் அன்புணர்ச்சி கொண்டு போ, அறி
யினால் போ, உலகிற்கு நன்மை செய்யும் ஆவலினால் போ
சொந்த இலாபத்திற்காகப் போ; எதற்காகப் போனாலும்
சந்நிதானத்திற்கு மட்டும் கட்டாயம் போ.' இந்த அ
கூறப்படும் இவ்விஷயத்திற்கு 'பிரபத்தியோகம்', அதாவது
சரண்புகத் தூண்டும் யோகமென்று நான் பெயரிட்டிருக்கிறே
தில் பிரபத்தி யோகத்தைச் சொல்லியபிறகு எட்டாவதில்
யோகம்' கூறப்பட்டிருக்கிறது. நான் இங்கே சொல்லும்
களை நீங்கள் புத்தகத்தில் காண வியலாது. எனக்கு உ
தோன்றிய பெயர்களை நான் வைத்தேன். சாதத்தியயோ
குத் தன் சாதனைகளை இறுதிக்காலம்வரைத் தொடர்ந்து செ
என்பது பொருள். நாம் ஒரு முறை போகத் தொடங்
லேயே நில்லாது போய்க் கொண்டிருக்கவேண்டும்.
வதும், சிலநாள் செய்யாதிருப்பதுமாய் இருந்துவந்தால் இ
போய்ப் பிடிப்போமென்று எண்ணவே முடியாது. அலுத்
நம்பிக்கை இழந்தும், 'நாம் இவ்வாறு எவ்வளவு காலப்
புரிவது?' என்று எண்ணவே கூடாது. கைகூடும்வரை
நிறுத்தாது புரிந்துகொண்டே போகவேண்டும்.

இச் சாதத்திய யோகத்தை அறிமுகப்படுத்திவிட்
அத்தியாயத்தில் மிகவும் சாதாரணமானதும், ஆனால்
தன்மை முழுவதையுமே மாற்றிவிடக் கூடியதுமான ஒ
பகவான் சொல்லியிருக்கிறார். அதுவே இராசயோகப்
அத்தியாயம் ஒவ்வொரு கணமும் நடக்கும் கர்மங்

நுஷ்ஞூர்ப்பணமாக்கி விடுமாறு கூறுகிறது. இந்த ஒரே விஷயத்தில்
லாச் சாத்திர - சாதனங்களும், எல்லாக் கர்ம-விகர்மங்களும்
ழ்ந்து போயின ; எல்லாக் கர்ம சாதனைகளும் இச் சமர்ப்பண யோகத்
மறைந்துபோயின. சமர்ப்பண யோகமே இராசயோகம் என்பது.
ங்கே எல்லாச் சாதனைகளும் முற்றுப்பெற்று விட்டன. ஆண்டவ
க்கு அர்ப்பணம் செய்தல் என்ற இப்பரந்த, சக்தி வாய்ந்த சாதனம்
தா மிகவும் எளியதாய், சாதாரணமானதாய்த் தோன்றினாலும் இது
வும் கடினமானது. இச் சாதனம் சுலபமாயிருப்பதற்குக் காரணம்,
ஒன்றுமறியாத ஒரு சாதாரண, எளிய மனிதனிலிருந்து பெரிய
த்துவான் வரை யாவரும் அதிகச் சிரமமின்றி தத்தம் வீடுகளிலிருந்து
ாண்டே செய்யக்கூடியதாயிருப்பதே. இது இவ்வளவு சுலபமாயிருந்
ம் இதைச் செய்வதற்கு நமக்குப் பெரிய புண்ணியபலம் வேண்டும்.

" மட்டிலா மாபுண்யத்தால் விட்டலன் அன்புபெற்றேன் " *

எத்தனையோ பிறவிகளின் புண்ணியம் சேரும்பொழுதே ஆண்டவ
ம் நமக்குப் பற்று ஏற்படுகிறது. ஏதாவது ஒன்று நேர்ந்துவிட்டால்
ணீர் தாரையாய்ப் பெருக ஆரம்பித்துவிட, பகவான் பெயரைச்
ல்லியதும் கண்களிலிருந்து இரு துளிகள்கூட வெளிவருவதில்லையே !
ற்கு என் செய்வது? மகான்கள் கூறியுள்ளபடி ஒருவகையில் இதற்
சாதனை வெகு சுலபம் ; ஆனால் வேறுவகையில் பார்க்கையிலோ
கடினமும் ஆகும். இக்காலத்திலோ இது இன்னும் சிரமமாகி
எது.

இன்று (விஞ்ஞானமெனும்) ஜடவாதத் திரை நம் கண்களை மறைக்
து. 'கடவுள் எங்கேனும் இருக்கிறாரா?' என்ற கேள்வியிலிருந்தே
று தொடங்குகிறார்கள். இருக்கிறார் என்று எவருக்கும் தோன்றக்
றும். வாழ்க்கை முழுமையும் விகாரமயமாய், விஷயவாசனை நிரம்
ாய், கோணல் முறைகள் மலிந்ததாயிருக்கிறது. இன்றுள்ள மிக மிக
ந்த தத்துவ ஞானிகளின் கருத்துக்களாலும்கூட மக்கள் அனைவருக்
பயிறு நிரம்பச் சோறு கிடைப்பதற்கு வழியென்ன என்று சிந்திப்ப
மேலே எழவியலவில்லை. இதில் அவர்கள் குற்றமொன்றுமில்லை.
னில் இன்றைய நிலைமையே பலருக்கு உணவே கிடைக்கக்கூடாத
ள்ளது. இன்றுள்ள பெரிய பிரச்னை உணவுப் பிரச்னையே. இதைத்
திலேயே அறிவெல்லாம் போய்ச் சிக்கிக்கொண்டிருக்கிறது. ஸாய
ாரியர் 'ருத்திரன்' என்பதற்கு " बुभुक्षमाग: रुद्ररूपेण अवतिष्ठते "

* बहुता सुकृतांची जोडी । म्हणुनी विठ्ठलीं आवडी

(புபுக்ஷமாண: ருத்ரரூபேண அவதிஷ்டதே) பசியால் வாடும் மக்க
உருத்திரனின் அவதாரங்கள் என்று விளக்கம் கூறியிருக்கிருர். அ
களது பசியைப் போக்க அநேக தத்துவ ஞானங்களும் பல்வேறு
சியல் முறைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. வெவ்வேறு 'வா
கள்' இச் சோற்றுக்காகவே தோன்றியுள்ளன. இப் பிரச்னை
லிருந்து தலையைத் தூக்குவதற்கு இன்று நேரமே கிட்டுவதில்
இன்று செய்யும் பகீரதப் பிரயத்தனங்களெல்லாம் ஒருவரோடொரு
சண்டையிடாது அன்பாய், அமைதியாய், நிறைந்த மனத்துடன் உ
வைச் சாப்பிடுவதற்காகவே. இவ்வளவு விசித்திரமாய் சமூக அமை
இருந்து வரும்பொழுது ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்தலென்
சுலபமான, தெளிவான விஷயமும் மிகவும் சிரமமாய்த் தோன்றின
ஆச்சரியப்படுவதற்கில்லை! ஆனால் இதற்கு வழிதான் என்ன? பத்தா
அத்தியாயத்தில் ஆண்டவனுக்கு உரிமையாக்கும் யோகத்தை எவ்வா
கைவரச் செய்வது, எப்படி எளிதாக்குவது என்று இன்று பார்க்
போகிறோம்.

## (50) ஆண்டவனைத் தரிசிக்க எளிய முறை

சிறு பிள்ளைகளுக்குப் போதிக்க நாம் கையாளும் உபாயங்களை
போன்ற உபாயங்கள் பரம்பொருளை எங்கும் காணும்பொருட்டு இ
அத்தியாயத்தில் கையாளப்பட்டிருக்கின்றன. குழந்தைகளுக்கு நெடு
கணக்கு இருவகையில் கற்பிக்கப்படுவதுண்டு. ஒருவகை, முதலி
எழுத்துக்களைப் பெரிய உருவிலெழுதிக் காட்டி, பிறகு அவைகளை
சிறியவையாய் எழுதிக்காட்டுதல். அதே 'க' வும் 'ங' வும் தான்
ஆனால் முதலில் பெரியவையாயிருந்த அவை இப்பொழுது சிறுத்
விட்டன. போதிப்பதற்குதவும் ஒரு விதி இது. மற்றொரு விதியே
முதலில் சுலபமான எழுத்துக்களைச் சொல்லிக்கொடுத்து, பிறகு சி
லான எழுத்துக்களைக் கற்பித்தல் என்பது. இவ்வகையிலேயே ஆண்
வனைக் காணப் பயிலவேண்டும். முதலில் ஸ்தூலமான, தெளிவா
ஆண்டவனைத் தரிசிக்க வேண்டும். கடல், மலை ஆகிய சிருஷ்டியி
பெரும்பகுதிகளில் தோன்றும் ஆண்டவன் உடனே நம் கண்களி
நிரம்பிவிடுகிறான். இந்த ஸ்தூலமாயுள்ள பரம்பொருளை நாம் புரி
கொண்டோமாயின், ஒவ்வொரு நீர்த்துளியிலும், மண்ணின் ஒரு சி
திவலையிலும் அதே பரம்பொருள் பொதிந்திருப்பது பின்னர் நமக்
புரிந்துவிடும். பெரிய 'க' வுக்கும் சிறிய 'க' வுக்கும் வேற்று
எதுவுமில்லை; பெரியதிலிருப்பதே தான் சிறியதிலும்; ஸ்தூலத்திலி

துதான் சூக்குமத்திலும். இது ஒரு முறை. இனி இரண்டாவது றையோ, நேரிடையான எளிதான பரம்பொருளை முதலில் பார்த்து ட்டு அதன் சிக்கலான உருவுக்கு பின்னர் போவதென்பது. சுத்தப் ம்பொருள் தன் இயல்பான உருவில் காட்சியளிக்கும் மனிதனை நாம் லபமாய்ப் புரிந்துகொள்ள முடிகிறது. இதற்கு உதாரணம், இராம டம் வெளியாகியிருந்த பரம்பொருளின் தன்மை உடனே நம் மனதி ல் பதிந்துவிடுதல். இராமனென்பது சுலபமான எழுத்து; இது சிரம ல்லாது புரியக்கூடிய பரம்பொருள். ஆனால் இராவணனோ? அது க்கலான எழுத்து; அதில் ஓரளவு கலப்படம் உள்ளது. இராவணனது வமும் செயல் திறனும் மிகப் பெரியவை; ஆனால் அவற்றில் கொடு மயும் கலந்திருக்கிறது. முதலில் இராமனென்ற சுலபமான எழுத் தக் கற்றுவிடுங்கள். தயையும் வாத்ஸல்யமும் அன்புணர்ச்சியும் ள்ள அவ்விராமன் சுலபமான பரம்பொருள். ஆகையால் அவன் டனே நம் வயமாகி விடுவான். இராவணனிடம் உள்ள பரம்பொரு ரப் புரிந்துகொள்ளச் சிறிது நேரமாகும். முதலில் சுலபமான எழுத்து, றகு சிக்கலான எழுத்து. பரம்பொருளை முதலில் நல்லோரிடம் பார்த்து ட்டுத் தீயோரிடமும் அதை இறுதியில் பார்க்கப் பயிலவேண்டும். லில் உள்ள பரந்த பரம்பொருளே நீரின் ஒரு துளியிலும் உள்ளது. ராமச்சந்திரனுக்குள் உள்ள பரம்பொருளே இராவணனிடமும் இருக் றது. ஸ்தூலத்திலிருப்பது சூக்குமத்திலும் இருக்கிறது. சுலபமானதி ருப்பதே சிரமமானதிலுமிருக்கிறது. 'இவ்விரு விதிகளின்படி நாம் ந்த உலகமெனும் நூலை ஓதக் கற்கவேண்டும்.

இவ்வெல்லையற்ற சிருஷ்டி ஆண்டவனது புத்தகம். கண்களின் து தடித்த திரை மூடியிருப்பதால் நமக்குப் புத்தகம் மூடியிருப்பதாய்த் தான்றுகிறது. இச் சிருஷ்டியாம் புத்தகத்தில் அழகிய வண்ணங்களில் ஆண்டவன் எங்கும் தீட்டப்பெற்றிருக்கிறான். ஆனால் நமக்கு அது லனாகவில்லை. ஆண்டவனை நாம் பார்க்கவியலாதவாறு ஒரு பெரிய டை குறுக்கிட்டிருக்கிறது. அதாவது, அருகிலுள்ள ஆண்டவனின் லபமான உருவங்கள் மனிதனுக்குப் புரிவதில்லை; தொலைவிலுள்ள ண்ணைப் பறிக்கும் அவனது உருவங்களையோ அவனால் சமாளிக்க யலவில்லை. "நீ உன் தாயிடம் ஆண்டவனைக் காண்!" என்று நாம் சான்னால், "ஆண்டவன் இவ்வளவு அப்பாவியா, ஒன்றும் தெரியாத னோ?" என்று அவன் கேட்பான். ஒளிப்பிழம்பான பரம்பொருள் உன் திரில் தோன்றின் அதை உன்னால் தாங்கமுடியுமா? குந்தியின் னத்தில் தொலைவிலுள்ள சூரியன் அருகே நேருக்கு நேராய் வர

வேண்டும் என்று தோன்றிற்று. ஆனால் அது அருகணையவும் அவளுக்
எரிச்சல் உண்டாகிவிட்டது. அதன் வெம்மையை அவளால் சகிக்
முடியவில்லை. ஆண்டவன் தன் முழுச் சக்தியோடு நம் எதிரில் வந்
நின்றால் நம்மால் அதைத் தாள முடியாது; ஆனால் சாந்தமான, அடக்
மான உருவில் தோன்றினாலோ நமக்கு அவனிடம் மதிப்பே ஏற்ப
வதில்லை. லட்டு, ஜிலேபி ஜீரணமாவதில்லை; வெறும் பாலோ நாவிற்
ருசிப்பதில்லை. இவை துரதிஷ்டத்திற்கும் மரணத்திற்குமுரிய அறிகு
களே! இத்தகைய நோயுற்ற மனநிலையே பரம்பொருளைக் காண்பதற்கு
பெருந்தடையாயுள்ளது. இம் மனோநிலையை அகற்றுதல் மிகவு
அவசியம். முதலில் நாம் நம் அண்மையிலுள்ள ஸ்தூலமான, சுல
மான பரம்பொருளைப் படிப்போம்; பின்னர் சூக்குமமான, சிக்கலா
பரம்பொருளைப் படிப்போம்.

## (51) மானிட உருவில் கடவுள்

நம்முன் உள்ள ஆண்டவனின் முதல் உருவம் நம் தாயே. வேத
'मातृ देवो भव' (மாத்ரு தேவோ பவ) என்று கூறுகிறது. பிறந்
வுடனே தாயைத் தவிர குழந்தைக்குத் தென்படுவது வேறு யார்? வா
ஸல்யத்தின் உருவில் ஆண்டவனே அங்கு நின்றுகொண்டிருக்கிறான்
அத் தாயின் உருவையே விரித்து 'வந்தே மாதரம்' என்று சொல்
நாடாம் தாயையும், பிறகு பூதேவியாகிய பூமி முழுவதையும் வழிப
வோம். ஆனால் ஆரப்பத்தில் அனைத்திலும் உயர்ந்த ஆண்டவ
குழந்தையின் முன் தாயின் உருவிலேயே வருகிறான். தாயை வழிப
வதனால் மோட்சம் பெறுதல் அசாத்தியமல்ல. தாய் வழிபாடென்ப
வாத்ஸல்யத்தோடு நம்முன் நிற்கும் ஆண்டவன் வழிபாடே; தா
என்பவள் ஒரு நிமித்தமே. ஆண்டவன் அவளிடத்தில் தன் அன்பை
ஆருமையைப் பொழிந்து அவளை ஆட்டி வைக்கிறான். பாவம், அவ
உள்ளத்தில் இவ்வளவு வாஞ்சையும் பாசமும் ஏன் தோன்றுகிறதென்
புரியவில்லை! தன் முதுமையில் பயன்படுவானென்று கணக்கிட்
அவள் குழந்தையைப் பராமரிக்கிறாள்? இல்லவே இல்லை. அவள் அந்த
குழந்தையைப் பெற்றாள்; அவனைப் பெறும் வேதனையை அவள் பட்
ருக்கிறாள்; அவ் வேதனைகள் அக் குழந்தையின் விஷயத்தி
அவளுக்குப் பித்தமுண்டாக்கி விட்டன. அவ் வேதனைகளே அவ
அன்பிற்குரியவனாக்கிவிட்டன. அவளால் அன்பு செலுத்தாது இருக்க
இயலாது; அவளுக்கு வேறு வழியே இல்லை. அந்தத் தாய் எல்லையற்
சேவையே உருவானவள். ஆண்டவனுக்குச் செய்யும் தலைசிறந்

பொடொன்று உண்டென்றால் அது அன்னையின் வழிபாடே. ண்டவனை 'தாயே' என்றே அழை. 'தாய்' என்பதைவிட உயர்ந்த ால் ஏது? 'அம்மா' என்பவை முதலில் தோன்றும் ஸ்தூலமான ழுத்துக்கள். அவற்றில் ஆண்டவனைக் காணக் கற்பாய்; பிறகு தை, குரு ஆகியோரிடமும் காண். குரு கல்வியளிக்கிறார். அவர் ருகங்களாக இருந்த நம்மை மனிதர்களாக்கினார். அவர் செய்துள்ள பகாரத்தை என்னென்பது! முதலில் தாய், பின் தந்தை, பிறகு குரு; தன் பிறகு கருணைமிக்க பெரியோர்கள், மகான்கள். மிகவும் ஸ்தூல ருவில் நம் முன்னுள்ள இந்த ஆண்டவனை முதலில் பார். இங்கே னக்கு ஆண்டவன் காணப்படவில்லையெனில் வேறு எங்குதான் காணப் வான்?

தாய், தந்தை, குரு, மகான்கள் ஆகிய இவர்களிடத்தில் ஆண்ட னைப் பார். அதே வகையில் சிறு குழந்தைகளிடமும் நாம் ஆண்ட னைக் காணக் கூடுமானால் எவ்வளவு ஆனந்தமாயிருக்கும்? துருவன், கலாதன், நசிகேதன், ஸனகன், ஸநந்தனன், ஸனத்குமாரன் ஆகிய பரெல்லோரும் குழந்தைகள்தாமே! ஆனால் புராண ஆசிரியர்களுக்கு, பாசர் முதலியோருக்கு அவர்களைப்பற்றி எங்கே பேசுவது, எங்கே சாதிருப்பது என்பதே விளங்காமற்போகுமளவுக்கு அவர்களிடம் ரன்பு. சுகதேவரும், சங்கராச்சாரியாரும் சிறு பிராயத்திலேயே பராக்கியம் பெற்று விட்டனர்; ஞான தேவரும் அப்படியேதான். பர்கள் அனைவருமே பால்மணம் மாறாத பிள்ளைகள். ஆனால் இவர் டம் ஆண்டவன் தூய உருவில் தோன்றியதுபோல் வேறு எங்கும் ான்றவில்லை. ஏசுநாதருக்கு குழந்தைகளிடம் மிகவும் பிரியம். ஒரு யம் அவரது சீடர்கள் அவரிடம், "நீங்கள் எப்பொழுதும் பரலோகம், ம்பொருளின் லோகம் என்கிறீர்களே; அந்த லோகத்திற்கு யாரால் ன் போக முடியும்?" என்று கேட்டார்கள். அருகிலேயே ஒரு குழந்தை ருந்தான். ஏசுநாதர் அவனை எடுத்து மேசை மீது நிறுத்தி, இக்குழந்தையைப் போன்றவர்களே அங்கே போக இயலும்" என்றார். நாதர் கூறியது முற்றிலும் உண்மை. ராமதாச சுவாமிகள் ஒரு யம் குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தார். குழந்தை ளுடன் குழந்தையாக சமர்த்தர் (ராமதாசர்) விளையாடிக் கொண்டிருப் தைக் கண்ட சில முதியோருக்கு ஆச்சரியமா யிருந்தது. ஒருவர் வரிடம், "நீங்கள் என்ன இப்படி ஆரம்பித்து விட்டீர்கள்!" என்று ட்டார். அதற்கு சமர்த்தர்,

" தம்மைச் சிறியோரென்றுர் பெரியோராஞர்,
பெரியோ ரென்றவர் பெருந் திருடராஞர் !" *

என்றுர். வயது ஏறவேற மனிதனது மனத்தில் கொம்புகள் முளைக்கின்றன—வாசனைகள் வளர்கின்றன. அப்பொழுது ஆண்டவன் நினைவு எப்படி வரும்? சிறு குழந்தைகளின் மனம் பூர்சற்றது; அவர்களது நிர்மலயானது. குழந்தைக்கு நாம், "பொய் சொல்லாதே" என்று போதிக்கிறேம். அவன், "பொய் என்றல் என்ன?" என்று கேட்கிறன். அப்பொழுது நாம் அவனுக்கு, "உள்ளதை உள்ளபடியே சொல்ல வேண்டும்" என்ற தத்துவத்தைக் கூறுகிறேம். உள்ளதை உள்ளவாறு உரைப்பதைத் தவிர வேறு வகையில் உரைக்கும் முறையு முண்டோ என்று எண்ணிக்கொண்டு அவன் குழம்புகிறன். இல்லாததொன்றைச் சொல்வதெப்படி? சதுரத்தைச் சதுர மென்றுசொல், வட்டமென்று சொல்லாதே என்பதைப் போல் அல்லவா இருக்கிறது இது? குழந்தைக்கு வியப்புத் தோன்றுகிறது. குழந்தைகள் யார்? தூய பரம்பொருளின் உருவங்களே. பெரியவர்கள் அவர்களுக்குத் தவருகப் போதிக்கிறர்கள். அது எவ்வாருயினும் தாய், தந்தை, குரு, மகான்கள், குழந்தைகள் ஆகிய இவர்களிடம் நாம் பரம்பொருளைப் பார்க்க இயலவில்லையேல் வேறு எந்த உருவில்தான் பார்க்க இயலும்? இதிலும் சிறந்த ஆண்டவனின் உருவம் வேறில்லை. ஆண்டவனின் இந்த எளிய, இனிய உருவங்களை முதலில் அறிந்துகொள். இவர்களிடம் ஆண்டவன் தெளிவான கொட்டை எழுத்துக்களில் எழுதப்பெற்றிருக்கிறன்.

## (52) சிருஷ்டியில் கடவுள்—சில சிறந்த உதாரணங்கள்

முதலில் நாம் மிகவும் சாந்தமும் புனிதமுமான மானிட உருவங்களில் பரம்பொருளைக் காணப் பயில்வோம்; அவ்வாறே இச் சிருஷ்டியிலும் விசாலமான, மனேகரமான பகுதிகளில் அதை முதலிற் காண்போம்.

அந்த உஷாகாலம்! சூரியன் தோன்றுவதற்கு முன்னுள்ள அந்த தெய்வீக ஒளி! அந்த உஷாதேவியின் புகழைப் பாடும் ரிஷிகள் ஆனந்த மகிழ்ச்சியில் மெய்மறந்து ஆடுகிறர்கள். "ஏ உஷையே! நீ ஆண்டவனது செய்தி கொணரும் தேவதூதிகை. நீ பனித்துளியில் குளித்து வந்திருக்கிறய். நீ சாகா நிலையின் ஜயக்கொடி" என்று இவ்வாறு உஷையை உள்ளத்திலிருந்தெழும் சொற்களால் ரிஷிகள் வர்ணித்தி-

* वयें पोर ते थोर होऊन गेले
वयें थोर ते चोर होऊन ठेले

ர்கள். வேதரிஷி, "ஆண்டவனது செய்தி கொணரும் உன்னைக் ண்ட பின்னும் எனக்கு அவன் புலனுகாவிட்டால், அவனைப் புரிந்து ாள்ள முடியாவிட்டால், வேறு யார்தான் எனக்கு அவனைக் காட்டு ர்?" என்கிருர். உஷை இவ்வளவு நேர்த்தியாய்த் தன்னை அலங் த்துக்கொண்டு நம் எதிரில் வந்து நிற்கிருள். ஆனல் நம் கண்கள் வளைப் பார்த்தால்தானே!

அவ்வாறே அந்தச் சூரியனைப் பார். அதன் காட்சி பரம்பொருளின் ட்சி போன்றதே. அது வானில் பல்வகை வண்ணச் சித்திரங்களை ாகிறது. ஓவியன் மாதக்கணக்காய்த் தூலிகையை இங்குமங்கும் நப்பிச் சூரியோதயக் காட்சியை வரைந்து அதற்கு வர்ணம் தீட்டு றன். ஆனல் நீ காலையில் எழுந்து அந்த ஆண்டவனின் கலைத் றனைக் கொஞ்சம் கண் திறந்து பாரேன். அத் தெய்வீகக்கலையை, வ்வெல்லையிலா வனப்பை எதனுடன் ஒப்பிடலாம்? ஆனல் அதை ர் பார்க்கிருர்கள்? அங்கே அழகிய ஆண்டவன் நின்றுகொண்டிருக்க, ங்கே இவன் முகத்தின்மீது போர்வையை இழுத்து மூடிக்கொண்டு றட்டைவிடுகிருனே! சூரியன், "ஏ சோம்பேறி! நீ படுத்தே இருக்க ரும்புகிருய். ஆனல் நான் உன்னை எழுப்பிவிடுகிறேன், பார்!" என்று ால்லித் தன் உயிர்க்கிரணங்களைப் பலகணி வழியே உள்ளே செலுத்தி ச் சோம்பேறியை எழுப்பிவிடுகிறது.

"सूर्य आत्मा जगतस्तस्थुषश्च"

(ஸுர்ய ஆத்மா ஜகதஸ் தஸ்துஷஶ்ச)

ரியன் தாவரம், ஜங்கமம் என்னும் அனைத்தின் ஆன்மா, சராசரங் ளுக்கு ஆதாரம். ரிஷி அதற்கு 'மித்திரன்' (நண்பன்) என்ற பெயர் ளித்திருக்கிருர்.

"मित्रो जनान् यातयति ब्रुवाणो,
मित्रो दाधार पृथिवीमुत द्याम्।"
(மித்ரோ ஜனன் யாதயதி ப்ருவாணோ
மித்ரோ தாதார ப்ருதிவீமுத த்யாம்)

இந்த மித்திரன் மக்களைக் கூவி அழைத்து அவர்களைத் தம் பணிகளில் டுபடுத்துகிருன். அவன் சுவர்க்கத்தையும் புவியையும் தாங்குகிருன்." ண்மையிலேயே சூரியன் வாழ்க்கைக்கு ஆதாரமானது. அதில் பரம் பாருளைப் பார்.

மேலும் அந்தப் புனித கங்கையோ! நான் காசியிலிருந்தபொழுது ங்கைக் கரையில் போய் அமர்ந்துவிடுவேன்; இரவில் ஊரடங்கிய பின்

தனித்துச் செல்வேன். அதன் பிரவாகம் எவ்வளவு அழகு, ஆன
மானது! அதன் அவ்வழகிய பெருமை மிக்க வெள்ளமும் அதனு
அடங்கியதாய்த் தோன்றும் வானத்தின் எண்ணிறந்த மீன்களும்! நா
வாய் திறவாது இருந்துவிடுவேன். சிவபெருமானது ஜடாமகுட
லிருந்து, அதாவது இமயத்திலிருந்து இழிந்துவரும் அக் கங்கை
தம் இராச்சியபாரங்களை யெல்லாம் துரும்பென வீசி எறிந்துவி
அரசர்கள் எதன் கரையில் தவமியற்றச் சென்றார்களோ, அக் கங்
யைக் கண்ணுறக்காணும்பொழுது எனக்கு எவ்வளவு மனவமைதி! அ
மனவமைதியை நான் எவ்வாறு வருணிப்பேன்? அதைக்கூற இயலா
என் வாய் அடைத்துப் போகும். தான் இறந்தபின் தன் எலும்புக
வது கங்கையிற் சேரவேண்டு மென்று இந்து விரும்புவதன் காரண
எனக்குப் புலனாகத்தொடங்கும். நீங்கள் சிரிக்கிறீர்கள்; உங்கள் சிரி
பால் ஒன்றும் கெட்டுவிடவில்லை. ஆனால் எனக்கு இந்தப் பாவனைக
உள்ள உணர்ச்சிகள், மிகவும் புனிதமாய், போற்றத்தக்கவையாய்
தோன்றுகின்றன. இறக்கும் தறுவாயில் இரு துளிகள் கங்கை நீ
வாயில் ஊற்றுகிறார்கள். அந்த இரு துளிகள் என்பவை என்ன
ஆண்டவனே வாயில் இழிவது போலாகிறது. அக் கங்கையை
பரம்பொருளென்றே கொள். ஆண்டவனது கருணையே அவ்வா
பெருகிக் கொண்டிருக்கிறது. உன் அகத்தும் புறத்துமுள்ள எல்லா
குப்பை கூளங்களையும் அத் தாய் கழுவுகிறாள், தன்போக்கில் அடி
த்துக்கொண்டு போகிறாள். கங்கைத் தாயிடம் நமக்கு ஆண்டவன் காட்
அளிக்கவில்லையேல் வேறு எங்குதான் அளிப்பான்? சூரியனும், ஆ
களும், 'ஓ! ஓ!' வென்று அலைகளை வீசி எறியும் அப் பரந்த கடலு
இவையெல்லாம் ஆண்டவனின் பல்வேறு உருவங்களே.

மேலும் இந்தக் காற்றே! இது எங்கிருந்து வருகிறதோ, போவ
தான் எங்கோ, நாம் அறியோம். இது ஆண்டவனின் தூதுவனே
இந்தியாவில் ஒரு காற்று இமயத்திலிருந்து வர மற்றொன்று மாபெரு
கடலிலிருந்து வீசுகிறது. இப்புனிதக் காற்றும் நம் உள்ளத்தை
தொட்டு, நம்மைத் தட்டி எழுப்பி, நம் காதுகளுக்குச் செய்தி கொண
கிறது. ஆனால் இக்காற்றின் செய்தியை யார் கேட்கிறார்கள்? சிறை
அதிகாரி (ஜெயிலர்) நான்கு வரிகொண்ட நம் கடிதத்தை நம்மிட
தரவில்லை என்றால் நம் மனம் நோகிறது. ஐயோ, தலையெழுத்து! அ
கடிதத்தில் அப்படி என்ன வைத்திருக்கிறது? ஆண்டவனின் அன்பு
செய்தியை ஒவ்வொரு கணமும் இக் காற்று தாங்கி வருகிறதே, அதை
கேளேன்!

நம் வீட்டில் தினமும் உதவிவரும் இந்தப் பிராணிகளோ! அந்தப் -த்தாய்க்குத்தான் எவ்வளவு அன்பு, எவ்வளவு பாசம், எவ்வளவு ஞ்சை! அவை இரண்டு மூன்று மைல்களுக்கப்பால் காடுமேடுகளில் யந்துவிட்டுத் தம் கன்றுகளைக் காண எவ்வளவு ஆவலுடன் ஓடிவரு ன்றன! வேத ரிஷிகளுக்கு மலைகளின்மீதிருந்து தூய நீருடன் கலகல பன ஒலித்தோடிவரும் ஆறுகளைக் காணும்போதெல்லாம் தம் கன்று ளுக்காகப் பால் சுரக்கும் மடியுடன் 'அம்மா!' என்று அரற்றிக் ாண்டு பாய்ந்துவரும் பிள்ளைப்பாச மிக்க பசுக்களின் நினைவு வரு றது. அந்த ரிஷி ஆற்றை நோக்கி, "ஏ தேவி, பாலைப்போல் தூய ரைப் பெருக்கிவரும் நீ பசுவைப் போன்றிருக்கிறாய். பசுக்களால் ட்டிலேயே இருந்துவிட முடியாதிருப்பதைப் போல் உன்னால் மலைகளி லயே இருக்கமுடியவில்லை. நீ வறட்சியால் அவதிப்படும் உன் பிள்ளை ளக் காணத் தலைதெறிக்க ஓடிவருகிறாய்" என்கிறார்.

"वाश्रा इव धेनवः स्यंदमानाः"

(வாஶ்ரா இவ தேநவ: ஸ்யந்தமாநா:)

-ஞ்சை மிக்க பசுவின் உருவில் பகவானே வாயிலில் நிற்கிறார்.

மேலும் அந்தக் குதிரையோ! எவ்வளவு நேர்த்தியானது, எவ்வளவு ண்மையும் நன்றியுமுள்ளது! அராபியருக்கு தம் குதிரைகளிடம் வ்வளவு நேசம்! அந்த அராபியனின் கதை உங்களுக்குத் தெரியு ல்லவா? ஆபத்தில் சிக்கிய ஓர் அராபியன் தன் குதிரையை ஒரு யாபாரிக்கு விற்கச் சித்தமாகிவிடுகிறான். அவன் கையில் பணப்பை டன் குதிரைக் கொட்டடிக்குப் போகிறான். ஆனால் குதிரையின் க் கம்பீரமான, அன்பு ததும்பும் கண்களைக் கண்டதும் அவன் ணப்பையை வீசி எறிந்துவிட்டு, "என் உயிரே போனாலும் சரி, நான் திரையை விற்க மாட்டேன். எனக்கு என்ன நேர்ந்தாலும் நேரட்டும், ணவு கிடைக்காவிட்டால் வேண்டாம், ஆனால் குதிரையை விற்க ட்டேன். ஆண்டவன் எனக்கு உதவுவான்" என்கிறான். முதுகைத் டிக் கொடுத்ததும் அது எப்படிச் சிலிர்சிலிர்க்கிறது! அதன் பிடரி ன் எவ்வளவு நேர்த்தியாயுள்ளது! உண்மையில் குதிரையிடமுள்ள ணங்களை அளவிடவியலாது. அச் சைக்கிளில் என்ன இருக்கிறது! திரைக்குத் தீனி வைத்துத் தேய்த்துப் பராமரி, அது உன்பொருட்டுத் ன் உயிரையே தந்துவிடும். அது உன்னுடன் இணைபிரியாதிருக்கும். ன் நண்பரொருவர் குதிரைச் சவாரி செய்யக் கற்றுவந்தார். குதிரை வரைக் கீழே தள்ளிக்கொண்டேயிருந்தது. அவர் என்னிடம், இக் குதிரை என்னைத் தன் முதுகில் இருக்கவே விடமாட்டேனென்

கிறதே!" என்ருர். நான் அவரிடம், "நீர் குதிரைமீது ஏறுவதோ சரியா, அதற்குத் தீனி வைத்துத் தண்ணீர் காட்டி ஏதேனும் செ கிறீரா? இதையெல்லாம் வேருெருவன் செய்ய, நீர் அதன் முதுகில் ஏ உட்காருவதென்ருல் அது எப்படிச் சரியாகும்? நீரே அதற்குத் தீ வைத்துத் தண்ணீர் காட்டித் தேய்த்துவிட்டு பின் சவாரி செய்யும் என்றேன். அவர் அப்படியே செய்தார். சில நாட்களுக்குப் பிற அவர் என்னிடம் வந்து, "இப்பொழுது குதிரை என்னைக் கீழே தள்ளு தில்லை" என்ருர். குதிரைதான் ஆண்டவனுயிற்றே, அவன் ஏ பக்தனைத் தள்ளுகிருன்? அவரது பக்தியைக்கண்டு குதிரை பணிந் போய்விட்டது. இவன் பக்தனு அல்லவா என்று குதிரை அறிய விரும் கிறது. பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் தாமே குதிரைக்கு உடலைத் தேய்த் விடுவார், தினவெடுப்பார். தம் பீதாம்பரத்தில் கொள்ளைக் கொண் போய்க் கொடுப்பார். ஒரு பள்ளமோ, வாய்க்காலோ சேருே வழியி குறுக்கிட்டால் சைக்கிள் அங்கேயே நின்றுவிட, குதிரை எல்லாவற்றையு ஒரு எட்டில் தாண்டிப் போய்விடும். இவ்வழகிய, அன்பு மிக் குதிரை ஆண்டவனின் உருவே.

அந்தச் சிங்கமோ! நான் படௌதாவில் இருந்துவந்த பொழு விடிந்ததுமே அதன் கர்ஜனையின் கம்பீரத்தொனி காதில் விழும். அதன் குரலின் கம்பீரமும் சிறப்பும் உள்ளத்தை ஒரு குலுக்குக் குலுக்கிவிடும் கோயில்களின் கர்ப்பக்கிருகங்களில் எழும் எதிரொலியைப் போன்ற அதன் உள்ளத்தினடியிலிருந்து எழும் கம்பீரத்துவனி. மேலும் சிங்க தின் தீரம், பெருமை, அஞ்சாமை பொருந்திய முகப்பொலிவையும் அர னுக்குரிய அதன் போக்கையும் பெருமையையும் என்னென்பது பெருமை பொருந்திய அவ்வழகிய பிடரி வனராஜன்மீது இய கையே போர்த்தியுள்ள சாமரந்தானே! படௌதாவில் ஓர் அழகி தோட்டத்திலிருந்தது அந்தச் சிங்கம். அங்கே அது சுதந்திரமாயில்லை கூண்டிலடைபட்டு அதனுள் சக்கரம் சுற்றிக்கொண்டேயிருந்தது அதன் கண்களில் கொடுமை சிறிதுமில்லை. அதன் முகமுத்திரையிலு பார்வையிலும் கருணை ததும்பியது. அது உலகத்தைச் சிறிது பொருட்படுத்துவதாகவே தோன்றவில்லை, ஆன்மசிந்தனையில் ஆழ்ந் கிடந்தது போன்றிருந்தது. உண்மையில் சிங்கம் ஆண்டவனின் ஒ புனிதமான வேலைப்பாடே. சிறுபிராயத்தில் நான் 'அண்ட்ராக்ளிசு சிங்கமும்' என்ற கதை படித்ததுண்டு. அது எவ்வளவு சிறந்த கதை பசியால் வாடும் அச் சிங்கம் அண்ட்ராக்ளிசு முன் செய்த உபகாரத்தை நினைத்து அவனுடன் நட்புப் பூண்டு அவன் காலை நக்க ஆரம்பிக்கிறது

..ன் மர்மம் என்ன? அண்ட்ராக்ளிசு சிங்கத்தினிடம் உள்ள ஆண்ட ..னக் கண்டு கொண்டான். சிவனருகில் எப்பொழுதும் சிங்கம் இருந்து ..கிறது. சிங்கம் பகவானின் திவ்விய சிருஷ்டியே.

புலியின் பெருமைதான் குறைவா? அதனிடமும் ஆண்டவனின் ..மிசம் பெரிதும் வெளியாகிறது. அதை நண்பனாக்கிக் கொள்வது ..சாத்தியமல்ல. பாணினி பகவான் காட்டில் அமர்ந்து சீடர்களுக்குப் ..டம் போதித்துக் கொண்டிருந்தார். இதற்குள் புலி வந்துவிட்டது. ..ள்ளைகள் பயந்துபோய் "வியாக்ரம்! வியாக்ரம்!" (புலி, புலி) என்று ..க்குரலிட்டார்கள். பாணினி, "சரி, வியாக்ரம் என்றால் என்ன? ..ाजिघ्रतीति व्याघ्रः (வ்யா ஜிக்ரதீதி வ்யாக்ர:) எதனுடைய மோப்பச் ..தி தீவிரமாயிருக்கிறதோ அதுவே வியாக்ரம்" என்றார். பிள்ளை ..களுக்கு அதைக் கண்டதும் அச்சமுண்டானபோதிலும் பாணினிக்கு ..ந்த வியாக்ரம் தீங்கற்ற, இன்பமான ஒரு சொல்லே ஆயிற்று. புலி ..யைப் பார்த்து அவர் அதன் பெயரின் உற்பத்தியை விளக்கத் தொடங்கி ..ட்டார். புலி பாணினியைத் தின்றுவிட்டது. ஆனால் புலி தின்ற ..னால் என்ன? பாணினியின் உடலின் இனிய மணம் அதற்குப் பிடிக் ..கவே அது அதைக் கிழித்துத் தின்றது. ஆனால் பாணினி அங்கிருந்து ..டித் தப்பவில்லை. ஏனெனில், அவர் சப்தப் பிரம்மத்தின் பக்தர். ..அவருக்கு எல்லாம் அத்வைத மயமாகி (ஒன்றாகி)விட்டது. புலியினிடத் ..திலும் அவர் சப்தப்பிரம்மத்தை உணர்ந்தார். பாணினியின் இச் ..சிறப்பு காரணமாகவே பாஷ்யங்களில் அவர் பெயர் வரும் இடங்களிலெல் ..லாம் 'பாணினி பகவான்' என்று அடைமொழியோடு மரியாதையுடன் ..அது குறிப்பிடப்பட்டிருக்கிறது.

> अज्ञानांधस्य लोकस्य ज्ञानांजन शलाकया ।
> चक्षुरुन्मीलितं येन तस्मै पाणिनये नमः ॥
> (அஜ்ஞானாந்தஸ்ய லோகஸ்ய ஜ்ஞானாஞ்ஜன ஶலாகயா
> சக்ஷுருன்மீலிதம் யேன தஸ்மை பாணினயே நம:)

..ன்று அவர்களெல்லாம் பாணினிக்குத் தம் பெரு நன்றியைத் தெரிவிக் ..கிறார்கள். இத்தகைய பாணினி பகவான் புலியினிடம் ஆண்டவனைத் ..தரிசிக்கிறார். ஞானதேவர்,

> "இழியினும் சுவர்க்கம் வீட்டில் பாயினும் புலிநம்மீது *
> அழிவுறுதிருப்பதாக ஆன்மாவிலுறுதி யென்றும்"

* घरा येवो पां स्वर्ग । कां वरिपडो व्याघ्र
परी आत्मबुद्धीसी भंग । कदा नोहे

என்கிறார். பாணினி மகரிஷியின் நிலை இத்தகையது. புலி ஒரு தெய்
விபூதி என்பதை அவர் உணர்ந்திருந்தார்.

பாம்பையும் அவ்வாறே எண்ணுங்கள். பாம்பைக் கண்டு எல்லோ
ரும் அஞ்சுகிறார்கள். ஆனால் பாம்பு ஆசாரத்தில் தீவிர புத்தியுள்
அந்தணனைப் போன்றது. எவ்வளவு துப்புரவு! எவ்வளவு அழு
அதற்கு அசுத்தம் சிறிதும் பிடிக்காது. அசுசியான அந்தணர் எ
வளவோ பேரைப் பார்க்கலாம், ஆனால் அழுக்கில் தோய்ந்த பாம்
எவரேனும் பார்த்திருக்கிறீர்களா? தனித்து வாழும் ரிஷியைப்போ
அல்லவா அது இருக்கிறது? துப்புரவாய்ப் பளபளவென்று அழகி
மாலை போலிருக்கிறது அப் பாம்பு. அதைக் கண்டு அஞ்சுவதேனோ
நம் முன்னோர் அதன் வழிபாட்டிற்கல்லவா வகை செய்திருக்கிறார்கள்
'இந்து மதத்தில் எத்தனையோ குருட்டுப் பழக்கங்கள்!' என்று வேண்
மானால் நீங்கள் சொல்லிக்கொள்ளுங்கள். ஆனால் அதில் நாக பூஜைக்
நிச்சயமாக ஏற்பாடு இருக்கிறது. சிறு பிராயத்தில் நான் என் தாய்
காக மஞ்சளைக் கொண்டு பாம்பின் சித்திரம் வரைந்து தருவதுண்
நான் என் தாயிடம், "கடையில் நல்ல பாம்புப் படம் விற்கிறதே
அம்மா" என்பேன். என் தாய், "அது நன்றாயிராது; எனக்கு அ
வேண்டாம்; என் குழந்தை வரைந்ததுதான் எனக்குப் பிடிக்கும்
என்பார். அந்தப் பாம்புக்குப் பூஜை செய்யப்படும். இது பைத்திய
காரத்தனமா? ஆனால் சிறிது சிந்தித்துப் பாருங்கள். அந்தப் பாம்
ஆவணி மாதத்தில் விருந்தினனாய் நம் வீட்டிற்கு வரும். கா
காலமாகையால், பாவம், அதன் வீடு முழுமையும் நீர் நிரம்பிப்போ
விடும். அப்பொழுது அது என்ன செய்யும்? தொலைவில் தனித்
வாழும் அந்த ரிஷி உங்களுக்கு வீண் சிரமம் கூடாதென்று எங்கேனு
கூரை மேட்டிலோ, மரங்களினிடையிலோ வந்து கிடக்கும். அதற்
மிக மிகக் குறைந்த இடமே போதும். ஆனால் நாம் தடி எடுத்து
கொண்டு ஓடுகிறோம். ஆபத்தில் சிக்கிய விருந்தினன் ஒருவன் ந
வீட்டிற்கு வந்தால் அவனை அடித்தல் சரியா? பிரான்ஸிஸ் யோகியை
பற்றிச் சொல்லுவதுண்டு: அவர் காட்டில் பாம்பைக் காணும்பொழு
அதனிடம் மிக்க அன்புடன், "வா தம்பீ, வா" என்பாராம். பாம்
அவர் மடியில் தவழ்ந்து, அவர் உடல்மீது ஏறி இறங்குமாம். இதை
பொய் என்று எண்ணாதீர்கள். அன்பிற்கு நிச்சயமாய் இத்தகை
சக்தி உண்டு. பாம்பை விஷ ஜந்துவென்று சொல்லுகிறோமே, மனித
களுடைய விஷம் குறைவா? பாம்பாவது எப்பொழுதாவது தீண்
கிறது; வலுவில் போய்த் தீண்டுவதுமில்லை. நூற்றில் தொண்ணூ

ன்பது பாம்புகள் விஷமில்லாதவையே. அது உன் வயலைப் பாது
க்கிறது; பயிரை அழிக்கும் எத்தனையோ பூச்சிகளையும் பிற பிராணி
ளையும் தின்று வாழ்கிறது. இத்தகைய உபகாரியான, சுத்தமான,
தியுள்ள, தனிமையை விரும்பும் பாம்பு ஆண்டவனின் உருவமே.
தேவர்களிடையே பாம்பு எங்கேனும் வரவேசெய்கிறது. கணேசரின்
டையில் பாம்பே கட்டப்பட்டிருக்கிறது. சிவன் கழுத்தில் பாம்பு
றிக் கொண்டிருக்கிறது. விஷ்ணு பகவானே பாம்புப் பாயலிலேயே
த்துறங்குகிறார். இதன் மர்மத்தை, இதிலுள்ள இனிமையைச் சிறிது
ணருங்கள்: பாம்பின் மூலமாய் ஆண்டவன் உருவமே வெளியாகி
ருக்கிறது என்பதே இவை அனைத்தின் கருத்து. பாம்பிலுள்ள
ப் பரம்பொருளைப் புரிந்துகொள்ளுங்கள்.

## 53) சிருஷ்டியில் கடவுள்—இன்னும் சில உதாரணங்கள்

இத்தகைய உதாரணங்கள் எத்தனை வேண்டும்? நான் கூறிவருவது
பறும் கண்ணோட்டமே. இராமாயணத்தின் சாரமனைத்தும் இத்
கைய இனிய கற்பனையிலேயே அடங்கியுள்ளது. இராமாயணத்தில்
ந்தைக்கும் மகனுக்கும் உள்ள அன்பு, தாய்க்கும் பிள்ளைக்கும் உள்ள
ன்பு, சகோதரரிடையே உள்ள அன்பு, கணவனுக்கும் மனைவிக்குமுள்ள
ன்பு ஆகியவையெல்லாம் உண்டு. ஆனால் எனக்கு இராமாயணம்
கவும் பிடிப்பது இவைகள் காரணமாய் அல்ல; இராமனுக்கும் குரங்கு
ளுக்கும் ஏற்பட்ட அன்பு காரணமாகவே எனக்கு அது பிடிக்கிறது.
க்காலத்தில் அக் குரங்குகளை நாகசாதியைச் சேர்ந்தவை என்கிறார்கள்.
ரித்திரவல்லுநருடைய வேலையே பண்டை விஷயங்களை ஆராய்ந்து
லசிப் பார்ப்பதுதானே; அவர்கள் செய்யும் இக் காரியத்தை நான்
ட்சேபிக்கவில்லை. ஆனால் இராமன் உண்மையான குரங்குகளுட
னயே நட்புப் பூண்டானென்றால், இதில் நடக்கக்கூடாதது என்ன?
ராமனது 'இராமன் தன்மை,' இனிமை, உண்மையில் அவன் குரங்கு
ளுடன் நட்புரிமை பூண்டதில்தானிருக்கிறது. இதே வகையானது
ான் கிருஷ்ணனுக்கும் பசுக்களுக்குமுள்ள தொடர்பும். கிருஷ்ணன்
ழிபாட்டனைத்தின் ஆதாரம் இக் கற்பனையே. ஸ்ரீ கிருஷ்ணனது
ப் படத்தைப் பார்த்தாலும் அதில் உங்களுக்கு அவனைச் சூழப்
சுக்கள் நிற்பது தெரியவரும். கோபாலகிருஷ்ணன்! கோபாலகிருஷ்
ணன்! பசுக்களை கிருஷ்ணனிடமிருந்து பிரித்துவிடுவோமானால் கிருஷ்
ணனிடம் என்ன எஞ்சியிருக்கும்? இராமனிடமிருந்து வானரங்களை
கற்றிவிடுவோமானால் அந்த இராமனிடம் இராமன் அம்சம் எவ்வளவு

மிச்சமிருக்கும்? இராமன் வானரங்களிடமும் பரம்பொருளைக் கண்
அவைகளுடன் அன்பும் உறவும் கொண்டான். இராமாயணத்தி
இரகசியம், திறவுகோல் இதுவே. இத் திறவுகோலை நீங்கள் மறந்
போனால் இராமாயணத்தின் இனிமையையே இழந்துவிடுவீர்க
தந்தைக்கும் மகனுக்கும், தாய்க்கும் பிள்ளைக்கும் உள்ள அன்பு வே
இடங்களிலும் காணக் கிடைக்கும்; ஆனால் நரனுக்கும் வானரத்திற்கு
(மனிதனுக்கும் குரங்கிற்கும்) உள்ள இந்த ஒப்பற்ற இனிய நட்
இராமாயணத்தில் மட்டுமே காணலாம், வேறு எங்கும் காண முடியா
குரங்கினிடம் உள்ள பகவானை இராமாயணம் தனதாக்கிக் கொண்ட
குரங்குகளைக் கண்டதும் ரிஷிகளுக்கு மிக்க குதூகலம். இராமகட்டத்
லிருந்து கிருஷ்ணா நதிக்கரை வரை தரையில் காலை வையாது அ
குரங்குகள் மரத்திற்கு மரம் தாவிக் குதித்து விளையாடும். இத்தகை
அந்த அடர்ந்த காட்டையும் அதில் விளையாடும் குரங்குகளையும் கண்
அந்த அருள்மிக்க ரிஷிகளின் மனத்தில் கவிதை பீறிட்டெழும், குதூ
கலம் தோன்றும். பிரம்மத்தின் கண்கள் எப்படியிருக்கும் என்பன
விளக்கப்புகும் உபநிடதங்கள் குரங்குகளின் கண்களையே உவமையாக
தந்திருக்கின்றன. குரங்குகளின் கண்கள் மிகவும் சஞ்சலமானவை
அவைகளின் நோக்கு நாற்புறமும் இருந்துகொண்டேயிருக்கும். பிர
மத்தின் கண்களும் இப்படித்தானிருக்கவேண்டும். ஆண்டவனி
வேலை கண்கள் நிலைத்திருந்தால் நடைபெறாது. நானும் நீங்களு
வேண்டுமானால் தியானத்தில் ஆழ்ந்துபோய் அமர்ந்திருக்கலாம். ஆன
ஆண்டவனே தியானத்தில் ஆழ்ந்துவிட்டால் உலகின் கதி என்னவது
ஆகையால் குரங்குகளிடம் ரிஷிகளுக்கு அனைவரையும் பற்றி அக்கற
யுள்ள பிரம்மத்தின் கண்கள் காணப்படுகின்றன. குரங்குகளிடம் பர
பொருளைக் காணக் கற்றுக்கொள்.

மேலும், அம் மயிலோ! மகாராஷ்டிரத்தில் மயில்கள் அதிகமில்லை
ஆனால் குஜராத்தில் அவை ஏராளம். நான் குஜராத்திலிருந்தேன்
தினமும் பத்து பன்னிரண்டு மைல் சுற்றுவது எனக்கு வழக்கம்
சுற்றும்பொழுது மயில்கள் காணப்படும். ஆகாயத்தில் மேகம் திரளு
பொழுது, மழை பெய்வதற்கு ஆயத்தம் நடந்துகொண்டிருக்கையில்
வானமெங்கும் இருள் சூழ்ந்து விடுகையில் மயில் கூவுகிறது. உள்ளத்
னடியிலிருந்து எழுந்துவரும் அதன் அந்த உரத்த குரலை நீங்கள் ஒ
முறை கேட்டால்தான் அது உங்களுக்குப் புரியும். நம் சங்கீத சா
திரம் முழுவதும் இம் மயூரத் தொனியின் அடிப்படையிலேயே
அமைக்கப்பட்டிருக்கிறது. மயிலின் குரலே ஷட்ஜம சுவர

ஜ் रीति (ஷட்ஜம் ரௌதி). இந்த முதல் சுவரமான ஷட்ஜமம் நமக்கு பிலினிடமிருந்தே கிடைத்தது. பிறகு கூட்டிக் குறைத்து மற்றைச் வரங்களையும் அமைத்துக்கொண்டோம். மேகத்திலேயே பதிந்துள்ள தன் அந் நோக்கையும், அதன் அக் கம்பீரத்தொனியையும், மேகத் ன் அந்த கடகடவென்ற கர்ஜனையைக் கேட்டதும் விரிக்கப்படும் தன் தோகைக் குடையையும் என்னென்பது! ஆகா! அக் குடையின் ழகின்முன் மனிதனது பெருமையெல்லாம் மங்கி மறைந்து விடு றதே! ராஜா, மகாராஜாக்களும் ஏதேதோ அழகெல்லாம் செய்து காள்ளுகிறார்களே, ஆனால் அம் மயில் தோகையின் முன் இவர்களு டய ஜோடிப்பெல்லாம் எம்மாத்திரம்? அதன் அழகை என்னென்பது! ந்த ஆயிரமாயிரம் கண்களையும், அந்தப் பல வண்ண ஒளியையும், ந்த அற்புதமான, மெத்தென்ற அழகிய அமைப்பையும், அந்தச் றந்த வேலைப்பாடுகளையும் என்னென்போம்! அந்தக் குடையைச் றிது பாருங்கள்; அதில் பரம்பொருள் இருப்பதையும் காணுங்கள். ச் சிருஷ்டி முழுமையும் இதே வகையில்தான் ஜோடிக்கப்பட்டிருக் றது. எங்கு நோக்கினும் பரம்பொருளே காட்சி தந்துகொண்டு நிற் றது. ஆனால் அதைக் கண்கொண்டு காணாத நாமே துரதிர்ஷ்டசாலி ள்! துகாராம்,

“ஆண்டவனுக்கெங்கும் நற்காலமே;
துரதிர்ஷ்ட முள்ளவனுக்கே பஞ்சம்”*

ன்கிறார். மகான்களுக்கு எங்கும் நல்ல காலமே; துரதிர்ஷ்டம் பிடித்த ம்மையே எங்கும் கெட்டகாலம் வதைக்கிறது!

வேதங்களில் அக்னி வழிபாடு சொல்லப்பட்டிருக்கிறது. அக்னி நாரா ணனுகும். அது எவ்வளவு பளபளவென்று ஒளி பொருந்தியுள்ளது! ரெண்டு மரங்கள் ஒன்றுடன் ஒன்று உராய்ந்ததும் அது வெளிப்பட்டு டுகிறது. அது முன்பு எங்கே மறைந்திருந்ததோ! அதில்தான் எவ் ளவு வெப்பம், எவ்வளவு ஒளி! வேதத்தொனி முதன் முதலில் தோன் யது தீயின் வழிபாட்டின் பொருட்டே—

“अग्निमीळे पुरोहितं यज्ञस्य देवमृत्विजम् ।
होतारं रत्नधातमम् ।”
(அக்னிமீளே புரோஹிதம் யஜ்ஞஸ்ய தேவ மிருத்விஜம்
ஹோதாரம் ரத்ன தாதமம்)

ந்த அக்னியின் வழிபாட்டில் வேதம் தொடங்கிற்றே அதைப் பாரேன்.

* देवा आहे सुकाळ देशीं, अभाग्यासी दुर्भिक्ष ।

அதன் ஜுவாலைகளைப் பார்க்கையில் எனக்கு ஜீவான்மாக்களின் தோ
றமும் அழிவும், ஏற்ற இறக்கங்களும் பல்வேறு மாறுபாடுகளும் நி
வுக்கு வருகின்றன. அத் தீக்கொழுந்துகள் வீட்டு அடுப்பிலிருந்தாலு
காட்டுத் தீயினுடையதாயிருந்தாலும் வைராக்கியசீலனது குடும்பத்தை
போல (அடக்கமாய், அமெரிக்கையாய்) இருப்பதில்லை. அத்தீக்கொழு
துகள் எங்கே இருப்பினும் தம் அமளி, துமளியை ஆரம்பித்துவி
கின்றன. அவை இடையறாது துடித்தவண்ணமிருக்கின்றன. அவ
எப்பொழுதும் மேலோங்கி எழத் தவிக்கின்றன. விஞ்ஞானம் படித்த
வர்களாகிய நீங்கள் 'ஈதர்' காரணமாக அவை அசைகின்றனவென்று
காற்றின் அழுக்கத்தினால் அசைகின்றனவென்றும் சொல்லுவீர்கள்
ஆனால் என்னைப்பற்றிய வரையிலாவது நான் கொள்ளும் பொருள்
மேலேயுள்ள பரம்பொருளுடன், ஒளிக்கடலான அச் சூரிய நாராயண
னுடன் கலக்கும் பொருட்டே அது இடையறாது மேலே தாவிக்கொண்
டிருக்கிறது என்பது. அது தோன்றியது முதல் அவியும்வரை அதன்
இப் பாய்ச்சல் நிற்பதில்லை. சூரியன் அம்சியும் இத் தீக்கொழுந்துக
அம்சமுமாகும். அம்சம் அம்சியினிடம் போகத் துடித்துக் கொண்டிரு
கிறது; அது அவியும் பொழுதுதான் துடிப்பும் அடங்கும். அதற்குமுன்
அடங்காது. 'சூரியன் எங்கே நான் எங்கே! நான் எவ்வளவு தொலை
விலிருக்கிறேன்!' என்று அது எண்ணுவதேயில்லை. பூமியிலிருந்து தன்
சக்திக்குகந்தவகையில் மேலே எழும்புவதென்ற ஒன்றே அதற்கு
தெரியும். இத்தகைய இந்த அக்னி என்பதென்ன? அக்னியின் உருவி
ஜொலிக்கும் வைராக்கியமே வெளியாகியிருக்கிறது. இதனாலேயே
வேதத்தின் முதல் ஒலி अग्निमीळे (அக்னிமீளே) என்று எழுந்தது.

மேலும், அந்தக் குயிலோ, அதை எப்படி மறப்பேன்? அது யாரை
அழைக்கிறது? கோடையில் ஆறு குளங்களெல்லாம் வறண்டுவிட்டன
ஆனால் மரங்களில் கொழுந்துகள் தளிர்த்துக் கொண்டிருக்கின்றன
அவற்றிற்குச் இச் சிறப்பைக் கொடுத்தது யார், அக் கொடையாள
எங்கே என்று அது கேட்கிறது? எவ்வளவு ஆவல் ததும்பும் இனிய
கூவல்! இந்து மதத்தில் குயிலின் குரல்பற்றிய ஒரு விரதமே உண்டு
பெண்டிர் குயிலின் கூவலைக் கேளாது உணவு கொள்வதில்லை என்று ஒரு
விரதம் இருக்கிறார்கள். குயிலின் உருவில் வெளியாகும் பரம்பொருளை
தரிசிப்பதற்குப் போதிப்பது இவ் விரதம். அக் குயில் எவ்வளவு
அழகாய்க் கூவுகிறது! அது உபநிடதமே பாடுவது போலல்லவா இரு
கிறது! அதன் 'குகூ...குகூ' என்ற தொனி காதில் விழுகிறதேயல்லாம
அது கண்ணிற் படுவதில்லை. அந்த ஆங்கிலக்கவி வோர்ட்ஸ்வர்த் அ

...த்தியமாய் அதைத் தேடிக்கொண்டு காடு காடாய்த் திரிகிறார். இங்கி...ந்தின் பெரிய கவிஞர் குயிலைத் தேடிக்கொண்டிருக்க, இந்தியாவிலோ ...களிலுள்ள சாதாரணப் பெண்கள் குயிலைக் காணாது உணவும் ...ள்வதில்லை. இக் 'கோகில விரதம்' காரணமாக இந்தியப் பெண்கள் ...ரிய கவிகளுக்குரிய பதவியைப் பெற்று விட்டார்கள். பேரானந்தம் ...ிக்கும் இனிய குரலில் கூவும் அதனுருவில் அழகிய பரம்பொருளே ...க்குக் காட்சியளிக்கிறது.

குயில் அழகியதென்றால் காகம் விகாரமானதா? காகத்துக்கும் ...ப்பளி. எனக்கோ அது மிகவும் பிரியமானது. அதன் அக் ...ணங்கரேலென்ற நிறமும், அந்த அழுத்தமான குரலும்! அதன் ...க் குரல் அப்படி என்ன மோசமா? இல்லை. அதுவும் இனியதே. ...து சிறகுகளை அடித்துக்கொண்டு வருவது எவ்வளவு நேர்த்தியாயிருக் ...து! சிறு குழந்தைகளின் உள்ளத்தை அல்லவோ அது கவர்ந்து ...டுகிறது! சிறிய குழந்தை வீட்டில் அடைந்திருக்கையில் உணவு ...ள்ள மறுக்கிறான்; வெளியே முற்றத்தில் உட்காரவைத்து அவனுக் ...க் காக்கை, குருவி ஆகியவற்றைக் காட்டி உணவு ஊட்ட வேண்டியிருக் ...து. காக்கையிடம் நேசமுள்ள அக் குழந்தை பைத்தியமா? அவன் ...த்தியமல்ல. அவனிடம் அறிவு நிரம்பியிருக்கிறது. காக்கையின் ...ருவில் தோன்றும் பரம்பொருளுடன் அக் குழந்தை உடனே இரண் ...றக் கலந்துவிடுகிறான். தாய் சாதத்தின்மீது தயிர் ஊற்றட்டும், பால் ...ற்றட்டும், சர்க்கரை இடட்டும், அந்தக் குழந்தைக்கு அதெல்லாம் ...ன்றும் பிடிக்கவில்லை. காக்கை இறக்கைகளைப் படபடவென்று அடித் ...க் கொள்வதிலும், அது தன் அலகை விரிப்பதிலுமே அவனுக்கு ...னந்தம். குழந்தைகளுக்கு சிருஷ்டியின் விஷயத்தில் இருந்து வரும் ...வலை அடிப்படையாகக் கொண்டே 'ஈசாப்பு நீதிக் கதைகள்' அத் ...னையும் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஈசாப்புக்கு எங்கும் ஆண்டவன் ...யமாய்த் தோன்றிற்று. எனக்கு மிகவும் பிரியமான புத்தகங்களின் ...ரிசையில் 'ஈசாப்பு நீதிக்கதைகளு'க்கு நான் முதலிடம் அளிப்பேன்; ...தை நான் மறக்கமாட்டேன். ஈசாப்பின் இராச்சியத்தில் இரண்டு ...ககளும் இரண்டு கால்களும் கொண்ட மனிதப்பிராணி மட்டுமில்லை, ...ரிகள், நாய்கள், காகங்கள், மான்கள், முயல்கள், ஆமைகள், பாம்புகள் ...ழுக்கள் ஆகிய எல்லாம் தம்முள் பேசிச் சிரிக்கின்றன. அதை ஒரு ...ரம்மாண்டமான மகாநாடென்றே கொள்ளலாம்! ஈசாப்புடன் சிருஷ்டி ...லுள்ள சராசரங்கள் அனைத்தும் உரையாடுகின்றன. அவனுக்குத் ...தெய்வ திருஷ்டி அமைந்திருந்தது. இராமாயணமும் இதே நோக்கின்

அடிப்படையில் அமைந்துள்ளதே. துளசிதாசர் இராமனது பா
லீலையை வர்ணிக்கிருர். இராமன் முற்றத்தில் விளையாடிக் கொண்டிரு
கிருன் : ஒரு காக்கை அங்கே வருகிறது. இராமன் அதை மெதுவாய்ச்
சென்று பிடிக்க விரும்புகிருன். காகம் பின்னுல் தாவி உட்காருகிறது
இறுதியில் இராமன் களைத்துப் போகிருன். ஆனுல் அவனுக்கு ஒ
யுக்தி தோன்றுகிறது. ஒரு பணியாரத் துண்டுடன் இராமன் காக்கை
னிடம் போகிருன். இராமன் பணியாரத்தைச் சிறிது முன்னே
நீட்டியதும் காக்கை சிறிது பக்கத்தில் வருகிறது. இத்தகைய வர்ணனை
யில் துளசிதாசர் பல பக்கங்களைச் செலவழிக்கிருர். ஏனெனில், அ
காகம் ஆண்டவனே ; இராமனிடமுள்ள அக் கடவுளின் அமிசமேதா
காகத்தினிடமும் இருக்கிறது. இராமனுக்கும் காகத்திற்கும் ஏற்பட்
அப் பழக்கம் பரம்பொருளுக்கும் பரம்பொருளுக்கும் ஏற்பட்ட பழக்க
போன்றதே.

## (54) தீயோரிடமும் கடவுளின் காட்சி

இந்தச் சிருஷ்டியெங்கும் பல்வேறு உருவங்களில்—புனிதமா
ஆறுகளாயும், பெரிய மலைகளாயும், ஆழ்ந்த கடலாயும், பிள்ளைப் பா
முள்ள பசுவாயும், சிறந்த குதிரையாயும், வீரம்மிக்க சிங்கமாயும், இனி
குயிலாயும், அழகிய மயிலாயும், சுத்தமான தனிமையை விரும்பு
பாம்பாயும், சிறகை அடித்துக் கொள்ளும் காகமாயும், ஓங்கிஎழு
தீயாயும், அமைதியான நட்சத்திரமாயும், கடவுளே வியாபித்திருக்கிரு
என்பது கருத்து. கண்களை அவரைக் காணப் பயிற்ற வேண்டு
முதலில் பெரிய சுலபமான எழுத்துக்களையும், பிறகு நுண்ணி
சிக்கலான எழுத்துக்களையும், கற்கவேண்டும். சிக்கலான எழுத்து
களைக் கற்ருகும்வரை படிப்பில் முன்னேற்றம் ஏற்படாது. வார்த்தைக்கு
வார்த்தை, அடிக்கடி சிக்கலான எழுத்துக்கள் வரும். தீயோரிட
உள்ள பரம்பொருளைப் பார்க்கவும் கற்க வேண்டும். இராமன் நமக்கு
புரிகிருன் ; ஆனுல் இராவணனும் புரிய வேண்டும். பிரகலாதன
புரிகிருன் ; இரணிய கசிபுவும் புரியவேண்டும். வேதத்தில்—

“नमोनमः स्तेनानां पतये नमोनमः
नमः पुंजिष्टेभ्यो नमो निषादेभ्यः”
“ब्रह्म दाशा ब्रह्म दासा
ब्रह्मैवेमे कितवाः।”

(நமோநம: ஸ்தேனுனும் பதயே நமோநம:
நம: புஞ்ஜிஷ்டேப்யோ நமோ நிஷாதேப்ய:

ப்ரஹ்மதாஶா பிரஹ்ம தாஸா
ப்ரஹ்மைவேமே கிதவா:)

அந்தத் திருடர் தலைவருக்கு நமஸ்காரம்; அந்தக் கொடியவர்களுக்கு, ம்சை புரிவோருக்கு நமஸ்காரம்; அந்த மோசக்காரர், திருடர், ாள்ளைக்காரர் ஆகிய அனைவரும் பிரம்மமே; அவர்கள் அனைவருக்கும் ஸ்காரம்" என்றுள்ளது.

இதன் பொருளென்ன? இதன் பொருள், சுலபமான எழுத்துக் ளக் கற்றுக்கொண்டாகிவிட்டது, இனி கடின எழுத்துக்களையும் பாய் என்பது. கார்லைல் 'வீரர் வழிபாடு' என்று ஒரு புத்தகம் ழுதியிருக்கிறார். அதில் நெப்போலியனையும் ஒரு வீரனென்று, தேவ மிசம் பொருந்தியவனென்று கூறியிருக்கிறார். அங்கே சுத்தப் பரம் ாருளல்ல, கலப்படமான பரம்பொருளே இருப்பது. ஆனால் இப் ம்பொருளையும் புரிந்துகொள்ளவேண்டும். இதனாலேயே துளசிதாசர் ராவணனை இராமனுடைய விரோதியான பக்தனென்று சொல்லியிருக் றார். ஆம், இப் பக்தனது தன்மையும் போக்கும் சிறிது வேறானதே. படுவதனால் கால் கொப்புளித்து வீங்கிப் போகிறது; ஆனால் வீக்கம் ான ஒத்தடம் கொடுத்தால் அடங்கிவிடுகிறது. இரண்டிலுமுள்ளது ரே தீ. ஆனால் அவை வெவ்வேறு வகையில் செயல் படுகின்றன. ராமனிடத்தும் இராவணனிடத்தும் வெவ்வேறு வகையில் செயல் ட்டபோதிலும் அவ்விருவரிடத்தும் உள்ள பரம்பொருள் ஒன்றே.

ஸ்தூலம் - சூக்குமம், சுலபமானது - சிக்கலானது, இலகுவான ழுத்து - சிக்கலான எழுத்து ஆகிய அனைத்தையும் கற்றுக்கொள். றுதியில் ஆண்டவனில்லாத எதுவுமேயில்லை என்பதை உணர். வ்வொரு துளியிலும் ஒவ்வொரு அணுவிலும் அவனே இருக்கிறான். றும்பு தொடங்கி பிரம்மாண்டம் ஈறாக எங்கும் பரம்பொருளே பரந் ருக்கிறது. எல்லோரையும் குறித்துக் கவலையுள்ள, கருணையுள்ள ானமூர்த்தியே வாஞ்சையும் திறனும் புனிதமும் அழகுமுள்ள பரம் பாருளாய் நாற்புறமும், எங்குமே நிற்கிறது.

ஞாயிறு, 24-4-'32

## பதினோராம் அத்தியாயம்

# விசுவரூப தரிசனம்

### (55) விசுவரூப தரிசனத்தில் அர்ஜுனன் ஆவல்

சகோதரர்களே, சென்ற வாரத்தில் நாம் இவ்வுலகின் அளவில எல்லாப் பொருள்களில் வியாபித்துள்ள பரம்பொருளை எப்படிப் புரிந்துகொள்வது, நம்முன் தோன்றும் இப் பெருங் கண்காட்சியை எப்படி நமதாக்கிக் கொள்வது என்பதை அறிந்துகொண்டோம். முதலில் ஸ்தூலத்திலும் பிறகு சூக்குமத்திலும், முதலில் எளிமையிலும் பிறகு சிக்கலிலுமென எல்லாப் பொருள்களிலும் பகவானைப் பார்த்து அவனைத் தரிசித்தல், அல்லும் பகலும் பயிலுவதன் மூலம் அகில உலகமும் நாமே என உணரக் கற்றல் என்பதைச் சென்ற அத்தியாயத்தில் பார்த்தோம்.

இப்பொழுது பதினோராம் அத்தியாயத்தில் நம் பார்வையைச் செலுத்த வேண்டும். இவ்வத்தியாயத்தில் பகவான் தம் பிரத்தியட்ச உருவைக் காட்டி அர்ஜுனனிடம் தம் கருணையைப் புலப்படுத்தியிருக்கிறார். அர்ஜுனன் பகவானிடம், "பிரபுவே, தங்களது மகிமை பொருந்திய திறம் அனைத்தும் வெளியாகியுள்ள சம்பூரண உருவை என் கண்களால் பார்க்க விரும்புகிறேன்" என்றான். அர்ஜுனனது இக் கோரிக்கை விசுவரூப தரிசனம் பற்றியது.

நாம் 'விசுவம்' 'ஜகத்' 'என்ற சொற்களைக் கையாளுகிறோம். இந்த ஜகத் (உலகம்) விசுவத்தின் (சிருஷ்டியின்) ஒரு சிறு பகுதியே. இச் சிறு துணுக்கைக்கூட நம்மால் புரிந்துகொள்ள இயலவில்லை. சிருஷ்டியனைத்தையும் கருத்தில் கொண்டு பார்த்தோமானால் இவ்வளவு விசாலமாய்க் காணும் இவ்வுலகம் மிகவும் சிறியதென்பது தெரியும். இரவு நேரத்தில் நாம் வானத்தைச் சிறிது நோக்குவோமாயின் அதில் எண்ணற்ற கோளங்கள் காணப்படும். வானவெளியில் அமைக்கப் பட்டுள்ள அக் கோளவரிசைகள், அந்தச் சின்னஞ்சிறு அழகிய பூக்கள், கண்ணைச் சிமிட்டிச் சிமிட்டிப் பார்க்கும் இலட்சக் கணக்கான நட்சத்திரங்கள் ஆகிய இவை அனைத்தின் சொரூபம் உங்களுக்குத் தெரியுமா? இச் சின்னஞ்சிறு நட்சத்திரங்கள் மிகமிகப் பெரியவை. அவைகளினுள் எண்ணற்ற சூரியன்களும் அடங்கிப்போம். அவை ரசமயமான, ஒளி மயமான தகதகவெனக் கொதிக்கும் தாதுக்களின் கோளங்கள். இத் தகைய இவ்வெண்ணிலடங்கா உருளைகளை யார் கணக்கிட முடியும்? இவைகளுக்கு அளவுமில்லை, எண்ணிக்கையுமில்லை. வெறும் ஊனக் கண்

ருக்கே ஆயிரமாயிரம் இருப்பதாய்த் தெரிகிறது. தூரதிருஷ்டிக் ணுடி கொண்டு பார்க்கையில் இவை கோடிக் கணக்கில் தென்படு றன. இன்னும் பெரிய தூரதிருஷ்டிக் கண்ணுடி யிருக்குமாளுல் ன்னும் எவ்வளவோ அதிகம் இருப்பது தெரியும். அப்பொழுது இது கே முடிகிறது, இது எப்படி அமைந்துள்ளது என்பதைப் புரிந்து ள்வதே கஷ்டமாகிவிடும். மேலும், கீழும், எல்லாவிடங்களிலும் வியுள்ள இவ்வனந்த சிருஷ்டியின் ஒரு சிறு துணுக்கே உலகமெனப் வது. ஆனல் இவ்வுலகமே எவ்வளவு பெரிதாய்த் தோன்றுகிறது!

இவ் விசால சிருஷ்டி பரம்பொருளின் சொரூபத்தின் ஓர் அமிசம். ரி அதன் மற்ருேர் அமிசத்தைப் பார்ப்போம்; அதுதான் காலம். ம் கழிந்த காலத்தைக் கவனிப்போமாளுல் சரித்திர எல்லேக்குள், கமாளுல் பத்தாயிரம் வருஷம் வரை போகக்கூடும். அதற்குப் திய காலம் புரிவதேயில்லே. சரித்திர காலம் என்பது பத்தாயிர ருஷமாயிருக்க, நம் ஆயுட் காலமோ நூறு வருஷம்கூட இல்லே. உண் மயில் காலம் ஆதியும் அந்தமும் அற்றது. இதற்குள் கழிந்த காலம் வளவு என்பதற்கு ஓர் அளவோ, கணக்கோ இல்லே. இனி எவ்வளவு லமிருக்கிறது என்பதையும் கணக்கிட முடியவில்லே. நமது உலகம் ருஷ்டியுடன் ஒப்பிடுகையில் மிகவும் இழிந்ததாய், சிறியதாய் இருப் தைப் போல, சரித்திரம் கண்ட இப் பத்தாயிர வருஷமும் அனந்த லத்துடன் ஒப்பிடப்படுகையில் ஒன்றுமே இல்லாததைப் போன்றுளது. ந்த காலம் அனுதியாயிருக்க, வருங்காலமோ இறுதியற்றதாயிருக் து. இச் சிறிய நிகழ் காலமோ நாம் பேசிக்கொண்டிருக்கையிலேயே ந்த காலத்திற் போய்க் கலந்துவிடுகிறது. நிகழ்காலம் உண்மையில் கேயிருக்கிறது என்பதைச் சொல்லி முடிப்பதற்குள் அது இறந்த லமாகிவிடுகிறது. இத்தகைய இந்தச் சிறிதும் நிலேயற்ற நிகழ்காலம் டுமே நம்முடையது. நான் இப்பொழுது பேசிக்கொண்டிருக்கிறேனே, பேச்சு என் வாயிலிருந்து வெளிவந்ததும் அது நான் பேசியதாக, றந்த காலத்தைச் சேர்ந்துவிடுகிறது. இவ்வாறு இப் பெரிய காலவெள் ம் ஒரே வகையாய் ஓடிக் கொண்டேயிருக்கிறது. அதன் உற்பத்தி தானமும் தெரியவில்லே, அது போய்க் கலக்கும் கடலும் தெரியவில்லே; டையிலுள்ள சிறு பகுதியையே நாம் பார்க்கிருேம்.

இவ்வாறு பூமியின் பிரமிக்கச் செய்யும் பரப்பு ஒரு புறமும், காலத் ன் பலமிக்க பிரவாகம் ஒரு புறமுமாயுள்ள சிருஷ்டியின் இவ்விரு திகளின் மூலமாய் சிருஷ்டியை நோக்குவோமாளுல் நாம் நம் கற்ப த்திறனே எவ்வளவுதான் தூண்டிவிட்டபோதிலும் இவைகளின் எலி

லயை நம்மால் காணவே இயலவில்லை. இறந்தகாலம், எதிர்கா
நிகழ்காலம் ஆகிய மூன்று காலங்களிலும் மேலே, கீழே, இங்கே அ
எல்லாவிடங்களிலும் வியாபித்துள்ள விராட் பரம்பொருளை ஒருவ
ஒரே காலத்தில் பார்க்கவேண்டும், பரம்பொருளை இவ்வுருவில் கா
வேண்டும் என்ற அவா அர்ஜுனன் மனத்தில் எழுந்தது. இவ்வவ
லிருந்து தோன்றியதே பதினோராவது அத்தியாயம்.

அர்ஜுனன் பகவானுக்கு மிகவும் பிரியன்; எவ்வளவு பிரியனெ
ருல், பத்தாம் அத்தியாயத்தில் எந்தெந்த உருவில் தம்மைச் சிந்தி
வேண்டுமென்று வரிசையாகச் சொல்லிக்கொண்டுவந்த பகவான், "பா
டவர்களுள் அர்ஜுனன் உருவில் நானிருப்பதாய்ச் சிந்தனை செ
என்கிறார். "பாண்டவர்களுள் தனஞ்சயன்" என்கிறான் ஸ்ரீ கி
ணன். இதைவிட அதிகமான அன்புப் பித்தம், எங்கேயுண்டு? அ
எவ்வளவு பித்தம் உண்டுபண்ணும் என்பதற்கு இது உதாரணம்.
ஜுனன்மீது பகவானுக்கு அளவற்ற அன்பு. இப் பதினோராம் அத்தி
யம் அவ்வன்பின் பிரசாதமே. தெய்வ உருவைக் காணவேண்டுமென
அர்ஜுனனது ஆவலை, பகவான் அவனுக்குத் தெய்வப் பார்வை
அளித்துப் பூர்த்தி செய்தார்; அர்ஜுனனுக்கு அன்பின் பிரசா
அளித்தார்.

## (56) சிறு உருவிலும் பூரண தரிசனம் கிட்டும்

அத் தெய்வ உருவின் அழகிய, நேர்த்தியான வர்ணனை இவ்வத்தி
யத்திலிருக்கிறது. இவையெல்லாம் உண்மையாயினும் இவ் வி
உருவத்தினிடத்து எனக்குத் தனி ஆசை இல்லை; சிறிய உருவத்திலே
எனக்குத் திருப்திதான். சிறியதாய், சாதாரணமாய் என்முன் கா
படும் உருவின் இனிமையை அனுபவிக்க நான் கற்றுக்கொண்டு வ
டேன். ஆண்டவன் துண்டு துண்டாய்ப் பிரிக்கப்பட்டிருக்கவில்
ஆண்டவனது நாம் பார்க்கும் உரு அவனது ஒரு பகுதி என்று
எஞ்சிய பகுதி புறத்தே இருக்கிறதென்றும் எனக்குத் தோன்றவில்
இப் பெருத்த சிருஷ்டியில் வியாபித்துள்ள ஆண்டவனே பூரணமாய்
சிறிய விக்கிரகத்திலும், ஒரு சிறு மண் திவலையிலும் வியாபித்திரு
ருனேயல்லாது எவ்வகையிலும் குறைவாய் அல்ல. அமுதக் கட
உள்ள இனிமை அதன் ஒரு துளியிலும் இருக்கிறது. எனக்குக் கிடை
துள்ள ஒரு சிறு அமுதத் துளியின் இனிப்பை நான் அனுபவித்
கொண்டே இருக்கலாமென்று எனக்குத் தோன்றுகிறது. நான் வேண்
மென்றேதான் அமுதத்தை உதாரணமாகக் கொண்டேன், தண்

யா, பாலேயோ கொள்ளவில்லை. ஒரு கிண்ணம் பாலுக்குள்ள உருசி
ான் ஒரு செம்புப் பாலுக்கும் இருக்கும்; ஆனால் உருசி அவ்வாறே
ந்தபோதிலும் புஷ்டி அதே அளவு இராது. ஒரு துளி பாலிலுள்ளதை
ஒரு கிண்ணப் பாலிலுள்ள புஷ்டி அதிகம். ஆனால் அமுதத்தின்
மை இவ்வாறல்ல. அமுதக் கடலின் இனிப்பு அமுதத்துளியிலும்
ப்பதோடு புஷ்டியும் அதே அளவிருக்கும். அமுதம் ஒரு துளியே
ந்திய போதிலும் நமக்குச் சாகாவரம் கிடைத்துவிடும்.

அவ்வாறே ஆண்டவனின் விராட்ரூபத்தில் உள்ள அதே அளவு
வத்தன்மையும், புனிதமும் ஒரு சிறிய உருவிலும் இருக்கின்றன.
னிடம் நீங்கள் ஒரு பிடி கோதுமையை மாதிரிக்காகக் கொடுக்க
க்கு அதைக் கோதுமை என்று புரிந்துகொள்ள முடியாதிருக்கையில்,
முன் ஒரு மூட்டைக் கோதுமையைக் கொட்டினால் பயன் என்ன?
முன்னுள்ள சிறிய மாதிரிகளிலிருந்தே நான் அவனைப் புரிந்து
ள்ளாதிருக்கையில் பேருருவம் தாங்கியுள்ள ஆண்டவனை எப்படி
ந்துகொள்வேன்! பெரியவை, சிறியவை என்பவை என்ன? சிறிய
வைப் புரிந்துகொண்டுவிட்டால் பெரியதைப் புரிந்துகொண்டமாதிரி
ா. ஆகையால் ஆண்டவன் எனக்குத் தன் பேருருவைக் காட்ட
ண்டுமென்ற ஆவல் எனக்கில்லை. அர்ஜுனனைப்போல் விசுவரூப
னம் காட்டவேண்டுமென்று கோர எனக்குத் தகுதியும் இல்லை.
லும் எனக்குக் காட்டப்படுவது விசுவரூபத்தின் ஒரு பகுதி என்பது
. ஒரு சித்திரத்தின் ஒரு பகுதியைக் கிழித்துக் கொணர்ந்தால் அதி
ந்தே நம்மால் முழுச் சித்திரம் எப்படியிருக்குமென்று உணர முடி
. ஆனால் பரம்பொருளோ இவ்வாறு பல துண்டுகளால் ஆனதல்ல;
பொருள் துண்டாய் வெட்டப்பட்டதல்ல. ஒரு சிறிய உருவிலும்,
யிலும் அந்த இறுதியற்ற ஆண்டவன் முழுமையும் அடங்கியிருக்
ன். ஒரு சிறிய புகைப் படத்திற்கும் பெரிய புகைப்படத்திற்கும்
ள வேற்றுமை என்ன? பெரிய புகைப்படத்திலுள்ள எல்லா அமிசங்
ம் சிறியதிலும் இருக்கின்றன. சிறிய புகைப்படம் பெரியதின் பகுதி
ல, துண்டல்ல. சிறிய எழுத்துக்களைக் கோத்து அமைத்த ஒரு
ல்லுக்கு உள்ள பொருளேதான் பெரிய எழுத்துக்களால் அமைந்த
ல்லுக்கும்; பெரிய எழுத்துச் சொல்லுக்குள்ள பொருள் பெரிதாயும்
ய எழுத்துச் சொல்லுக்குள்ள பொருள் சிறிதாயும் இருக்கும் என்ப
ல.

விக்கிரக ஆராதனைக்கு அடிப்படையாயுள்ள கருத்து இதுவே.
கிரக ஆராதனையை இதுவரை எத்தனையோ பேர் தாக்கியிருக்கிறார்

கள். வெளிநாட்டினரும், நம் நாட்டையே சேர்ந்த சில சிந்தனைச
விக்கிரக ஆராதனையைத் தவறென்று கூறியிருக்கிறார்கள். ஆனால்
சிந்திக்கச் சிந்திக்க விக்கிரக ஆராதனையின் சிறப்பு எனக்கு
மேலும் விளங்கிக்கொண்டே வருகிறது. விக்கிரக ஆராதனையின்
தென்ன? ஒரு சிறிய பொருளில் அகில சிருஷ்டியையும் உணர உ
வித்தையே விக்கிரக ஆராதனை. ஒரு சிறிய கிராமத்தில் அகில
மாண்டத்தையும் காண உதவும் வித்தையைக் கற்பது தவறாகுமா?
வெறும் கற்பனையல்ல; நிதரிசனமான, அனுபவத்தில் வந்த விஷ
விராட் உருவில் உள்ளவையெல்லாம் ஒரு சிறிய விக்கிரகத்திலும்,
சிறு மண்திவலையிலும் அடங்கி யிருக்கின்றன. அம் மண் கட்டி
கீழே மா, வாழை, கோதுமை, தங்கம், தாமிரம், வெள்ளி ஆகிய எல்
இருக்கின்றன. சிருஷ்டி அனைத்தும் அத் திவலையினுள் அடங்கி ய
கிறது. ஒரு நாடகக் கோஷ்டியில் ஒரே ஆள் அடிக்கடி வெவ்வே
வேஷம் புனைந்துகொண்டு மேடைக்கு வருவதைப்போலவேதான் ஆ
டவனும் செய்கிறான் என்று உணருங்கள். ஒரு நாடகாசிரியன் நா
ஒன்றை எழுதி, தானே அந் நாடகத்தில் நடிப்பதைப்போல, பரம்பெ
ருளும் முடிவில்லா நாடகம் எழுதி அளவிலடங்காப் பாத்திரங்க
வேஷம் பூண்டு நாடகமேடையில் வந்து நடிக்கிறது. இம் முடிவிலா
கத்தின் ஒரு பாத்திரத்தைப் புரிந்துகொள்ளலே எல்லாப் பாத்திரங்
யும் புரிந்துகொள்வதற்கு ஈடாகும்.

காவியத்தின் உவமை, உதாரணம் ஆகியவைகளுக்கு ஆ
மெதுவோ அதுவேதான் விக்கிரக ஆராதனைக்கும். உருண்டு தி
டுள்ள பொருளைதையும் பார்க்கும்பொழுது நமக்கு ஆனந்தம் ஏற்
கிறது. ஏனெனில், அதில் ஒரு ஒழுங்குமுறை இருக்கிறது. ஒழு
முறை என்பது ஆண்டவனின் தன்மையே. ஆண்டவனது சிருஷ்
சர்வாங்க சுந்தரமானது. அதில் ஒழுங்குமுறை உள்ளது. அ
உருண்டு திரண்டுள்ள பொருள் ஒழுங்கான ஆண்டவனின் உருவ
ஆனால் காட்டில் வளர்ந்துள்ள கோணல் மாணலான மரமும் ஆண்ட
உருவமே. அதில் ஆண்டவனது கட்டுக்கடங்காத் தன்மை காணப்
கிறது. அம் மரத்திற்குக் கட்டுத் திட்டம் எதுவும் கிடையாது. ஆ
டவனை யார் கட்டுப்படுத்துவார்? அக் கட்டிலடங்கா ஆண்டவன்
கோணல்மாணலான மரத்திலிருக்கிறான். நேராக நெடிது ஓங்கிநிற்
கம்பத்தைக் காணும்பொழுது அது ஆண்டவனை ஒத்திருப்பதா
தோன்றுகிறது. சித்திர வேலைப்பாடுள்ள, நகாசு வேலைப்பாடமை
தூணைப் பார்க்கையில் அதில் வானத்தில் நட்சத்திரங்கள் என்ற நச

லயைச் செய்யும் ஆண்டவன் காணப்படுகிறான். கத்தரித்து வெட்டி
_ மரம் செடிகளுள்ள அழகிய சிங்காரத் தோட்டத்தில் ஆண்டவனது
க்கமான உருவம் தோன்றுகிறதெனில், பெரிய காட்டில் ஆண்டவ
பெருமையும் கட்டிலடங்காத் தன்மையும் காட்சியளிக்கின்றன.
டிலும் இன்பம் ஏற்படுகிறது, அழகிய பூங்காவிலும் மகிழ்ச்சியுண்டா
து. அப்படியானால் நாம் பித்தர்களா? இல்லை. இரண்டிலுமே இன்
ஏற்படுவதற்குக் காரணம், ஆண்டவனது தன்மை இரண்டிலும்
ப்பதே. மழுமழு வென்றுள்ள சாலக்ராமத்திலுள்ள ஒளியே நர்
தயினின்று எடுக்கப்படும் கரடுமுரடான சிவலிங்கத்திலும் இருக்
து. ஆகையால் எனக்கு அப்பேருருவம் தனியாய்த் தெரியாதிருப்பி
பாதகமில்லை.

ஆண்டவன் எங்கும், வெவ்வேறு பொருள்களில் வெவ்வேறு குணங்
ன் மூலமாய்த் தோன்றியிருப்பதினாலேயே நமக்கு அந்தந்தப் பொரு
ால் ஆனந்தம் ஏற்படுகிறது; அவை நம்மைச் சேர்ந்தவையென்ற
ளர்ச்சி உதிக்கிறது. நமக்குக் காரணமில்லாமல் ஆனந்தம் உண்
வில்லை. ஆனந்தம் தோன்றக் காரணமென்ன? அதற்கும் நமக்கும்
கா தொடர்பிருப்பதே ஆனந்தத்திற்குக் காரணம். குழந்தையைப்
த்ததும் தாயினுள்ளம் துள்ளுகிறது. ஏனெனில், அவளுக்கு உறவு
ியும். இதே வகையில் ஒவ்வொரு பொருளுடனும் பரம்பொருளை
னத்துக்கொள். என்னிடமுள்ள ஆண்டவனே அதிலும் இருக்கிறான்
று, இவ்வகையில் தொடர்பை வளர்ப்பதே ஆனந்தத்தை வளர்ப்ப
ரும். ஆனந்தத்திற்கு வேறு உபாயம் எதுவுமில்லை. நீங்கள் எல்லா
ங்களிலும் அன்புத் தொடர்பை அமைத்துக்கொள்ளுங்கள்; பிறகு
ன அற்புதம் நிகழ்கிறதென்று பாருங்கள்! எல்லையிலாச் சிருஷ்டி
ுவதிலும் வியாபித்துள்ள பரம்பொருள் ஒவ்வொரு அணுவிலும்,
லையிலும் காணப்படும். இக் காட்சி, இக் காட்சியைப் பெறும் சக்தி
டிய பின் நமக்கு வேறென்னவேண்டும்? ஆனால் இதற்கெனப் பொறி
க்குப் பயிற்சி அளிக்க வேண்டியது அவசியம். நமது போக வாசனை
விலகி, அன்பின் புனிதநோக்கு ஏற்பட்டுவிடுமாயின் நமக்கு ஒவ்
ரு பொருளிலும் ஆண்டவனே காட்சியளிப்பான். உபநிடதங்களில்
விஷயம் வெகு அழகாய் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஆன்மாவின்
ம் எப்படியிருக்கும்? ஆன்மாவின் நிறத்தை எந்த நிறமென்று
ல்லுவது? ரிஷி அன்புடன்,

"यथा अयं इंद्रगोप:"—யதா அயம் இந்த்ரகோப:

கிறார். இந்தச் செக்கச் செவேலென்று பட்டைப்போன்று மிருதுவா

யுள்ள பூச்சி போன்றதே ஆன்மாவின் உருவமும். இப் 'பட்
பூச்சியைக் கண்டதும் எவ்வளவு இன்பம் ஏற்படுகிறது! இவ்வி
திற்குக் காரணமென்ன? எனக்கு என்னிடம் உள்ள பாவனையே
பூச்சியினிடமும் உள்ளது. என்னுடன் இதற்குச் சம்பந்தமில்லா
இன்பம் ஏற்படுமா? என்னுள் உள்ள அழகிய ஆன்மாவே இப் பூ
னிடமும் உள்ளது. இதனாலேயே அது உவமையாகக் கூறப்பட்
உவமை ஏன் கூறுகிறோம்? அதனால் இன்பம் ஏற்படுவது ஏன்? இர
பொருள்களினிடையில் ஒற்றுமை யிருப்பதனாலேயே உவமை
கிறோம்; அதனாலேயே இன்பமும் ஏற்படுகிறது. உவமேயமும் உவ
மும் முற்றிலும் வேறுபட்டிருக்குமானால் இன்பம் தோன்றாது. ஒரு
உப்பு மிளகாயைப் போலிருக்கிறதென்று சொல்லுவானானால் நாம்
னைப் பித்தனென்போம். ஆனால் ஒருவன் நட்சத்திரங்கள் பூக்க
போலிருக்கின்றன என்றால் அவைகளினிடையில் ஒற்றுமையிருப்ப
இன்பம் ஏற்படும். உப்பு மிளகாயைப் போலிருக்கிறது என்னும்பொ
ஒற்றுமை உணர்ச்சி ஏற்படுவதில்லை. ஆனால் உப்பிலுள்ள
பொருளே மிளகாயிலும் இருக்கிறது என்று உணரும் அளவுக்கு ஒ
ரது நோக்கு பரந்துபோயிருக்கையில் அவர் உப்பு மிளகாயைப்போலி
கிறதென்று சொல்லுவாரானால் அவர் கூற்றினாலும் நமக்கு இன்ப
விளையும். ஆண்டவனின் உருவம் ஒவ்வொரு பொருளிலும் நிர
வழிந்துகொண்டிருக்கிறது; அதற்கு விராட் உருவத்தைக் கா
தேவையில்லை.

## (57) விசுவரூபத்தை ஏற்கவும் இயலாது

அப்படியானால் அப் பேருருவக் காட்சியை நான் எப்படித்த
ஏற்க முடியும்? சிறிய சகுணமான அழகிய உருவினிடம் எனக்
தோன்றும் அன்பும், என்னைச் சேர்ந்ததென்ற உணர்ச்சியும், இனி
யும், விசுவரூபத்தைப் பார்ப்பதில் ஒருபொழுதும் ஏற்படாது. அர்
னன் நிலையும் இவ்வாறேதான் ஆகிவிட்டது. அவன் வெடவெடத்
போய் இறுதியில், "பகவானே, எனக்கு அந்த உமது பழைய இ
உருவைக் காட்டும்" என்கிறான். அர்ஜுனன் சொந்த அனுபவ
லிருந்து "விராட் ரூபத்தைக் காண ஆவல் கொள்ளாதே!" என்கி
முக்காலங்களிலும் மூவிடங்களிலும் வியாபித்துள்ள ஆண்டவ
சிறந்தவன். அந் நட்சத்திரம் தன்னைக் குறுக்கிக் கொண்டு, த
வென்று எரியும் தீப்பந்தாகி, என்னெதிரில் வந்து நின்றால் அப்பொ
என் கதி என் ஆகும்? அந் நட்சத்திரங்கள் எவ்வளவு சாந்தம

ங்கமாய்க் காண்கின்றன! அவை இவ்வளவு தொலைவிலிருந்து என்
டு உரையாடுவதாக அல்லவா தோன்றுகிறது! ஆனால் கண்ணுக்கு
மதியை அளிக்கும் அதே நட்சத்திரம் அண்மையில் வந்துவிட்
லா அது எரிக்கும் தகதகவென்ற தீயே ஆகும்; அப்பொழுது நான்
பலாகிவிடுவேன். ஆண்டவனது இவ்வெல்லையற்ற பிரம்மாண்டம்
மையிலும் எவை எவை எங்கெங்கே எப்படி எப்படி யிருக்கின்ற
வா, அப்படியே இருக்கட்டும். அவை அனைத்தையும் ஒரே அறையில்
த்துக் குவிப்பதில் என்ன இன்பம்? பம்பாயில் உள்ள அப் புறுக்
ட்டடியில் ஆயிரக் கணக்கான புறுக்கள் இருக்கின்றனவே, அங்கே
வைகளுக்குச் சுதந்திரம் ஏது? அக் காட்சியே பார்ப்பதற்கு அரு
ப்பாயல்லவோ இருக்கிறது. இச் சிருஷ்டி மேலும், கீழும், இங்கே
விலுமாக மூவிடங்களிலும் கூறிடப்பட்டிருப்பதில்தான் ஆனந்தம்.
ம் பற்றிய சிருஷ்டியைப்பற்றி நாம் சொல்லுவது காலம் பற்றிய
தும் பொருந்தும். நமக்குக் கடந்த காலம் பற்றிய நினைவு இருப்ப
லை; வருங்காலத்தைப்பற்றியது எதுவும் தெரிவதுமில்லை. இவ்வாறு
த்தல் நமக்கு நன்மையே. புனிதக் குரானில் ஆண்டவனுடைய
காரம் மட்டுமே இருந்துவருவதும், மனிதன் கைவரிசை சிறிதும்
லாததுமான ஐந்து விஷயங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.
வைகளுள் ஒன்று, வருங்கால அறிவு. நாம் ஊகமென்னவோ செய்ய
; ஆனால் ஊகம் அறிவாகாது. வருங்காலம் பற்றிய அறிவே நமக்
லாதிருப்பதில்தான் நம் நன்மை அமைந்திருக்கிறது. அவ்வாறே
ந்த காலம் நமக்கு நினைவில்லாதிருப்பதும் உண்மையில் மிகவும்
லதே. ஒரு துஷ்டன் நல்லவனாகி என்முன் வந்தாலும் எனக்கு
னது கடந்த வாழ்க்கையின் நினைவிருப்பதால் அவனிடம் எனக்கு
த்தில் மதிப்புண்டாவதில்லை. அவன் எவ்வளவுதான் சொன்ன
திலும் அவனது பழைய பாவங்களை என்னால் உடனே மறக்க முடிவ
லை. அம் மனிதன் இறந்துபோய் வேற்றுருவில் வரும்பொழுதுதான்
கினால் அவன் பாவங்களை மறக்க முடிகிறது.

பழைய நினைவுகளினால் மனோவிகாரம் பெருகுகிறது. இப் பழைய
னவுகள் அனைத்தும் மறந்துபோய்விடும்பொழுது எல்லாமே முடிந்து
கின்றன. பாவ புண்ணியங்களை மறப்பதற்கு ஏதேனும் யுக்தி
க்கவேண்டும். அந்த யுக்தி அல்லது உபாயம்தான் மரணம். நமக்கு
பிறவியின் சிரமங்களையே பொறுக்க முடியாதிருக்கையில், கடந்த
வியின் குப்பைமேட்டை ஏன் கிளறிக்கொண்டிருக்கவேண்டும்?
தப் பிறவி என்ற அறையிலே உள்ள குப்பை கூளங்கள் போதாவா?

நம் பிள்ளைப் பிராயத்தை நாம் பெரும்பாலும் மறந்துபோகிறோம்; மறதி நமக்கு நல்லதே. இந்து-முஸ்லிம் ஐக்கியம் பெறக் கட காலத்தை மறப்பதொன்றே உபாயம். ஔரங்கசீப் மிக்க கொடு செய்தான் என்பதை எவ்வளவு காலம்தான் திரும்பத் திரும்பச் சொல் கொண்டிருப்பாய்? குஜராத்தியில் ரத்தன்பாயின் 'கர்பா' பா ஒன்றுண்டு. அதை நாம் இங்கே அடிக்கடி கேட்கிறோம். அதன் இறு சரணத்தில், "உலகத்தில் இறுதியில் கீர்த்தியே நிலைத்திருக்கும்; பா மறந்து போகும்" என்று வருகிறது. காலம் சல்லடையாகச் சலித் கொண்டிருக்கிறது. சரித்திரத்திலுள்ள நல்ல அமிசங்களை எடுத் கொண்டு பாவங்களை எறிந்துவிட வேண்டும். மனிதன் தீமைகளை வி விட்டு நல்லவைகளை மட்டும் நினைவில் கொள்ளுவானாயின் எவ்வ நன்றாயிருக்கும்! ஆனால் இவ்வாறு நடப்பதில்லை. இதனாலேயே ம மிகவும் அவசியமாகிறது. இதன் பொருட்டு பகவான் சாவை ஏற்படு யிருக்கிறார்.

இவ்வுலகம் நல்ல வகையிலேயே அமைந்துளது; காலமும் இட சேர்ந்து உருவாகியுள்ள இவ்வுலகை, ஒருமிக்கச் சேர்த்து உருட் தேவையில்லை. அதிகப் பழக்கத்தில் இன்பமில்லை; சிலவற்றி நெருங்கிப் பழகவும், சிலவற்றிலிருந்து விலகி இருக்கவுமே வேண்டு ஆசிரியரிடம் பணிவாய் விலகி உட்காருவோம்; ஆனால் தாயிட மடியில் போய் அமர்வோம். அதனதனிடம் நடந்துகொள்ள வேண் வகையில் நடந்துகொள்ளவேண்டும். புஷ்பத்தைக் கையில் எடுத் கொண்டு, தீயைக் கண்டால் தள்ளி நிற்கவேண்டும். நட்சத்திரங் தொலைவிலேயே அழகாய்க் காண்கின்றன. இதே நிலைமைதான் சிருஷ் யின் விஷயத்திலும். மிகத் தொலைவிலுள்ள அச் சிருஷ்டியை அண்ண யில் கொண்டுவருவதனால் அதிக இன்பம் ஏற்படும் என்பதல்ல. எ எது எங்கெங்கே இருக்கிறதோ அது அதை அங்கங்கே விடுவதில்தா இன்பம். தொலைவிலிருக்கையில் அழகாய் இருக்கும் ஒன்றைப் பக் தில் கொண்டு வருவதால் இன்பமே விளையுமென்பதற்கில்லை. அ அங்கே, தொலைவில் வைத்தே இன்பம் நுகரவேண்டும். முரட்டுத்த மாக அதிக நெருக்கமும் பழக்கமும் செய்துகொள்வதில் சாரமில்லை.

காலங்கள் மூன்றும் நம் எதிரில் நின்றுகொண்டிராமை நல்லதே முக்காலங்களையும் உணர்வதனால் இன்பமோ, நன்மையோதான் ஏற் மென்று சொல்வதற்கில்லை. அர்ஜுனன் அன்பின் வயப்பட்டுப் வாதம் பிடித்தான், வேண்டிக்கொண்டான். ஆகையால் பகவான் அ ஏற்றுக் கொண்டார். அவர் அவனுக்குத் தன் பேருருவை, விரா

த்தைக் காட்டினார். ஆனால் எனக்கோ பகவானின் சிற்றுருவே தும். இச் சிறிய உருவம் பரம் பொருளின் ஒரு துணுக்கல்ல. ணுக்காகவே இருந்தாலும் அவ்வெல்லையற்ற விசால மூர்த்தியின் ஒரு லோ, காலின் ஒரு விரலோ நான் காணக் கிடைப்பினும், "என் க்கியமே பாக்கியம்!" என்றே நான் சொல்வேன். 'அனுபவத்தி ந்து எனக்கு இவ்வறிவு ஏற்பட்டிருக்கிறது. ஸ்ரீ ஜம்னாலால் அவர்கள் தாவில் லக்ஷ்மீநாராயணர் கோயிலை ஹரிஜனங்களுக்குத் திறந்து டபொழுது நான் சுவாமி தரிசனத்திற்குப் போயிருந்தேன். பதி ந்து, இருபது நிமிஷம் அத் திவ்விய ரூபத்தைப் பார்த்துக்கொண்டே ந்தேன்; சமாதி நிலையிலிருப்பது போன்று இருந்துவிட்டேன். வானின் அத்திரு முகத்தையும், திரு மார்பையும், கைகால்களையும் த்துக் கொண்டே திருப் பாதங்களுக்கு வரவும் அவைகளிலேயே என் வை இலயித்துவிட்டது, 'உன் திருச்சரண சேவையின் இனிமையே ரிமை!' என்ற பாவனை நிலைத்து விட்டது. ஒரு சிறிய விம்பத்தில் மகாப் பிரபு அடங்கமாட்டாரென்றால் அம் மகாப் பிரபுவின் சரணங்கள் தென்படுவதே போதும். அர்ஜுனன் ஆண்டவனிடம் ண்டிக்கொண்டான்; அவனுக்கிருந்த உரிமை பெரிது. அவனது பு எவ்வளவு நெருங்கியது, அவனது அன்பும் நேசமும் எவ்வளவு கம்! எனக்குத் தகுதி ஏது? எனக்குப் பாதங்கள் கிடைத்தாலே தும்; எனக்குள்ள உரிமை இவ்வளவே.

### (58) 'ஸர்வார்த்த ஸாரம்'

அந்த ஆண்டவனது தெய்வீக ரூபத்தின் வர்ணனையில் அறிவைச் லுத்த எனக்கு விருப்பமில்லை; அதில் அறிவைச் செலுத்துவதே பம். விசுவரூப வர்ணனை அடங்கிய அப் புனிதமான சுலோகங்களைப் த்துப் படித்து நாம் புனிதமாவோம். புத்தியைச் செலுத்தி ஆண்டவ ன் அவ் வுருவைத் துண்டாடல் எனக்குப் பிடித்தமல்ல; அது அகோர ாசனை ஆகிவிடும். அகோர மார்க்கத்தைச் சேர்ந்தவர்கள் மயானத் குப் போய்ப் பிணத்தைக் கிழித்துத் தந்திர வழிபாடு செய்வார்கள். அறிவைச் செலுத்துவதும் அவ்வாறேயாகும். ஆண்டவனின் அத் ய்வீக ரூபம்—

"विश्वतश्चक्षुरुत विश्वतोमुखो
विश्वतो बाहुरुत विश्वतस्पात् ।"

(விச்வதச்சக்ஷுருத விச்வதோ முகோ
விச்வதோ பாஹுருத விச்வதஸ்பாத் ।)

என்று விசாலமானது, இறுதியற்றது. அதை வர்ணிக்கும் சுலோகங்
ஓதி நம் மனத்தின் பாவத்தைக் கழுவி அதைப் புனிதமாக்கிக் கெ
வோம்.

ஆண்டவனுடைய இவ் வருணனை முழுவதிலும் ஒரே ஓர் இடத்
தான் அறிவு சிந்திக்கத் தொடங்குகிறது. ஆண்டவன் அர்ஜுனனி
" அர்ஜுனா, இவர்களெல்லாம் இறப்பவர்கள். நீ ஒரு நிமித்தம
வெறுங் காரணமாய் இரு. எல்லாவற்றையும் செய்பவன், பொறுப்
பவன் நானிருக்கிறேன் " என்கிறார். இதே குரல் மனத்தில் ஒலித்
கொண்டேயிருக்கிறது. 'நாம் ஆண்டவன் கையில் ஒரு கருவியாகி
வேண்டும்' என்ற எண்ணம் மனத்தில் எழும்போது அறிவு சிந்திக்
தொடங்குகிறது. 'ஆண்டவன் கைக் கருவியாவதெப்படி? அ
கையில் குழலாகலாமா? அவன் என்னைத் தன் உதட்டில் வைத்
கொண்டு என் மூலமாய் இனிய சுவரங்களை எழுப்பினால், என்
ஊதினால் எப்படி இருக்கும்? குழலாவதென்றால் உள்ளீடற்றுக் க
யாவது என்பதாகும். ஆனால் என்னுள்ளே தான் விகாரங்களும் வாச
களும் திணித்து நிரப்பப்பட்டிருக்கின்றனவே! இந்நிலையில் இ
துவனி எப்படிக் கிளம்பும்? என் துவனியே அடைபட்டுப்போயி
கிறதே! நான் கனப் பொருளல்லனோ? என்னுள் அகங்காரம் பொ
திருக்கிறதே! நான் அகங்காரமற்றவனாகவேண்டும். நான் பூர
முக்தனாய், காலியாகும்பொழுதுதான் ஆண்டவன் என்னை ஊதுவா
ஆனால் ஆண்டவனது வாய்க் குழலாவதென்பது மிகவும் துணிவா
காரியம். அவன் காற்செருப்பாக விரும்புவதும் சுலபமல்ல. ஆண்டவ
கால்களுக்கு நோவு சிறிதும் உண்டாகாதவகையில் செருப்பு மிருது
யிருக்க வேண்டும்; நான் ஆண்டவனது பாதங்களுக்கும், முட்க
கற்களுக்கும் இடையில் அமைந்துவிட வேண்டும். நான் என்னை
பதப்படுத்திக் கொள்ள வேண்டும். என் தோலைக் கழற்றி அதை
பதமாக்கிக்கொண்டே, மிருதுவாக்கிக் கொண்டே இருக்கவேண்டு
ஆகையால், ஆண்டவனுக்குப் பாதுகையாவதும் சுலபமல்ல. ஆண்
வன் கையிலிருந்து இயங்கும் கருவியாகவேண்டுமென்றால் நான் பதி
மணு எடையுள்ள இரும்புத் துண்டாய் இருத்தலாகாது. தவமென்
சாணையில் ஏற்றி என்னைக் கூரிய முனையுள்ளவனாய்ச் செய்துகொள்
வேண்டும். ஆண்டவன் கையில் என் வாழ்க்கை என்ற வாள் ப
பளத்துக் கொண்டிருக்க வேண்டும்' என்ற இத் துவனி என் அறிவி
எழத் தொடங்குகிறது. ஆண்டவன் கையில் ஒரு கருவியாகவேண்டு
என்ற இதே எண்ணத்துள் நான் ஆழ்ந்துபோகிறேன். இது ஈடேறுவத

ப விதியை ஆண்டவன் கடைசிச் சுலோகத்தில் கூறியிருக்கிறான். ஙகராச்சாரியர் தம் பாஷ்யத்தில் இச் சுலோகத்தை सर्वार्थसारम् வார்த்த ஸாரம்) கீதை அனைத்தின் சாரமென்று சொல்லியிருக்கிறார்—

"मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः संगवर्जितः।
निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पाण्डव ॥"
(மத்கர்மக்ருந் மத்பரமோ மத்பக்த: ஸங்கவர்ஜித: ।
நிர்வைர: ஸர்வபூதேஷு ய:ஸ மாமேதி பாண்டவ ॥)

"......அன்புகூருந்
தொண்டரு மாகியென்னை யன்றியோர் தொடக்கிலாமை
கொண்டவ ரடைவர்......"

உலகில் எவரிடமும் விரோதமின்றி நடுவு நிலைமையில் நிற்பவனாய், மற்றுப் பணி புரிந்து, தான் செய்வதனைத்தையும் ஆண்டவனுக்கு ப்பணம் செய்து, அவன் பக்தியில் மூழ்கி, சகிப்புணர்ச்சியும் ஆசை ாமையும் வைராக்கியமும் அன்பும் கொண்டுள்ள பக்தன் ஆண்டவன் யில் ஆயுதமாய் அமைகிறான் என்பதே இச்சாரம்.

ஞாயிறு, 1–5–'32

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# சகுண-நிர்குண பக்தி

### (59) ஏகாக்ரதையிலிருந்து சமக்ரதை வரை

கங்கை ஓடும் எல்லா இடங்களுமே பொதுவாய்ப் புனிதமானவை ம்; ஆனால் ஹரித்துவாரம், காசி, பிரயாகை முதலிய இடங்கள் திகப் புனிதமானவை. அவை உலகம் முழுவதையுமே பரிசுத்தமாக்கி ட்டன. பகவத் கீதையின் தன்மையும் இதுவே. பகவத் கீதை ரம்பமுதல் முடிவுவரை முழுமையுமே புனிதமானது. ஆனால் இடையி ள்ள சில அத்தியாயங்கள் புண்ணியத்தலங்க ளாகிவிட்டன. இன்று ம் பேசவேண்டிய அத்தியாயம் மிகவும் புனிதமான புண்ணிய க்ஷேத் மாகியுள்ளது. பகவானே இதை 'அமுத தாரை' என்று அழைக் ர்—"ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते" (யேது தர்ம்யாம்ருத தம் யதோக்தம் பர்யுபாஸதே). இது இருபது சுலோகங்கள் கொண்ட றிய அத்தியாயம்; ஆனால் அமுத ஒழுக்காய் அமைந்தது. இது அமு தைப்போல் புத்துயிர் அளிப்பது. இவ்வத்தியாயத்தில் பகவானே நவாய் மலர்ந்து பக்திரச தத்துவ மகிமையைப் பாடியருளியிருக்கிறார்.

பார்க்கப்போனால் உண்மையில் ஆறும் அத்தியாயத்திலிரு பக்தி தத்துவம் ஆரம்பமாகிவிட்டது. ஐந்தாம் அத்தியாயத்தின் யோடு வாழ்க்கைச் சாத்திரத்தின் விளக்கம் முடிவுற்றது. சுத இயற்றல் என்ற கர்மமும், அதற்குப் பக்கபலமான மனச்சாதனை அமையும் விகர்மமும், இவ்விரு சாதனைகளினாலும் பூர்த்தியான, களைப் பொசுக்கிவிடக் கூடிய இறுதியான அகர்மத்தின் ஆதார பீட என்ற இவ்வளவு விஷயங்களும் முதல் ஐந்து அத்தியாயங்களில் வி கப்பட்டன. இத்துடன் வாழ்க்கைச் சாத்திரம் பூர்த்தியாகிவிட் பிறகு ஆறும் அத்தியாயத்திலிருந்து பதினோராம் அத்தியாயத் இறுதிவரை ஒருவகையில் பக்தி தத்துவமே ஆராயப்பட்டது. ஏகாக்ர யிலிருந்து ஆரம்பமாயிற்று; ஆறும் அத்தியாயத்தில் சித்தத்தை ஏ ரப்படுத்துவதெப்படி, அதற்குதவும் சாதனங்கள் எவை, அதன் அவசி என்ன என்பவை கூறப்பட்டன. பதினோராம் அத்தியாயத்தில் ரதை அல்லது தொகுப்பு கூறப்பட்டிருக்கிறது. இப்பொழுது ஏக தையில் தொடங்கி சமக்ரதை வரையுள்ள நெடிய பாதையை எப்படிக் கடந்தோம் என்பதைப் பார்க்கவேண்டும்.

சித்தத்தின் ஏகாக்ரதையில் ஆரம்பம் செய்யப்பட்டது. ஏகாக்ர கைகூடியதும் மனிதன் எவ் விஷயத்தைக் குறித்தும் சிந்திக்கல எனக்குப் பிரியமான விஷயத்தை எடுத்துக்கொள்வதென்றால், கணி பயிற்சியில் சித்தத்தின் ஏகாக்ரதையை உபயோகிக்கலாம். அத நிச்சயமாய்ப் பயன் ஏற்படும். ஆனால் சித்தத்தின் ஏகாக்ரதையி எய்தக்கூடிய தலைசிறந்த இலட்சியமல்ல இது. கணிதப் பயிற்சி கொண்டு ஏகாக்ரதையின் முழுப் பரீட்சை ஆகிவிடாது. கணி அல்லது இதே மாதிரியான அறிவுபற்றிய விஷயத்தில் சித்தத் ஏகாக்ரதையினால் வெற்றி ஏற்படுமாயினும் இது உண்மையான பரீட் யல்ல. ஆகையினால் ஏழாம் அத்தியாயத்தில் நம் நோக்கு பகவா பாதங்களைக் குறித்துச் செய்வதாய் இருக்கவேண்டுமென்று சொல்லியி கிறது. எட்டாம் அத்தியாயத்தில் பகவானது பாதங்களில் நாம் இ யருது ஏகாக்ரதை கொண்டிருக்கவேண்டும்—நம் வாக்கும், காதுக கண்களும் அதிலேயே இலயித்திருக்கும்பொருட்டு ஆயுள் முழுமை முயன்றுவர வேண்டுமென்று சொல்லப்பட்டது. நம் பொறிகள் அனை திற்கும் இத்தகைய பயிற்சி ஏற்பட்டுவிடவேண்டும்; எல்லாப் பொ களுக்கும் இதிலேயே பழக்கமும் வேறு எதுவும் தெரியாமலும் இருக் கூடிய ஒரு நிலை ஏற்பட்டுவிட வேண்டும்; எல்லாப் பொறிகளுக் தெய்வப்பித்தம் தலைக்கேறிவிட வேண்டும். நம் அருகில் ஒரு

ாரி வைத்துக்கொண்டோ தோத்திரம் பாடிக்கொண்டோ இருந் வம், நம்மை விஷய வாசனைகளில் சிக்கவைக்க முயன்றாலும், ராக்கியசீலர்களான பெரியோரின் பழக்கம் ஏற்பட்டாலும், பகலோ வோ எதுவானாலும் சரி, இறக்கும் தறுவாயில் ஆண்டவன் நம் கத்தின் எதிரில் வந்து நிற்கும்படியான பயிற்சியை ஆயுள் முழுமை எல்லாப் பொறிகளையும்கொண்டு செய்வதென்ற இந்த 'சாதத்தியம்' லது உடனிருக்கைப் பயிற்சி பற்றி எட்டாம் அத்தியாயத்தில் கூறப் டிருக்கிறது. ஆறும் அத்தியாயத்தில் ஏகாக்ரதையும், ஏழில் ஆண்ட நோக்கியுள்ள ஏகாக்ரதை அல்லது பிரபத்தியும் எட்டில் சாதத் ம் அல்லது உடனிருக்கையும், ஒன்பதில் சமர்ப்பணம் செய்தலும் டியிருக்கிறது. பத்தில் எதன்பின் எது என்ற முறை வகுத்துச் ல்லப்பட்டிருக்கிறது; ஒவ்வொரு அடியாக வைத்து முன் சென்று ண்டவன் உருவை எவ்வாறு உள்ளத்தில் ஏற்றுக்கொள்வது, எறும்பு டங்கி பிரம தேவன் ஈறாக எங்கும் பரவியுள்ள பரம்பொருளை மெல்ல ல்ல எவ்வாறு தனதாக்கிக் கொள்வது என்பது கூறப்பட்டிருக்கிறது. னொன்றும் அத்தியாயத்தில் சமக்ரதை (தொகுப்பு) சொல்லப்பட்டது. வரூப தரிசனத்தையே நான் 'ஸமக்ரதா யோகம்' (தொகுப்பு கம்), என்று சொல்லுகிறேன். விசுவரூப தரிசன மென்றால் ஒரு ாரண மண் திவலையிலும் அகில சிருஷ்டியும் அடங்கியிருக்கிறது பதை உணர்தலே. இதுவேதான் விராட் தரிசனம் அல்லது பெரு க்கு என்பதும். ஆறும் அத்தியாயத்திலிருந்து பதினொன்றுவது ர பக்தி ரசம் இவ்வாறு வெவ்வேறு வகையில் வடிகட்டியெடுக்கப்பட் க்கிறது.

## (60) சகுண உபாசகனும் நிர்குண உபாசகனும்— தாயின் இரு பிள்ளைகள்

இப்பொழுது பன்னிரண்டாம் அத்தியாயத்தில் பக்தி தத்துவத்தைப் த்தி செய்யவேண்டும். அர்ஜுனன் பூர்த்தி செய்வது பற்றிக் கேட் ர். ஐந்தாம் அத்தியாயத்தில் வாழ்க்கையைப் பற்றிய சாத்திரங்கள் னத்தின் ஆராய்ச்சி முடிவுற்ற சமயத்தில் கேட்டது போன்றே அர்ஜு ர் இங்கும் கேட்டிருக்கிறான். அர்ஜுனன், "பகவானே, சிலர் ணத்தை வழிபட, வேறு சிலர் நிர்குணத்தை உபாசிக்கிறார்களே; வ இரண்டில் உங்களுக்குப் பிரியமானது எது?" என்று கேட்கிறான். பகவான் இதற்கு என்ன பதில் அளிப்பார்? ஒரு தாய்க்கு இரண்டு ளைகள் இருக்கையில் அவர்களைப் பற்றி அவளைக் கேட்பது போன்றே

இருக்கிறது இது. இருவரில் ஒருவன் சிறியவன்; தாயினிடம் அவ
னுக்கு மிகுந்த பிரியம். தாயைக் கண்டதும் அவனுக்கு மகி
பொங்குகிறது. தாய் சிறிது பிரிந்தாலும் அழத்தொடங்கிவிடுகி
அவனால் தாயை விட்டுத் தனித்திருக்கவே முடிவதில்லை. அ
அவனால் விடவே முடியாது; அவளுடைய பிரிவை அவனால் பொறுக்
இயலாது. தாய் இல்லையென்றால் அவனுக்கு உலகமே சூனியம
தோன்றுகிறது. இப்படியிருக்கிறான் அந்தச் சிறிய பிள்ளை. இன்
வன் பெரிய பிள்ளை. அவனும் அதே வகையில் தாயின் அன்பில் மூ
தான் இருக்கிறான். ஆனால் அவன் விஷயம் தெரிந்தவனாகி விட்ட
அவனால் தாயைவிட்டுப் பிரிந்திருக்க முடியும். ஐந்தாறு மாதம் தா
காணாமலே இருக்க நேர்ந்தாலும் அவனால் இருக்க முடியும். அ
தாய்க்குப் பணிவிடை செய்கிறான். எல்லாப் பொறுப்பையும் த
ஏற்று வேலை செய்கிறான். வேலைகளில் முனைந்திருப்பதால், தா
பிரிவை அவனால் பொறுக்கமுடிகிறது. மக்களிடையே அவனுக்கு
பிருக்கிறது. நாற்புறமும் அவனுடைய புகழைக் கேட்டு தாய்
இன்புறுகிறாள். இப்படி இருக்கிறான் இந்தப் பிள்ளை. இத்தகைய
பிள்ளைகளையும் பற்றித் தாயினிடம், "ஏ தாயே, இவ்விரு பிள்ளைக
ஒருவன் மட்டும் உனக்குக் கொடுக்கப்படுவான். உனக்கு
வேண்டும்?" என்று கேட்கப்படுமானால் அவள் என்ன பதில் சொ
வாள்? அவள் எந்தப் பிள்ளை வேண்டுமென்று சொல்லுவாள்? அ
இரு பிள்ளைகளையும் தராசிலிட்டு நிறுத்துப் பார்ப்பாளா? தா
மனத்தின் அன்பைக் கவனித்துப் பாருங்கள். அவளுடைய இயற்
யான பதில் எதுவாயிருக்கும்? அவள் வேறு வழியில்லையே என
"பிரியத்தான் வேண்டுமென்றால் பெரியவனை அழைத்துக்கொ
போங்கள். அவன் பிரிவை நான் சமாளித்துக் கொள்வேன்" எ
பதில் சொல்லுவாள். சிறிய பிள்ளையை அவள் தன் மார்போடு அ
துக்கொண்டு தன்னிடமிருந்து பிரிய விடமாட்டாள். சிறிய பிள்ளை
அதிகக் கவர்ச்சியைக் கண்டு அவள் ஒருக்கால் 'பெரியவன் போ
பாதகமில்லை' என்பது போன்ற பதிலொன்றைச் சொல்லலாம். ஆ
'அவளுக்கு அதிகப் பிரியம் யாரிடத்தில்?' என்ற கேள்விக்கு இ
பதிலென்று சொல்வதற்கில்லை. ஏதோ பதில் சொல்லியாகவேண்டு
என்பதனால் அவள் வாயிலிருந்து சில வார்த்தைகள் வெளிவந்
ஆனால் அவ்வார்த்தைகளைத் தோண்டித் துருவி அவற்றின் பொரு
காண முயலுதல் சரியாகாது.

இக் கேள்விக்குப் பதில் சொல்லவேண்டிவந்தபோது அத் தா

பட்ட சங்கடமான நிலை பகவானுடைய மனத்திற்கும் ஏற்பட்டு டது. அர்ஜுனன், "பகவானே, இரண்டு வகைப் பக்தர்கள் ங்களுக்கு இருக்கிறார்கள். ஒருவர் உங்களிடம் மிக்க அன்புகொண்டு பொழுதும் உங்கள் நினைவாகவே இருக்கிறார். அவர் கண்கள் உங்கள் சன ஆவல்கொண்டும், அவர் காதுகள் உங்கள் தோத்திரப் பாடல் ாக் கேட்க ஆவலுள்ளவையாயும், அவருடைய கைகால்கள் உங்க க்குப் பணிவிடை புரிய ஆவலுடையனவாயும் இருக்கின்றன. மற்ற ரா, தம் தேவைக்குப் பிறரை எதிர்பாராது, தம் பொறிகளை அடக்கி த்துக்கொண்டு எல்லா உயிர்களுக்கும் நன்மை செய்வதிலேயே ழ்ந்தவராய் அல்லும் பகலும் பயனைக் கருதாது சமூகத்திற்குப் பணி வதிலேயே ஈடுபட்டிருப்பதால் உங்கள் நினைவே இல்லாதவர்போல் ணப்படுகிறார். இவர் உங்களுடைய இரண்டாவது, அத்வைதத் துவத்தில் மூழ்கிய பக்தர். இவ்விருவரில் உங்களுக்குப் பிரியமான ர் யாரென்று சொல்லுங்கள்" என்று பகவானிடம் கேட்கிறான். அதீ ாய் அளித்த அதே பதிலைச் சிறிதும் மாறுபாடின்றி பகவான், "அந்தச் குண பக்தன் எனக்குப் பிரியமானவன். அந்த மற்ற பக்தனும் னக்கு வேண்டியவனே" என்று அளிக்கிறார். இவ்வாறு பகவான் ங்கடத்தில் சிக்கியவராய் ஏதாவது சொல்லியாக வேண்டுமே என்று தில் சொல்லிவிட்டார்.

மேலும், விஷயமும் உண்மையில் இப்படித்தானிருக்கிறது. இரு க்தர்களும் முற்றிலும் ஒரே வகையினரே, இருவரின் தகுதிகளும் ஒரே ன்மையனவே. அவைகளை ஒப்பு நோக்குதல் வரம்பை மீறும் செய ாகும். ஐந்தாம் அத்தியாயத்தில் கர்மத்தைப் பற்றி அர்ஜுனன் கட்ட அதே வகையில் இங்கே பக்தியைப் பற்றிக் கேட்டிருக்கிறான். ந்தாம் அத்தியாயத்தில்: கர்மம், விகர்மம் ஆகியவற்றின் உதவியினால் னிதன் அகர்ம நிலையை எய்துகிறான்; அந்த அகர்ம நிலை இரண்டு கையில் வெளியாகிறது; ஒருவனோ அல்லும் பகலும் அனவரதமும் ர்மம் செய்து கொண்டிருந்தும் சிறிதும் கர்மம் செய்யாதிருக்க, ற்றவனோ இருபத்து நான்கு மணி நேரத்தில் ஒரு காரியமும் செய்யாது லகத்தையே தலைகீழாய் மாற்றிவிடுகிறான். இந்த இரண்டு விதங் களில் அகர்மநிலை வெளியாகிறது. இவைகளை எப்படி ஒப்பிடுவது? ாதேனும் ஒரு வட்டத்தின் ஒரு அமிசத்தைப் பிறிதொரு வட்டத்தின் அமிசத்துடன் ஒப்பிடுங்கள்; ஒரே வட்டத்தின் இரு அமிசங்களை—இரு அமிசங்களும் ஒரே அளவுள்ளவையாய், ஒரே தன்மையவையாய், ஒரே ருவாய் இருக்குமானால்—எப்படி ஒப்பிடுவது? அகர்மத்தின் ஆதா

சத்தை விளக்கும்பொழுது பகவான் ஒன்றைச் சந்நியாசம் என்
மற்றதை யோகமென்றும் சொல்லியிருக்கிருர். பெயர் வெவ்வேருயிரு
போதிலும் பொருள் ஒன்றே. சந்நியாசம், யோகம் ஆகிய இரண்
யும் இறுதியில் புரியும்படி விளக்கியிருக்கிருர். சகுணம், நிர்கு
பற்றிய கேள்வியும் இத்தகையதே. சகுண பக்தன் புலன்க
மூலமாய் ஆண்டவனுக்குச் சேவை செய்கிருன்; நிர்குணபக்தனே ம
திஞல் உலக நன்மைக்கானவற்றைச் சிந்திக்கிருன். முதலவன் வெ
சேவையில் ஆழ்ந்திருப்பவனுய்க் காணப்படுகிருன்; ஆனுல் உள்ளி
அவன் இடையருது சிந்தித்த வண்ணம் இருக்கிருன்; மற்றவனே பி
பார்க்கும்படி நேரிடையான சேவை எதுவும் செய்யக் காணேம்; ஆ
உள்ளே அவனது மாபெரும் சேவை நடந்தவண்ணமிருக்கிற
இத்தகைய இவ்விரு பக்தர்களுள் சிறந்தவன் எவன்? அல்லும் பக
கர்மம் செய்துகொண்டே சிறிதும் கர்மம் செய்யாதிருப்பவன் சகு
பக்தன்; நிர்குண உபாசகனே உள்ளுக்குள் எல்லோருடைய நன்
யையும் கோரினவனுய் எல்லோரையும் பற்றிச் சிந்தித்தவண்ணமிரு
பவன். வெளிப் பார்வைக்கு வெவ்வேருய்த் தோன்றிய போதிலு
உள்ளே இவ்விரு பக்தர்களும் ஒரே தன்மையரே. இருவரும் ஒ
வகையினர், இருவரும் பகவானுக்கு நேயர். ஆனுல் இவைகளு
சகுண பக்தி அதிகச் சுலபமானது. இவ்வாறு ஐந்தாம் அத்தியாயத்தி
அளித்த பதிலேயே பகவான் இங்கும் அளித்திருக்கிருர்.

## (61) சகுணம் சுலபமானது, ஆபத்தில்லாதது

சகுண பக்தியோகத்தில் பொறிகளினுல் நேராகவே காரியங்களை
செய்யலாம். பொறிகள் சாதனமாகவோ தடையாகவோ அல்ல
இரண்டு வகையிலுமோ உதவுகின்றன. பார்ப்பவரது நோக்கத்தை
அனுசரித்து அவை காப்பவையாகவோ, கெடுப்பவையாகவோ அமை
கின்றன. ஒருவனுடைய தாய் சாகுந் தறுவாயிலிருப்பதாயும் அவன்
அவளைப் பார்க்க விரும்புவதாயும் வைத்துக்கொள்ளுங்கள்; பதினைந்
மைல் தொலைவு போயாகவேண்டும். அந்த வழியே மோட்டார் போகா
மேடுபள்ளமான ஒற்றையடிப் பாதை. இச் சமயத்தில் அப் பாதையினு
உதவியா, தடையா? "இந்த மோசமான நடைபாதை குறுக்கிடாவிட
டால் நான் எப்பொழுதோ தாயைப் போய்ப் பார்த்திருப்பேனே!" என்று
அவன் சொல்லுகிருன். இந்த ஆளுக்கு அந்தப் பாதை விரோத
மானதே. அவன் எப்படியோ வழியைக் கடந்து போய்ச் சேருகிருன்
போகும்பொழுது பாதையைத் திட்டிக்கொண்டே போகிருன். ஆனு

யைப் பார்ப்பதற்காக அவன் எந் நிலையிலும் அவசர அவசரமாய்
ந்து போகவேண்டியவனே. பாதையைத் தன் விரோதி என்று
ண்டு வழியிலேயே உட்கார்ந்து விடுவானாயின் விரோதியைப்போல்
ன்றும் அப்பாதைக்கு வெற்றி ஏற்பட்டுவிடும். ஓட்டமாய் ஓடுவதன்
ல் அவன் அவ் விரோதிமீது வெற்றி காணமுடியும். இன்னொரு
தன், "இக் கொடிய வனாந்தரத்தில் இப் பாதையாவது இருப்பது
ஷ்டந்தான். எப்படியோ தாயிடம் போய்விடலாம் அல்லவா!
வும் இல்லாதிருக்குமானால் இந்தக் காடு-மலைகளை நான் எப்படிக்
க முடியும்?" என்கிறான். இவ்வாறு சொல்லிவிட்டு அவன் அந்
பாதையையே தனக்கு உதவும் சாதனமாய்க்கொண்டு விசையாய்
ந்து போகிறான். பாதையினிடத்து அவன் மனத்தில் நேசப்பாங்கே
க்கிறது. அவன் அதைத் தன் நண்பனென்றே மதிக்கிறான். நீங்கள்
பாதையை நண்பனாய்க் கொண்டாலும் சரி, விரோதமாய்க் கருதி
ம் சரி, தடையாய்க் கொண்டாலும் சரி, சாதகம் செய்வதாய்க் கருதி
ம் சரி, வேகமாய் நடந்து போய்த்தான் ஆகவேண்டும்: ஒவ்வொரு
டைய மனப்போக்கை அல்லது நோக்கத்தை அனுசரித்து போக
ண்டிய வழி தடையாகவோ, உதவியாகவோ அமையும். இதே
யம் பொறிகளுக்கும் பொருந்தும். அவை தடையாகவோ சாதக
வோ அமைவது உங்கள் நோக்கைப் பொறுத்தது.

சகுண உபாசகருக்குப் பொறிகள் கருவிகளே. பரம்பொருளுக்கு
ரிவிக்கவேண்டிய புஷ்பங்களைப்போல் அவருக்குப் பொறிகள்
ளன. கண்களினால் கடவுளின் உருவைத் தரிசிக்கிறார்; காதுகளால்
து கதையைக் கேட்கிறார்; வாயினால் அவரது திருநாமத்தை ஜபிக்
; கால்களினால் க்ஷேத்திராடனமும், கைகளினால் பாத சேவையும்
கிறார். இவ்வாறு எல்லாப் பொறிகளையும் அவர் ஆண்டவனுக்கு
பணம் செய்துவிடுகிறார்; பொறிகள் இன்ப நுகர்ச்சிக்கு உதவுவதே
லை. புஷ்பங்கள் பகவானுக்கு அணிவிக்கவே இருக்கின்றன, தம்
த்தில் அணிந்துகொள்வதற்காக இல்லை. இவ்வாறே ஆண்டவன்
யில் பொறிகளையெல்லாம் பயன்படுத்த வேண்டும். சகுண உபா
து நோக்கு இது. ஆனால் நிர்குண உபாசகருக்கோ பொறிகள்
யாய்த் தோன்றுகின்றன. அவர் அவைகளை அடக்கி வைக்கிறார்,
றயிலிட்டுப் பூட்டி விடுகிறார். அவைகளின் உணவை மறுத்து
வைகளுக்குக் காவல் வேறு போட்டுவிடுகிறார். ஆனால் சகுண உபாச
கோ இவற்றிலெதுவும் செய்ய வேண்டியிருப்பதில்லை. அவர்
ாப் பொறிகளையும் ஹரிசரணங்களில் அர்ப்பணம் செய்துவிடுகிறார்.

இவ்விரு முறைகளும் பொறிகளை அடக்கவே, பொறிகளைக் கட்டுப்
தவே ஏற்பட்டவை. நீங்கள் எம்முறையை அனுசரித்தபோ
பொறிகளைத் தம் வசத்தில் அடக்கி வைத்துக்கொள்ளுங்கள். இரண்
நோக்கங்களும் அவைகளை விஷயங்களில் கிடந்து உழலாது பார்
கொள்ளுதல் என்ற ஒன்றே. ஒரு முறை சுலபமானது, மற்றது
மானது.

நிர்குண உபாசகன் எல்லா உயிர்களுக்கும் நன்மையைக்
வோன். இது அவ்வளவு சாதாரணமான விஷயமல்ல. 'எல்லே
யும் இன்புறச் செய்தல்' என்பது சொல்வதற்கென்னவோ எளிதா
பினும், செய்தல் மிகவும் சிரமமே. அகில உலகின் நலத்தி
கருத்துள்ளவனால் அது ஒன்றைத் தவிர வேறு எதையும் சிந்திக்
லாது. இதனாலேயே நிர்குண உபாசனை சிரமமென்று கூறப்பட
கிறது. சகுண உபாசனையோ அவரவரின் சக்திக்கொத்தபடி பல
களில் செய்யப்படலாம். நாம் பிறந்த சிறிய கிராமத்திற்குச்
செய்வதோ, பெற்றோருக்குப் பணி புரிவதோ சகுண பூஜை எனப்
இதில் கவனத்திலிருக்க வேண்டியது, நாம் செய்யும் இப் பூஜைய
உலகத்திற்குத் தீங்கெதுவும் நேராது பார்த்துக்கொள்வதொன்
நீங்கள் செய்யும் சேவை எவ்வளவு சிறியதாயிருப்பினும் அ
பிறரது நன்மைக்குக் குந்தகம் எதுவும் விளையாதிருக்குமானால்
பக்தி என்றே கருதப்படும். இல்லையேல், அச் சேவை ஆஸக்
(ஆசையா)ய் மாறிவிடும். நம் பெற்றோரையும் துன்புறும் பந்து-
ரர்களையும், சாது-மகாத்மாக்களையும் ஆண்டவனென்றே கொண்டு
களுக்குச் சேவை செய்ய வேண்டும். இவர்கள் ஒவ்வொருவரி
ஆண்டவனே இருப்பதாய்க் கருதித் திருப்திப்படு. இச் சகுண
சுலபமானது. ஆனால் நிர்குண சேவையோ மிகவும் கடினம்.
டின் பொருளும், சாரமும் பார்க்கப் போனால் ஒன்றே. எது சு
எது சிரமம் என்று பார்க்கையில் சகுண முறை சுலபமாகிறது,
வளவுதான்.

சுலபமானது என்பதைத் தவிர இன்னும் ஒரு விஷயமும்
கிறது. நிர்குண உபாசனையில் பயமுண்டு. நிர்குணம் ஞான
மானது; சகுணமோ அன்புமயமானது, உணர்ச்சி மயமா
சகுணத்தில் கனிவு உண்டு; அதில் பக்தனுக்கு அதிகப்
காப்பு உண்டு. நிர்குணத்திலோ சிறிது ஆபத்திருக்கிறது. ஒரு
தில் நான் ஞானத்தையே அதிகமாய் நம்பியிருந்தேன். ஆனால்
பொழுது அனுபவத்திலிருந்து வெறும் ஞானம் மட்டும் இருந்

தாது என்று உணர்ந்துவிட்டேன். ஞானத்தினுல் மனத்திலுள்ள பல அழுக்குப் பொசுங்கிச் சாம்பலாகிவிடுகிறது; ஆனுல் சூக்கும நுண்ணிய அழுக்கைப் போக்கும் சக்தி அதற்கில்லை. சுயதேவைப் த்தி, சிந்தனை, விவேகம், பயிற்சி, வைராக்கியம் ஆகிய இவ் ல்லாச் சாதனங்களையும் உபயோகியுங்கள்; பிறகும், இவைகளின் மூல யும் மனத்தின் நுண்ணிய அழுக்கு நீங்குவதில்லை. பக்தி என்ற க்குத்தான் அச் சக்தி இருக்கிறது. இதை நீங்கள் 'வெளி உதவி' று வேண்டுமானுல் சொல்லிக்கொள்ளுங்கள். ஆனுல் 'வெளி' என் ற்குத் தனக்குப் புறம்பானது என்று பொருள் கொள்ளாது வெளி' அல்லது பரம்பொருள் என்று கொண்டு அதை அண்டியிருத் என்று கருதுங்கள். பரம்பொருளின் உதவியை நாடாதவரை சித் தின் அழுக்கு நீங்குவதற்கில்லை.

இங்கே 'ஞானம்' என்ற சொல்லுக்குக் குறுகிய பொருள் கொள்ளப் டுவிட்டது என்று எவரேனும் சொல்லலாம். ஞானத்தினுல் சித்தத் அழுக்கு நீங்காதெனில் ஞானத்தின் மதிப்புக் குறைந்து போய் கிறதே என்ற ஆக்ஷேபணையை நான் ஒப்புக்கொள்கிறேன். னுல் மண்ணுலான இவ்வுடலில் இருந்துவரும் வரை சுத்த ஞானம் படுவது சிரமம் என்றே நான் சொல்லுவேன். இவ்வுடலில் ந்து வருகையில் நமக்கு ஏற்படும் ஞானம்—அது எவ்வளவுதான் தமாயிருந்த போதிலும்—குறைந்த மாற்றுள்ளதாய், கலப்படமாய்த் னிருக்கும். இந்த உடலில் உதயமாகும் ஞானத்தின் சக்தி ஓர் வுக்கு உட்பட்டதாய், வரம்புள் அடங்கியதாய்த்தான் இருக்கும். த ஞானம் தோன்றும்பொழுது அதனுல் எல்லா அழுக்கும் பொசுக் பட்டுவிடும் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. சித்தத் ாடு சேர்த்து எல்லா மலங்களையும், அழுக்கையும் பொசுக்கும் சக்தி னத்திற்கு உண்டு. ஆனுல் விகாரம் மலிந்த இவ்வுடலில் ஞானத் ன் சக்தி குறைந்து போவதால் அதன் மூலமாய் நுண்ணிய அழுக்கைப் ாக்க முடியாதிருக்கிறது. ஆகையால் பக்தியின் உதவியின்றி நுண் ிய அழுக்குகளை அறவே அகற்ற வியலாது. இதனுலேயே பக்தியின் தவி பெறும்பொழுது மனிதன் அதிகப் பாதுகாப்புள்ளவனுகிறுன். ந்த 'அதிக' என்ற சொல்லை நானுகக் கூட்டிக்கொண்டதெனக் கொள் ங்கள். சகுண பக்தி சுலபமானது. இதில் பரம்பொருளை நம்பி ருத்தல் என்பதிருக்க, நிர்குணத்திலோ தன்னையே நம்புதல் உள்ளது. தில் 'தன்னை' என்பதற்கும் பொருளென்ன? தன்னுள் உள்ள ம்பொருளை நம்பியிருத்தல் என்பதே. அறிவின் உதவி ஒன்றை

மட்டும் கொண்டு தூய்மைபெற்ற மனிதன் எவனும் இல்லை. தன்னை
நம்பியிருப்பதனால், அதாவது உள்நோக்கோடமைந்த ஆன்ம ஞா
தினால் சுத்த ஞானம் ஏற்படும். அதாவது, நிர்குண பக்தியில் உ
தன்னையே நம்பிய வாழ்க்கைக்கும் ஆன்மாவே அடிப்படை.

## (62) நிர்குணமின்றிச் சகுணமும் குறைபாடுள்ளதே

சகுண உபாசனை சுலபமானது, ஆபத்தில்லாதது என்று ந
அதிலுள்ள சாதகாம்சங்களைக் கூறியதுபோல் நிர்குணத்தின் விஷ
திலும் சொல்லமுடியும். நிர்குணத்தில் ஒரு வரம்புண்டு. உதாரணம
நாம் வெவ்வேறு வேலைகளுக்கு, சேவைகளுக்கு ஸ்தாபனங்கள் அ
கிறோம். தோன்றும் ஸ்தாபனங்களெல்லாம் முதலில் தனி மனித
காகவே தோன்றுகின்றன. அம் மனிதன் முக்கிய ஆதாரமாயிருக்கிற
ஸ்தாபனம் மனிதனை அண்டியதாய் இருந்து வருகிறது. ஆ
அது வளர வளர அதன் மனிதனை அண்டிய தன்மை போய் த
வப் பற்றுள்ளதாய் அது மாறிவிட வேண்டும். இத்தகைய த
வப்பற்று அதில் தோன்றவில்லையெனின் அதற்கு ஊக்கமூட்டிவ
மனிதன் தலை மறைந்த உடனே அந்த ஸ்தாபனத்தில் இருள் மண்
போகும். நான் எனக்குப் பிரியமான உதாரணத்தையே கூ
றேனே. ராட்டையின் மால்க்கயிறு அறுந்தவுடன் மேலே நூல் நூற்க
யாமற்போவ தோடல்லாமல் நூற்ற நூலைக் கண்டில் ஊற்றுவதும் க
மாகிவிடுகிறது. இம் மனிதனுடைய பலம் போனதும் ஸ்தாபனத்
கதியும் இதுவேதான்; அது அனாதை. ஆனால் மனிதப் பற்றிலிருந்
தத்துவப்பற்று தோன்றிவிடும்பொழுது இவ்வாறு ஆவதில்லை. சகு
திற்கு நிர்குணத்தின் உதவி இருக்கவேண்டும். ஒரு சமயம் இல்லா
டால் ஒரு சமயம் தனி மனிதனிடமிருந்து—உருவிலிருந்து—வெளியே
போகப் பயிலவேண்டும். கங்கை இமாலயத்திலிருந்து, சங்கரர் ச
முடியிலிருந்து கிளம்பிற்று; ஆனால் அது அங்கேயே நின்றுவிடவில்
சடைமுடியிலிருந்து கிளம்பி இமாலயத்தின் குன்று-குகைகளிலும், ப
பள்ளங்களிலும் பாய்ந்து காடுகளைக் கடந்து, சம நிலத்தில் கலக
துவனியோடு ஓடிவந்தபொழுதுதான் அது மக்களுக்குப் பயன்பட்ட
இவ்வாறே ஸ்தாபனம் தனி மனிதனது ஆதாரம் போன பிறகும் தத்த
மென்ற தூண்களின்மீது நிற்பதற்குச் சித்தமாயிருக்க வேண்டும். வ
களில் வளைவுகள் அமைக்கும்போது முதலில் முட்டுக்கொடுத்த போ
லும் பிறகு அதை எடுத்துவிட வேண்டியிருக்கிறது. முட்டை நீக்கி
பிறகும் வளைவு விழாமல் நின்றால்தான் கொடுத்த முட்டு சரியானதென்

நப்படும். இவ்வாறே ஊக்கத்தின் நீர்ப்பெருக்கு சகுணத்திலிருந்து ன்றுதல் சரியே ; ஆனால் அதன் பூர்த்தி தத்துவப்பற்றில், நிர்குணத் ஆக வேண்டும். பக்தியின் உதரத்திலிருந்து ஞானம் தோன்ற ண்டும். பக்திக் கொடியில் ஞானப்பூ மலரவேண்டும்.

புத்த பகவான் இவ் விஷயத்தைக் கவனத்தில் கொண்டிருந்தார். னலேயே அவர் மூன்று வகை உறுதிகளைப் போதித்தார். முதலில் மனிதனிடத்தில் உறுதியிருந்தபோதிலும் அதிலிருந்து தத்துவ தியும், நினைத்தவுடன் தத்துவ உறுதி தோன்றவில்லை யென்றால் றந்தது சங்க நிஷ்டை அல்லது சங்க உறுதியும் உண்டாக வேண்டும். மனிதனிடம் இருந்துவந்த மரியாதையும் மதிப்பும் பத்து, பதி ந்து பேரிடத்திலும் இருக்க வேண்டும். சங்கத்தினிடம் பொதுவான பில்லாதபொழுது ஒருவருக்கொருவர் மனத்தாபங் கொள்ளவும் டை சச்சரவுகளிடவும் ஆரம்பித்து விடுவார்கள். தனி மனிதனை டியிருந்தது போய்ச் சங்கத்தை அண்டி இருக்கத் தொடங்க ண்டும். அதன் பிறகு தத்துவத்தை அண்டியிருத்தல் வரவேண்டும். னலேயே புத்த மதத்தில் "முச்சரணம்" கூறப்பட்டிருக்கிறது.

"बुद्धं शरणं गच्छामि। संघं शरणं गच्छामि।
धम्मं शरणं गच्छामि।"
(புத்தம் ஶரணம் கச்சாமி | ஸங்கம் ஶரணம் கச்சாமி |
தம்மம் ஶரணம் கச்சாமி | )

முதலில் தனி நபரிடம் பற்று, பிறகு சங்கப்பற்று. இவ்விரு பற்று ம் வலுவில்லாதவையே. ஆனால் இறுதியில் தத்துவப்பற்று தோன் பொழுதுதான் ஸ்தாபனம் நிலைத்துப் பயன் அளிப்பதாகும். ஊக் தின் அருவி சகுணத்தில் தோன்றியபோதிலும் நிர்குணக் கடலில் ய்க் கலக்கவேண்டும். நிர்குணம் இல்லாதபொழுது சகுணம் குறை உள்ளதாகி விடுகிறது. நிர்குணத்தின் வரம்பு சகுணத்தை ங்கு கெடாது பார்த்துக் கொள்ளுவதால் சகுணம் நிர்குணத்திற்குக் மைப்பட்டதாகிறது.

இந்து மதம், கிறிஸ்தவ மதம், இஸ்லாம் மதம் முதலிய எல்லா மதங் லும் ஏதோ ஒரு வகையில் விக்கிரக ஆராதனை நடந்துதான் வரு து. மட்டமானதென்று கருதப்பட்டபோதிலும் அது நிச்சயமாய் க்கொள்ளப்பட்டிருப்பதோடு, அதற்கு மதிப்பும் அளிக்கப்பட்டிருக் து. ஆனால் விக்கிரக ஆராதனை நிர்குணத்தின் வரம்பிற்குள் இருக் வரை தான் அது குறைபாடு அற்றிருக்கும். இவ்வரம்பை மீறியதும் ணத்தில் குறைபாடுகள் தோன்றிவிடும். எந்த மதமுமே, சகுண–

நிர்குணங்களின் வரம்புகளை இழந்துவிடும்பொழுது, வீழ்ச்சியுற்
கிறது. முதலில் யாகங்களில் மிருகபலி கொடுக்கப்பட்டு வந்
இன்றும் சக்தி பூஜை செய்கிறவர்கள் உயிர்ப் பலியிடுகிருர்கள். இ
விக்கிரக வழிபாடு ஒரு அநியாயமாய் மாறிவிட்டது; விக்கிரக வழி
இங்கு தன் எல்லையைக் கடந்து தவருன பாதையிற் செல்லத் தொட
யுள்ளது. ஆனல் நிர்குணப் பற்றின் வரம்பு இருப்பின் இவ்வபா
நேராது.

## (63) ஒன்றுக்கொன்று உதவுபவை : இராம சரித்திரம்

சகுணம் சுலபமானதோடு ஆபத்தில்லாதது. ஆனல் சகு
திற்கு நிர்குணம் தேவை. சகுணம் வளர அதில் நிர்குண தத்துவ
மலர்ந்து பரிமளம் வீசவேண்டும். நிர்குணமும் சகுணமும் பரஸ்ப
உதவுபவை, விரோதமானவையல்ல. சகுணத்திலிருந்து எழும்பி
குணத்தைப் போய்ப் பிடிக்க வேண்டும்; நிர்குணத்திற்கும் சித்தத்
நுணுக்கமான அழுக்கைக் கழுவ சகுண நீர் தேவையாகிறது. இ
இரண்டுமே ஒன்றினல் ஒன்று அழகு பெறும். இந்த இருவகை ப
இராமாயணத்தில் மிகச் சிறந்த முறையில் காட்டப்பட்டிருக்கிற
அயோத்தியா காண்டத்தில் இவ்விருவகைப் பக்தியும் வந்துள
இவ்விருவகைப் பக்தியே இராமாயணத்தில் விவரிக்கப்பட்டிருப்ப
பரதனது பக்தி முதல் வகையைச் சேர்ந்ததாயிருக்க, இலட்சும
னுடையது இரண்டாம் வகையினதாகும். இவர்களின் உதாரண
லிருந்து நிர்குண—சகுண பக்திகளின் தன்மைகள் நமக்குத் தெ
வாகும்.

இராமன் வனவாசத்திற்குப் போகத் தொடங்கியபொழுது இலட்
ணனை உடன் அழைத்துப் போவதாயில்லை. இராமனுக்கு அவனை உட
அழைத்துப்போக அவசியமெதுவுமே தோன்றவில்லை. அவன் இ
சுமணனிடம், "இலட்சுமணு, நான் காட்டிற்குப் போகிறேன்; தந்
எனக்கு இவ்வாறு கட்டளை இட்டிருக்கிருர். நீ வீட்டிலேயே இரு. என்
டன் வந்து ஏற்கெனவே வருந்தும் தாய்மாரையும் தந்தையையும் மே
துன்பத்திற்குள்ளாக்காதே. பெற்ருேருக்கும் குடிமக்களுக்கும் பணி
நீ அவர்களுடன் இருந்து வருவாயானல் எனக்குக் கவலையில்லாதி
கும். எனக்குப் பதிலாக, என் பிரதிநிதிபோல் நீ இருந்து வா. ந
காட்டிற்குப் போவதால் எனக்கு ஏதோ ஆபத்து வந்துவிட்டது என்
அர்த்தமில்லை. நான் ரிஷிகளின் ஆசிரமத்திற்கே போகிறேன்" என்
கூறிச் சமாதானப்படுத்திக் கொண்டிருந்தான். ஆனல் இலட்சுமண

ன் கூறியது அனைத்தையும் ஒரு நொடியில் ஒரே சொல்லில் தூக்கி
துவிட்டான்; வெட்டு ஒன்று துண்டு இரண்டாய்ச் செய்துவிட்டான்.
சிதாசர் இக் கட்டத்தை வெகு அழகாய்ச் சித்திரித்திருக்கிறார்.
சுமணன் சொன்னதாவது: "நீங்கள் எனக்குத் தலைசிறந்த வேத
க்கத்தைச் சொல்லியிருக்கிறீர்கள். உண்மையில் நான் அதை நிறை
றவும் வேண்டியதுதான், ஆனால் இவ்வரசாட்சியின், அரசியலின்
மயை என்னால் தாங்க முடியாதே, உங்களுக்குப் பிரதிநிதியாய்
க்கும் சக்தி எனக்கில்லையே. நான் ஒன்றுமறியாப் பிள்ளையல்லவா?

"दीन्हि मोहि सिख नीकि गुसांई ।
लागि अगम अपनी कदराई ॥
नरवर धीर धरम धुर धारी ।
निगम नीतिके ते अधिकारी ॥
मैं सिसु प्रभु सनेह प्रतिपाला ।
मंदर मेरु कि लेहिं मराला ॥

(தீன்ஹி மோஹி ஸிக நீகி குஸாயீ ।
லாகி அகம அபனீ கதராயி ॥
நரவர தீர தரம துர தாரீ ।
நிகம நீதிகே தே அதிகாரீ ॥
மை ஸிஸு ப்ரபு ஸநேஹ ப்ரதிபாலா ।
மந்தர மேரு கி லேஹி மராலா ॥)

"அன்னப்பட்சியால் மேரு மலையைத் தூக்கமுடியுமா? அண்ணா,
ன் இன்றுவரை உங்கள் அன்பிலேயே, ஆதரவிலேயே வளர்ந்தவன்.
கள் இந்த இராச நீதியை, அரசியல் முறையை வேறு எவருக்கேனும்
தியுங்கள். நான் சிறு பிள்ளையாகையால் எனக்கு அது புரியாது"
று சொல்லி இலட்சுமணன் மேலே பேச்சு வளராமல் முற்றுப்புள்ளி
த்துவிட்டான்.

நீரை விட்டு மீனால் இருக்கமுடியாததுபோல்தான் இலட்சுமண
டைய நிலையும். இராமனை விட்டுப் பிரிந்து இருப்பதற்கு வேண்டிய
அவனிடம் இல்லை. அவன் உடல் முழுமையுமே அன்பு மயம்.
மன் தூங்கும்பொழுதும் தான் விழித்திருந்து அவனுக்குப் பணி புரி
லேயே அவனுக்கு இன்பம். நம் கண்ணில் கல் ஒன்று வந்து தாக்க
க்கையில் கை உடனே கண்ணை வந்து பொத்திக் கல்லின் தாக்கு
த்தான் ஏற்றுக்கொள்வதைப் போன்று இலட்சுமணன் இராமனுக்குக்
பாகிவிட்டான். இராமனை எவரேனும் அடிக்க வந்தால் இலட்சு

மணன் முன் சென்று அடியைத் தான் ஏற்றுவந்தான். துளசி
இலட்சுமணனுக்கு ஒரு மிகவும் சிறந்த உவமை கூறியிருக்கிறார்.
மேலே பறந்து கொண்டிருக்கிறது; வணக்கம், வழிபாடு, பாட்டு
லாம் கொடிக்கே செய்கிறோம். அதன் நிறம், அதன் உருவம்
வற்றை விவரிக்கும் பாட்டுக்கள் பாடப்படுகின்றன. ஆனால் அதன்
பகுதியாய் நெடிது நிற்கும் அந்தக் கம்பத்தை யார் கவனிக்கிறா
இராமனது கீர்த்தி என்ற ஆலவட்டக் கொடி பறந்து கொண்டிருக்கி
அதைத் தாங்கிநிற்கும் கம்பம் இலட்சுமணனே. அவன் நிமி
நேரே நிற்கிறான். கொடிக் கம்பம் ஒரு பொழுதும் வளைய
கோணவோ கூடாது; அவ்வாறே இராமன் புகழைப் பரப்பும் இ
மணன் என்ற கம்பம் என்றும் வளைந்ததில்லை. கீர்த்தி யாருக்கு? இ
னுக்குத்தான்! உலகத்தின் கண்ணில் கொடி தெரிகிறது; கம்ப
எவரும் கவனிப்பதில்லை! சிகரம் தெரிகிறது; அதன் அஸ்திவாரம்
ருக்கும் தெரிவதில்லை. இராமனது கீர்த்தி உலகில் பரந்திருக்கி
ஆனால் இலட்சுமணனைப்பற்றிய பேச்சையே காணோம். பதின
வருஷம் இக் கம்பம் நிமிர்ந்து நின்றவண்ணமே இருந்தது; சிறி
தோய்ந்ததில்லை. அவன் பின்னால் நகர்ந்து நின்று இராமன் பெரு
யைப் பரப்பிக்கொண்டிருந்தான். இராமன் பெரிய பெரிய கடின
காரியங்களை இலட்சுமணனைக்கொண்டே செய்வித்து வந்தான். சீ
யைக் காட்டில் கொண்டு விடும் வேலையும் கடைசியில் இலட்சும
னிடமே ஒப்புவிக்கப்பட்டது. பாவம், இலட்சுமணன் சீதை
கொண்டுபோய் விட்டுவந்தான். இலட்சுமணனுக்குத் தனக்குச் சொ
மான வாழ்க்கையென்ற ஒன்று இல்லாமலே போய்விட்டது. அ
இராமனது கண்களாகவும், இராமனது கை-கால்களாகவும், இராம
மனமாகவுமே மாறிவிட்டான். ஆறு கடலில் கலப்பதைப்போல இல
மணனது பணிகள் இராமனுள் கலந்து விட்டன; அவன் இராம
நிழலாகிவிட்டான். இலட்சுமணனது இப்பக்தி சகுணமானது.

பரதன் நிர்குண பக்தி புரிந்தவன். அவனது சித்திரத்தை
துளசிதாசர் வெகு நேர்த்தியாய்த் தீட்டியிருக்கிறார். இராமன் காட்
குப் போனபொழுது பரதன் அயோத்தியில் இல்லை. அவன் வ
சமயம் தசரதர் காலமாகி இருந்தார். குரு வசிஷ்டர், "நீ அரசா
சியை நடத்து" என்று அவனுக்குப் புத்தி சொன்னார். ஆ
பரதன், "நான் இராமனைப் பார்க்கவேண்டுமே" என்றான். இரா
னைக் காணவேண்டுமென்று அவன் துடித்துக் கொண்டிருந்தா
ஆனால் அதோடுகூடவே இராச்சியத்தின் ஏற்பாடுகளையும் செய்து

. ‘இந்த இராச்சியம் இராமனுடையது; இதன் நிர்வாகக் காரியங்
செய்தல் இராமன் காரியத்தைச் செய்தலேயாகும்’ என்பது
பாவனை. சொத்தெல்லாம் எஜமானனுடையது; அதை நிர்
து நடத்துதல்மட்டும் தன் கடமை என்று அவனுக்குத் தோன்
. இலட்சுமணனைப் போல் பரதனால் விட்டேத்தியாய் இருக்க
லவில்லை. பரதனது சுபாவம் இத்தகையது. இராமனிடம் பக்தி
னால் இராமன் காரியத்தைச் செய்ய வேண்டும்; இல்லையேல் அப்
யினால் பயனென்ன? இராச்சிய நிர்வாகத்திற்கு வேண்டிய எல்லா
ாடுகளும் செய்துவிட்டு பரதன் இராமனைச் சந்திக்கக் காட்டிற்கு
ிருக்கிறான். “அண்ணா, இது உங்கள் இராச்சியம். நீங்களே...”
று அவன் சொல்லியாவதற்குள் இராமன் அவனிடம், “பரதா, நீயே
ச்சியத்தை ஆளுவாய்” என்று சொல்லுகிறான். பரதன் சங்கோ
ால் அப்படியே நின்றுவிடுகிறான்; “உங்கள் கட்டளையைத் தலை
தாங்குகிறேன்” என்கிறான். இராமன் எதைச் சொன்னாலும்
க வேண்டியதே. அவன் தனது என்பவை அனைத்தையும் இராம
ம் அர்ப்பணம் செய்திருந்தான்; போய் ஆட்சிக் காரியங்களை
தலானான். ஆனால் அதிலும் விசேஷமென்னவென்றால், அயோத்தி
ருந்து இரண்டு மைல் தொலைவில் தங்கித் தவம் செய்துகொண்டிருந்
ர்; தவம் இயற்றிக் கொண்டே அரசாட்சியை நடத்தினான். இறுதி
இராமன் பரதனைச் சந்தித்தபொழுது பார்ப்போருக்கு இவ்விருவரில்
டில் இருந்து தவம் புரிந்த உண்மைத் தவசி யார் என்று சொல்
சிரமமாகிவிடுகிறது! இருவர் முகங்களும் ஒன்று போன்றவை.
தில்தான் சிறிது வேற்றுமையே தவிர, இருவர் முகத்திலும் தவத்தின்
ஒரே வகையில் வீசிக்கொண்டிருந்ததால் இருவரையும் பார்த்து
ர்களுள் இராமன் யார், பரதன் யார் என்பதை அறியவே முடியா
ந்ததாம். ஓர் ஓவியன் இக் காட்சியை ஓர் ஓவியமாய்த் தீட்டுவா
ன் அது எவ்வளவு புனிதமானதாயிருக்கும்! இவ்வாறு பரதன்
லைப் பற்றியவரை இராமனிடமிருந்து தொலைவிலிருந்தபோதிலும்
த்தில் அவன் ஒரு கணமும் விலகி இருக்கவில்லை. இராச்சிய நிர்
த்தை அவன் ஒருபுறம் நடத்திக் கொண்டிருந்தபோதிலும் அவன்
ம் இராமனிடமே இருந்துவந்தது. நிர்குணத்தில் சகுணபக்தி
டு இடுக்கில்லாது திணிக்கப்பட்டேயிருக்கிறது. ஆகையால் அங்கே
வு என்ற பேச்சையே நாம் எப்படி எடுக்கலாம்? ஆகையால் பரத
கு இராமனுடைய பிரிவே தோன்றவில்லை. அவன் தன் எஜமான
ர், தலைவனின் வேலையைச் செய்துவந்தான்.

இக்கால வாலிபர்கள், "ராமநாமம், ராமபக்தி, இராமன் வழி என்ற இவையெல்லாம் எங்களுக்குப் புரியவில்லை. நாங்கள் பகவா பணியைச் செய்வோம்" என்கிருர்கள். ஆனல் பகவானது பணி எப்படிச் செய்யவேண்டும் என்பதற்கு ஒரு முன்மாதிரியை ப காட்டிவிட்டான். அவன் பகவானது பணியைச் செய்து பிரி தன்னுள் அடக்கிக் கொண்டான். பகவானது பணியைச் செ கொண்டே அவரது பிரிவை உணருவதற்கும் நேரமில்லாதிருத்தல் விஷயம்; பகவானிடம் தொடர்பெதுவுமே இல்லாதவன் பேசாதிரு வேறு விஷயம். பகவானுடைய காரியத்தைச் செய்து கொ புலனடக்கத்துடன் வாழ்க்கை நடத்துதல் அரிது. பரதனது போக்கு, இவ்வாழ்க்கைமுறை நிர்குண வழியில் நடப்பதாய் இருப்பி அங்கும் சகுணத்தின் அடிப்படை இல்லாமற் போய்விடவில்லை. ராமப்பிரபு, தங்கள் கட்டளையை நான் தலையால் தாங்குகி தாங்கள் எதைச் சொன்னலும் எனக்கு அதில் ஐயம் தோன்றுது" எ சொல்லிவிட்டு பரதன் திரும்பியபொழுது, அவன் மீண்டும் பின் திரும்பி இராமனைப் பார்த்து, "பகவானே, மனத்திற்கென்ன சமாதானமாயில்லை. எதையோ பறிகொடுத்ததுபோல் தோ கிறதே!" என்றுன். இராமன் உடனே அவன் மனத்தைப் புரி கொண்டு, "இந்தப் பாதுகையைக் கொண்டு போ" என்றுன். இ யில் சகுணத்தினிடத்தில் மரியாதை ஏற்படவே செய்தது. நிர்கு ணைச் சகுணம் இறுதியில் கனிவுள்ளதாய்ச் செய்தே விட்டது. இல மணனுக்கு பாதுகை பெறுவதனல் சமாதானம் ஏற்பட்டிராது; அ அபிப்பிராயத்தில் பாலை வேண்டுகிறவனுக்கு மோர் கொடுத்தால் திரு யாகாததுபோலவேதான் அது இருந்திருக்கும். பரதன் தன்மை லிருந்து வேறுனது. அவன் புறத்தே தொலைவிலிருந்துகொண்டு புரிந்துவந்தபோதிலும் அவன் மனம் ராமமயமாயிருந்தது. பர தன் கடமையை நிறைவேற்றுவதையே ராமபக்தி என்று கொ டிருந்தபோதிலும், பாதுகை அவசியமென்று உணர்ந்தான்; அ யின்றி அவனல் அரசாட்சி நடத்தமுடியாதிருந்தது. அந்தப் பாது யின் கட்டளை என்று கொண்டே அவன் தன் கடமையைச் செய்து தான். இலட்சுமணன் இராமனுடைய பக்தனய் இருந்ததுபோல தான் பரதனும். ஆனல் இருவர் தன்மைகளும் வெளிப்பார்வை வேருயிருந்தன. பரதன் கடமையிலும் தத்துவத்திலும் உறுதி கெ டிருந்த போதிலும் அவனது தத்துவப் பற்றிற்கும் பாதுகையினல் வி யும் கனிவு தேவையாயிற்று.

**4) ஒன்றுக்கொன்று உதவுபவை : கிருஷ்ண சரித்திரம்**

ஹரிபக்தி என்ற கனிவு கட்டாயம் இருக்கவேண்டும். இதனாலேயே ான் அடிக்கடி அர்ஜுனனிடம், "मय्यासक्तमनाः पार्थ" பாஸக்தமனாः பார்த்த) "அர்ஜுனா, என்னிடம் பற்றுடன் என் ிரசத்தைத் துணையாய்க்கொண்டு பணிபுரிந்து கொண்டேயிரு" று சொல்லுகிறார். எந்த பகவத் கீதைக்கு 'ஆஸக்தி' (பற்று) ற சொல் தோன்றுவதில்லை, பிடிப்பதுமில்லையோ, எது மீண்டும் டும் பற்றற்றவனாய்ப் பணி புரியவேண்டும், விருப்பு வெறுப்பற்றுப் ிபுரியவேண்டும், பயனைக் கருதாது பணியாற்ற வேண்டும் என்று ுறுத்தியிருக்கிறதோ, 'அனாஸக்தி' 'நிஸ்ஸங்கதா' (பற்றின்மை, டர்பின்மை) என்ற சொற்கள் எதற்குப் பல்லவியைப்போல் இருக் ்தோ, அந்த பகவத் கீதையே, "அர்ஜுனா, என்னிடம் ஆஸக்தி ள்" என்று சொல்லுகிறது. ஆனால் பகவானிடம் ஆஸக்தி கொள் ல் என்பது மிகவும் உயர்ந்த விஷயம் என்பதை இங்கே நினைவில் ்கவேண்டும். அது உலகிலுள்ள எந்தப் பொருள் அல்லது விஷ னிடத்திலும் கொள்ளும் ஆஸக்தி அல்ல. சகுணமும் நிர்குணமும் றுடன் ஒன்று பின்னிக்கொண்டிருக்கின்றன. சகுணத்தினால் நிர் ாத்தின் அடிப்படையை அறவே அகற்ற முடியாது; நிர்குணத் ிகோ சகுணத்தின் இரசம் தேவையாகிறது. எப்பொழுதும் தன் மையாயுள்ள காரியத்தையே செய்து கொண்டிருப்பவன் அக் காரியத் மூலம் கடவுள் வழிபாடே செய்து கொண்டிருக்கிறான். ஆனால் ஜயோடுகூட இரசமும், கனிவும் வேண்டும். 'मामनुस्मर युद्ध्य च ானுஸ்மர யுத்ய ச) - என்னை நினைத்துக்கொண்டே கர்மம் புரி'. மே ஒரு பூஜைதான், வழிபாடுதான். ஆனால் மனத்தில் உயிருள்ள னை இருந்துவரவேண்டும். பூவை அள்ளி அள்ளிப் போடுதலே ஜயாகாது. அதில் பாவனை இருக்க வேண்டும். பூக்களால் அர்ச் தல் பூஜையின் ஒரு வகை; நல்ல காரியங்களின் மூலம் பூஜை ிதல் பிறிதொரு வகையாகும். ஆனால் இரண்டிலுமே பாவனை ன்ற கனிவு இன்றியமையாதது. புஷ்பங்களால் அர்ச்சித்தோம், னால் மனத்தில் பாவனையில்லையென்றால் நாம் அர்ச்சித்த அப் புஷ்பங் வெறும் கல்லின்மீது போட்டவையே. ஆகையால் முக்கியமான யம் பாவனையே. சகுணம் நிர்குணம், கர்மம் பிரீதி, ஞானம் பக்தி ற இவையெல்லாம் ஒரு தன்மையனவே. இவை இரண்டினாலும் தியிலேற்படும் அனுபவம் ஒன்றேயாம்.

உத்தவன், அர்ஜுனன் என்றவர்களைப் பாருங்கள். இராமாய
திலிருந்து ஒரே மூச்சில் மகாபாரதத்திற்குத் தாவி விட்டேன். இவ்
செய்ய எனக்கு உரிமையுண்டு. ஏனெனில் இராமனும் கிருஷ்ண
ஒருவனே. பரதனும் இலட்சுமணனும் போல்தான் உத்தவ
அர்ஜுனனும். கிருஷ்ணன் இருக்குமிடத்தில் உத்தவன் இருக்
செய்கிறன். உத்தவனால் கிருஷ்ணனைவிட்டு ஒரு கணமும் பிரிந்தி
முடிவதில்லை. அவன் எப்பொழுதும் கிருஷ்ணன் பணிவிடையிலே
மூழ்கியிருப்பவன். கிருஷ்ணன் இல்லாதபொழுது அவனுக்கு உல
இரசமற்றதாய், சாரமில்லாததாய்த் தோன்றும். அர்ஜுனனும் கி
ணனுக்குத் தோழன். ஆனால் அவன் தொலைவில் அஸ்தினபுரத்
இருந்துவந்தான். அர்ஜுனன் கிருஷ்ணனுடைய காரியத்தைச்
பவனே. ஆனால் கிருஷ்ணன் துவாரகையிலிருக்க, அர்ஜுன
அஸ்தினபுரத்திலிருந்தான். இருவரின் சம்பந்தம் இத்தகைய
கிருஷ்ணனுக்குத் தன் உடலைத் துறத்தல் அவசியமென்று தோன்
பொழுது அவன் உத்தவனிடம், "ஊதோ, நான் போகிறேன்
என்றான். அதற்கு உத்தவன், "என்னை உடன் அழைத்துப் போ
மாட்டீரா? நாம் இருவரும் சேர்ந்தே போவோமே" என்கிறன். ஆ
கிருஷ்ணன், "எனக்கு அது பிடித்தமில்லை; சூரியன் தன் ஒளியை
தீயினிடம் வைத்து விட்டுப் போவதுபோல் நான் என் ஒளியை உ
னிடம் விட்டுப் போகிறேன்" என்கிறன். இவ்வாறு பகவான் இறு
கால ஏற்பாட்டைச் செய்து உத்தவனுக்கு ஞானத்தை அளித்து அ
பினர். பிறகு யாத்திரையில் உத்தவனுக்கு மைத்திரேய ரிஷியி
மூலம் பகவான் தம் ஊருக்கு (வைகுண்டத்திற்கு)ப் போய்விட்டாரென்
தெரியவருகிறது. ஆனால் அதனால் அவன் மனம் சிறிதும் வருந்
வில்லை; விசேஷமானது ஏதோ நடந்ததாகவே அவனுக்குத் தோன்
வில்லை. 'குரு இறந்து விட்டாரென்று சீடன் அழுதான்; இருவரும் கற்
வித்தை பாழாயிற்று' என்று சொல்லுவதுண்டே, அந்நிலையி
உத்தவன் இல்லை. பிரிவு நேர்ந்ததாகவே அவன் நினைக்கவில்லை
அவன் தன் ஆயுள் முழுவதும் சகுண உபாசனை செய்தவன், ஆ
டவன் அருகிலேயே இருந்து வந்தவன். ஆனால் இப்பொழுது அ
னுக்கு நிர்குணத்தில் இன்பம் தோன்றத் தொடங்கிவிட்டது. இவ்வா
அவன் நிர்குணத்தின் வழியைக் கடக்க வேண்டியதாயிற்று. சகுண
முதலில், ஆனால் அதை அடுத்தாற்போல் நிர்குணத்தின் படி ஏறி
ஆகவேண்டும். இல்லையேல் பூரணத்துவம் ஏற்படாது.

அர்ஜுனன் நிலையோ இதற்கு நேர்மாறானது. கிருஷ்ண

ன என்ன செய்யச் சொல்லி யிருந்தான்? தனக்குப் பிறகு எல்லாப் ாடிரையும் பாதுகாக்கும் பொறுப்பை அவன் அர்ஜுனனிடம் ஒப்பு ிருந்தான். அர்ஜுனன் அஸ்திஞபுரத்தினின்று வந்து துவார லிருந்து ஸ்ரீ கிருஷ்ணனது ஸ்திரீகளை அழைத்துக்கொண்டு றன். வழியில் ஹிஸாருக்கருகே பஞ்சாபிலிருந்து வந்த திருடர்கள் ன வழிப்பறி செய்துவிட்டார்கள். அந்தக் காலத்தில் அவன் ஒரு ஆண்மகன் என்று சொல்லப்பட்டவன், தலை சிறந்த வீரனென்று பெற்றவன், தோல்வி என்பதையே அறியாதிருந்தது காரணமாய் ன் (வெற்றி வீரன்) என்று பிரசித்தி பெற்றிருந்தவன், சிவனையே க்கு நேராய் நின்று எதிர்த்துப் பணியச் செய்தவன்; அதே அர்ஜு ஆஜ்மீருக்கருகில் ஓட்டமாய் ஓடித் தப்பினான். கிருஷ்ணன் போய் தனால் அவன் மனம் பெரிதும் பாதிக்கப்பட்டுவிட்டது; உயிரே ிவிட்டது போலும், உயிரும் ஆதரவுமற்ற வெற்றுடலைப் போலும் ன் ஆகிவிட்டான். அதாவது இடையறுது கர்மம் புரிந்துகொண்டு ஷ்ணனிடமிருந்து விலகியே இருந்துவந்த நிர்குண உபாசகனை ஜுனனுக்கு இறுதியில் இந்தப் பிரிவு தாளமுடியாத தாகிவிட்டது; னுடைய நிர்குணம் இறுதியில் பிரிவின் மூலம் பீரிட்டுக்கொண்டு ிவந்தது; அவனது கர்மம் அனைத்துமே முடிந்துவிட்டதுபோல் ற்று. அவனது நிர்குணத்திற்கு இறுதியில் சகுணத்தின் அனுபவம் பட்டது. சகுணம் நிர்குணத்திற்குப் போகவும் நிர்குணம் சகுணத் கு வரவும் வேண்டியிருக்கிறது என்பது கருத்து. இவ்வாறு இரண் ம ஒன்று மற்றதினால் நிறைவுறுகின்றன.

## (65) இரண்டும் ஒன்றே—சொந்த அனுபவம்

ஆகையால் சகுண உபாசகன், நிர்குண உபாசகன் ஆகிய இருவ யில் உள்ள வேற்றுமை என்னவெனச் சொல்ல முயலும்பொழுது தச் சொல்லுவதே சிரமமாகிவிடுகிறது; சகுணமும் நிர்குணமும் தியில் ஒன்றாகிவிடுகின்றன. பக்தியின் அருவி முதலில் சகுணத்தி ந்து தோன்றிய போதிலும் இறுதியில் நிர்குணம் வரை ஓடுகிறது. ழய காலத்தில் நடந்த விஷயம் ஒன்று: நான் வைக்கம் சத்தியாக்ர பார்க்கப் போயிருந்தேன். மலையாளத்தின் எல்லையில் சங்கராச் ியர் பிறந்த ஊர் இருக்கிறது. பூகோளம் பற்றிய இவ்விஷயம் என் னவிலிருந்தது. நான் போய்க்கொண்டிருந்த மார்க்கத்தின் பக்கத்தி யே எங்கோ சங்கராச்சாரியரது 'காலடி' கிராமம் இருக்குமென்று க்குத் தோன்றியதால் உடன் வந்த மலையாளியைக் கேட்டேன்.

அவர், "இங்கிருந்து 10, 12 மைல் தொலைவு இருக்கும். நீ
அங்கே போக வேண்டுமா?" என்று கேட்டார். நான் வேண்
என்று சொல்லிவிட்டேன். நான் சத்தியாக்ரஹம் பார்க்கப் போ
கொண்டிருந்ததால் எனக்கு வேறு எங்கும் போவது உசிதமெ
தோன்றவில்லை. ஆகவே, அப்பொழுது நான் அந்தக் கிராமத்
பார்க்கப் போகவில்லை. அவ்வாறு செய்தது சரியே என்று எ
இப்பொழுதும் தோன்றுகிறது. ஆனால் இரவில் நான் தூங்கத் தெ
கியபொழுது அக் காலடி கிராமமும், சங்கராச்சாரியரது உருவும், மீண்
மீண்டும் என்னெதிரில் வந்து சுழன்றுகொண்டிருந்ததால் தூ
கலைந்துபோயிற்று. அந்த அனுபவம் எனக்கு இன்றும் அப்ப
இருந்துகொண்டிருக்கிறது. சங்கராச்சாரியரது அந்த ஞானச் சிறப்
அவரது அத் தெய்வீக அத்வைத நிஷ்டையும், எதிரில் வியாபித்து
சம்சாரம் அனைத்தும் பொய் என்று முடிவுகட்டும் அவரது அசாதா
மான ஒளிபொருந்திய வைராக்கியமும், அவருடைய கம்பீர
மொழியும், அவரிடமிருந்து நான் பெற்றுள்ள அளவிலடங்காத உதவி
எனக்கு அடிக்கடி நினைவுக்கு வந்துகொண்டிருந்தன. இரவில்
பாவனைகளெல்லாம் எதிரில் வந்து நின்றன. அப்பொழுது இந்த
குணத்தில் சகுணம் எப்படி நிரம்பி வழிந்து கொண்டிருக்கிறது எ
அனுபவம் எனக்கு ஏற்பட்டது. நேருக்கு நேராய்ச் சந்தித்திருந்தா
அவ்வளவு நேசம் இருந்திராது. நிர்குணத்திலும் சகுணம் பூரண
நிரம்பியே இருக்கிறது. நான் பெரும்பாலும் நண்பர்களுக்கு க்ஷே
கலை விசாரித்துக் கடிதம் எழுதுவதில்லை. ஆனால் எந்த நண்பருக்
கடிதம் எழுதாவிட்டாலும் உள்ளுக்குள் அவர் நினைவு எப்பொழு
இருந்துகொண்டே தானிருக்கும்; கடிதம் எழுதாதிருப்பினும் அ
நினைவு உள்ளே பூரணமாய் நிரம்பியிருக்கும். நிர்குணத்தில் இவ்வ
சகுணம் மறைந்து நிற்கிறது. சகுணம், நிர்குணம் ஆகிய இரண்
ஒன்றே. விக்கிரகத்தை எதிரில் வைத்துக் கொண்டு பூஜை செய்
வெளிப்படையாய்ச் சேவை செய்தல், உள்ளுக்குள் இடையறாது உல
நன்மையைக் கோரியவாறே புறத்தே தெரியும்படி எதையும் செய்
திருத்தல் ஆகிய இவ்விரண்டிற்குமுள்ள மதிப்பும் சிறப்பும் ஒன்றே.

## (66) பக்த இலட்சணம் பெறுக!

இறுதியில் சகுணம் எது, நிர்குணம் எது என்பதைத் தீர்மான
தலும் சுலபமல்ல என்பதைச் சொல்ல வேண்டும். ஒரு வகை
சகுணமாயிருப்பது வேறொரு வகையில் பார்க்கையில் நிர்குணமா

. சகுணத்தின் சேவை ஒரு கல்லை வைத்துக் கொண்டு செய்யப்
றது; அக் கல்லில் பகவான் இருப்பதாக எண்ணிக் கொள்கிறோம்.
தாயினிடமும் மகான்களிடமும் சைதனியம் நிதரிசனமாய் வெளி
யிருக்கிறது. அவர்களிடம் ஞானமும், அன்பும், உள்ளமும் தெளி
வெளியாகியிருக்கின்றன. ஆனால் அவர்களைப் பரம்பொருளென்று
ண்டு நாம் வழிபடுவதில்லை. சைதனியமயமான இவ்வுலகம் எல்
ருக்கும் காணப்படுகிறது; ஆகையால் இதற்குச் சேவை செய்ய
ண்டும். இதனுள் சகுணமான பரம்பொருளைக் காணவேண்டும்.
ல் மக்கள் அவ்வாறு செய்யாமல் கல்லில் ஆண்டவனைக் காண்
கள். கல்லில் ஆண்டவனைக் காணுதல் ஒரு வகையில் நிர்குணத்
எல்லையை எட்டிப் பிடித்தலாகும். மகான்கள், பெற்றோர், அண்டை
லார் ஆகியோரிடம் அறிவும், அன்பும், உதவி யுணர்ச்சியும் வெளி
யிருக்கின்றன. அவர்களிடம் ஆண்டவனைப் பாவித்தல் சுலபம்;
ல் ஒரு கல்லில் ஆண்டவனைப் பாவித்தல் சிரமம். நர்மதை
றில் கிடைக்கும் கல்லை நாம் சிவனென்று மதிக்கிறோம். இது
குண பூஜை அல்லவா? ஆனால் இதற்கு மாறாக, கல்லில் ஆண்ட
ப் பாவித்துக் கொள்ளவில்லை என்றால் வேறெங்குதான் பாவிப்பது
றும் விளங்கவில்லை. பகவானின் மூர்த்தியாவதற்குத் தகுதியுள்ளது
கல்லே. அது விகாரமற்றது; அமைதி பொருந்தியது; இருளோ
யோ, வெயிலோ குளிரோ எப்பொழுதும் அக்கல் அப்படியே கிடக்
து. இத்தகைய இவ் விகாரமற்ற கல்தான் ஆண்டவனது சின்ன
வதற்குத் தகுதியுள்ளது. தாய், தந்தை, மக்கள், அண்டை-அயலார்
ிய இவரனைவரும் விகாரம் பொருந்தியவர்களே—அதாவது இவர்க
ம் ஏதேனும் விகாரம் இருக்கவேதான் செய்கிறது. ஆகையால்
லை வழிபடுவதைவிட இவர்களை வழிபடுதல் ஒரு வகையில் சிரமமே.
சகுணமும் நிர்குணமும் ஒன்றுக்கொன்று உதவுபவை என்பது
த்து. சகுணம் சுலபமானது, நிர்குணம் சிரமமானது. ஆனால்
தொருவகையில் சகுணம் சிரமமானதாயிருக்க நிர்குணம் சுலபமா
து. இரண்டின் மூலமாயும் கைகூடுவது ஒரே இலட்சியம். ஐந்தாம்
தியாயத்தில் இருபத்து நான்கு மணி நேரமும் கர்மம் புரிந்து
ண்டே ஒரு சிறிதும் கர்மம் செய்யாத யோகியும், இருபத்து நான்கு
ி நேரமும் சிறிதும் கர்மம் செய்யாது எல்லாக் கர்மங்களையும்
யும் சந்நியாசியும் ஒரே தன்மையர் என்று சொல்லியதைப் போலவே
் இங்கும். சகுணக் கர்ம நிலை, நிர்குணச் சந்நியாசயோகம் ஆகிய
ண்டும் ஒன்றே. சந்நியாசம் சிறந்ததா, யோகம் சிறந்ததா என்ப

தற்கு விடை கூறுவதில் பகவானுக்கு ஏற்பட்ட அதே சிரமம் இ
ஏற்பட்டிருக்கிறது. இறுதியில் எது சுலபம், எது சிரமம் என்று இ
டிற்குமுள்ள ஏற்றத்தாழ்வையே கூறவேண்டியதாயிருக்கிறது. இ
யேல், யோகமாவது சந்நியாசமாவது, சகுணமாவது நிர்குணமாவ
இரண்டும் ஒன்றே. இறுதியில் பகவான், "அர்ஜுனா, நீ சகுண
னும் சரி, நிர்குணனாயினும் சரி, பக்தனாய் மட்டும் கட்டாயம்
வெறும் கருங்கல்லாய் இராதே" என்கிறார். இவ்வாறு சொல்லி
முடிவில் பக்தனுடைய இலட்சணங்களைக் கூறியிருக்கிறார். அ
இனிப்பாயிருக்கலாம்; ஆனால் அதைச் சுவைத்துப் பார்ப்பத
நமக்குச் சந்தர்ப்பம் கிடைத்ததில்லை. இவ்விலட்சணங்களோ நப
நிதரிசனமாய் இனிமையாயிருக்கின்றன; இதில் கற்பனை எத
செய்துகொள்ளத் தேவையில்லை. இவ்விலட்சணங்களை நாம் அனுப
போம். பன்னிரண்டாம் அத்தியாயத்திலுள்ள இப் பக்த லட்சணங்
ஸ்திதப்பிரக்ஞனது இலட்சணங்களைப் போலவே ஒவ்வொரு நா
ஓதவேண்டும், சிந்திக்கவேண்டும். இவைகளைச் சிறிது சிறிதாக
வாழ்க்கையில் கொணர்ந்து வலுவுறவேண்டும். இவ்வாறு நம் வா
கையை மெல்லமெல்ல ஆண்டவனிடம் கொண்டுபோக வேண்டும்.

ஞாயிறு, 8–5–'32

## பதின்மூன்றும் அத்தியாயம்

# ஆத்ம–அனாத்ம விவேகம்

### (67) கர்மயோகத்திற்குதவும் உடல்–ஆன்மப் பாகுபாடு

வியாசதேவர் தம் வாழ்க்கையின் சாரத்தை பகவத் கீதைய
அமைத்திருக்கிறார். அவர் விஸ்தாரமாக இன்னும் என்னவெல்லா
எழுதியிருக்கிறார். மகாபாரதம் ஒன்றுமட்டுமே ஒன்று, ஒன்றேக
இலட்சம் சுலோகங்கள் கொண்டது. ஸம்ஸ்கிருதத்தில் 'வியாஸ' என
சொல்லுக்கே விஸ்தாரமென்ற பொருள் ஏற்பட்டுவிட்டது. ஆன
பகவத் கீதையிலோ அவர் மனம் விஸ்தாரத்தில் செல்லவில்லை. ஜியே
மிதியில் யூக்லிட் சித்தாந்தங்களைச் சொல்லியிருப்பதுபோல வா
கைக்கு உபயோகமான தத்துவங்களைக் கீதையில் வியாசதேவர் ஒன்றி
பின் ஒன்றாய் எழுதிக்கொண்டே போகிறார். பகவத் கீதையில் விசே
மான சர்ச்சைகளுமில்லை, விஸ்தாரமாக எதுவுமில்லை. இதற்கு முக்கி
காரணம், கீதையில் சொல்லப்பட்ட எல்லா விஷயங்களையும் ஒவ்வொ

தனும் தன் வாழ்க்கையில் பரிசோதிக்கலாம் என்பதே; பரிசோதிக்க ாடும் என்பதற்காகவே அவை சொல்லப்பட்டிருக்கின்றன. வாழ்க் கு உபயோகமான விஷயங்களே கீதையில் சொல்லப்பெற்றிருக் றன. அவர் சொன்னதன் நோக்கமும் இதுவே ஆகையால் தத்து ளைச் சுருக்கமாய்ச் சொல்லுவதோடு திருப்தியடைந்துவிட்டார். து இந்தப் போதுமென்ற மனத்திலிருந்து, திருப்தியிலிருந்து நக்குச் சத்தியத்திலும் ஆன்மானுபவத்திலும் உள்ள பெருநம் க நமக்குத் தெரியவருகிறது. உண்மையை வலியுறுத்துவதற்கு க யுக்திகளைக் கையாளத் தேவையிருப்பதில்லை.

நாம் கீதையிலேயே கண்ணுயிருப்பதில் முக்கியமாய்க் கொண்டுள்ள க்கம், நமக்கு வாழ்க்கையில் உதவி தேவையாயிருக்கும் பொழு லாம் அது கீதையினிடமிருந்து கிடைக்கவேண்டும் என்பதே; அது பாழுதும் நமக்குக் கிடைக்கிறது. கீதை வாழ்க்கைக்கு உபயோக சாத்திரமாயிருப்பதால் அதில் சுதர்மம் பெரிதும் வற்புறுத்தப்பட் க்கிறது. மனிதனுடைய வாழ்க்கையைத் தாங்கும் கால் ஒன்று டென்றால் அது சுதர்மம் இயற்றலே; அதன் மேல் கட்டுக்கோப் த்தையும் இச் சுதர்மத்தின்மீது நிறுத்த வேண்டும். இக் காலின் தியையொட்டி அதற்கு மேலே எழுப்பும் கட்டடத்தின் உறுதி மயும். இச் சுதர்மம் புரிவதையே கீதையில் கர்மமென்று சொல்லி க்கிறது. சுதர்மமியற்றலென்ற இக் கர்மத்தைச் சூழ கீதையில் நக விஷயங்கள் அமைக்கப்பெற்றிருக்கின்றன. இதைக் காக்கும் ருட்டு பல விகர்மங்கள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. சுதர்ம ற்றலை ஜோடிப்பதற்கு, அழகுபடுத்துவதற்கு, அதை வெற்றியுள்ள குவதற்குத் தேவையான ஆதாரங்கள், உதவிகள் எல்லாம் அதற் த்தல் வேண்டும். ஆகையால் இதுவரை இத்தகைய பல விஷயங் ப் பார்த்தோம். அவற்றுள் பல பக்தியினுருவில் இருந்தன. இன்று ன்மூன்றும் அத்தியாயத்தில் நாம் பார்க்கப் போவதும் சுதர்மமியற்று ற்கு மிகவும் உபயோகமானதே; அது சிந்தனையுடன் தொடர் டயது.

கீதையில் சுதர்மத்தைப் பயனிடம் பற்றில்லாது செய்யவேண்டு ன்ற விஷயம் முக்கியமாய் எல்லாவிடங்களிலுமே சொல்லப்பட்டிருக் து. கர்மத்தைச் செய்ய வேண்டியதுதான், ஆனால் அதன் பயனை டுவிடவேண்டும். மரத்திற்கு நீர் ஊற்று, அதைக் கவனித்துப் பாது துவா; ஆனால் அதன் நிழலோ, பூவோ, பழமோ தனக்கு வேண்டு ன்ற ஆசை கொள்ளாதே. இதுவே சுதர்மமியற்றலென்ற கர்ம

யோகம். கர்மத்தைச் செய்துகொண்டேயிருத்தல் என்பது மட்
கர்மயோகம் என்பதன் பொருளல்ல. கர்மம் இச் சிருஷ்டியில் எ
நடந்துகொண்டேதானிருக்கிறது. அதைச் சொல்லத் தேவையி
ஆனால் சுதர்மமியற்றலென்ற கர்மத்தை—வெறும் கர்மத்தைய
நன்றாய்ச் செய்து அதன் பயனைத் துறந்துவிடுதல் என்பது
வதற்கு, புரிந்து கொள்ளுவதற்கு மிகவும் சுலபமாய்த் தோன்
போதிலும் நிறைவேற்றுதல் மிகவும் சிரமம். ஏனெனில்
காரியத்தையும் செய்வதற்குத் தூண்டுகோலாயிருக்கும் சக்தி பய
மூள்ள ஆசையே என்று ஒப்பப்பட்டிருக்கிறது. பயனிடம் உ
ஆசையை விட்டுவிட்டுக் கர்மம் செய்தல் என்பது தன்
விவகாரமாகும். உலக நடை, உலகப் போக்கு ஆகியவற்றிற்கு
நேர்மாறானது. ஒருவன் ஓயாது காரியம் செய்துகொண்டிருந்
அவன் வாழ்க்கையில் கீதையின் கர்மயோகம் அமைந்துவிட்டதாய்
சொல்வதுண்டு; மிகுந்த காரியம் செய்வோனது வாழ்க்கையைக்
யோகமயமானது என்கிறோம். ஆனால் இவ்வாறு சொல்லும்பொ
நாம் உண்மையைச் சொல்லுவதாகாது. ஏனெனில் கீதையின்
கத்திற் கொப்ப அது கர்மயோகமல்ல. இலட்சக்கணக்கான க
செய்கிறவர்களுள்—வெறும் கர்மமல்ல, சுதர்மாசரணமென்ற கர்மத்
செய்பவர்களுள்ளும்—கீதையின் கர்மயோகத்தைச் செய்பவர் கிடை
லரிது. கீதையின் நுணுக்கமான, உண்மையான பொருளைக் கொ
பார்த்தால் இத்தகைய பூரண கர்மயோகி கிடைத்தல் அருமையி
அருமை. கர்மத்தைச் செய்யவேண்டும்; ஆனால் அதன் பயனை வி
விடவேண்டும் என்பது முற்றிலும் அசாதாரணமான விஷயம்.
வரை கீதையில் இப் பாகுபாடே செய்யப்பட்டது.

இப் பாகுபாட்டிற்கு உபயோகமான வேறொரு பாகுபாடு இப் ப
மூன்றாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 'கர்மத்தை
செய்யவேண்டும், ஆனால் அதன் பயனிடம் உள்ள பற்றை விட்டு
வேண்டும்' என்ற இப் பாகுபாட்டிற்கு உதவக்கூடிய பெரிய பாகுப
'உடல், ஆன்மா' என்ற பாகுபாடு. இதுவே பதின்மூன்றாம் அ
யாயத்தில் கூறப்பட்டுள்ளது. கண்களினால் நாம் பார்க்கும் அமைப்
உருவம், ஆகிருதி, உடல் என்கிறோம். நம் கண்களுக்கு வெ
உருவம் புலனாகிவிட்டபோதிலும் நாம் பொருளின் உள்ளே புகவே
யிருக்கிறது. பழத்தின் வெளி மூடியை—தோலை—உரித்தெறிந்துவி
அதன் உள்ளேயுள்ள சுளையை, கதுப்பைச் சாப்பிடவேண்டியிருக்கி
தேங்காயையும் உடைத்தே உள்ளே பார்க்கவேண்டி யிருக்கிறது. ப

ின் மீது முட்கள் இருந்தபோதிலும் உள்ளே சிறந்த, இனிய
ள் நிறைந்திருக்கின்றன. நாம் நம்மையே பார்த்தாலும் சரி,
ரப் பார்த்தாலும் சரி உள்ளும் புறமும் வெவ்வேருய்ப் பிரித்துப்
கவேண்டியது அவசியமாகிறது. அப்படியானால் தோலை உரிப்
பொருளென்ன? இதன் பொருள், ஒவ்வொரு பொருளிலும் உள்
யையும் மேல் தோலையும் வெவ்வேருய்ப் பிரித்தல் என்பதே.
டல், அகத்திலுள்ள ஆன்மா என்று ஒவ்வொரு பொருளுக்கும் இரு
ப்புகள் இருக்கின்றன. கர்மத்திலுள்ளதும் இதுவே. புறத்தே
பயன் கர்மத்தின் உடல். கர்மம் காரணமாக விளையும் சித்த
யே அக் கர்மத்தின் ஆன்மா. சுதர்மமியற்றலென்ற வெளியிலுள்ள
ன உடலைவிட்டு உள்ளேயுள்ள சித்தசுத்தியென்ற சாரமான
மாவை ஏற்கவேண்டும், உள்ளத்தில் நிரப்பிக்கொண்டுவிட
டும். இவ்வாறு பார்க்கும் பழக்கத்தை, உடலை அகற்றி ஒவ்வொரு
ளின் சாரத்தை ஏற்கும், ரசத்தை உறிஞ்சும் நோக்கை நாம் பெற
டும். கண்களுக்கும் மனத்திற்கும் கருத்துக்களுக்கும் இப்பழக்
த, பயிற்சியை அளிக்கவேண்டும். ஒவ்வொரு விஷயத்திலும்
ல ஒதுக்கிவிட்டு ஆன்மாவை வழிபட வேண்டும். இப் பாகுபாடு
ந்தனையின் பொருட்டு பதின்மூன்றும் அத்தியாயத்தில் தரப்பட்
கிறது.

## (68) திருத்தத்தின் அஸ்திவாரம்

சாரத்தைக் கிரகிக்கும் நோக்குக் கொள்வது பற்றிய இக்கருத்து
ம் மகத்துவம் வாய்ந்தது. நாம் சிறு பிராயம் முதலே இதைப்
கம் பண்ணிக் கொண்டால் எவ்வளவோ நன்ருய் இருக்குமே! இவ்
யம் நமதாக்கிக்கொள்ளத் தகுந்தது, இந்நோக்கு ஏற்கத் தக்கது.
ன், அத்தியாத்ம வித்தைக்கும் வாழ்க்கைக்கும் ஒரு சம்பந்தமும்
லயென்றே பலருக்குத் தோன்றுகிறது! இத்தகைய சம்பந்தம்
க்குமானுலும் அது அறவே கூடாது என்றும் சிலர் கருதுகிருர்கள்.
லை ஆன்மாவிலிருந்து வேருய்ப் பிரித்துணரும் பயிற்சி பிள்ளைப்
யம் முதலே அளிப்பதற்குத் திட்டம் செய்யமுடியுமானுல் அது
ம் மகிழ்ச்சிக்குரிய விஷயமாயிருக்கும். இது போதனு சாத்திரம்
ிய விஷயம். தற்காலத்தில் பிழைபட்ட கல்வியின் விளைவாக
ம் தீய ஸம்ஸ்காரங்கள் குழந்தைகளின் மனத்தில் ஏற்பட்டுக்
ண்டிருக்கின்றன. ‘நான் வெறும் உடலே’ என்பதற்கு வெளியே
கல்வி நம்மை அழைத்துப்போவதே இல்லை. எல்லாம் உடலைப்

பற்றிய விவகாரங்களே நடந்துவருகின்றன. ஆனால் இவ்வாறிரு
உடலுக்கு ஏற்படவேண்டிய, அளிக்கவேண்டிய தன்மை, உரு என்
காணப்படவில்லை. இவ்வாறு இவ்வுடலுக்கு வீண் பூஜை நடந்துவ
டிருக்கிறது, ஆன்மாவின் இனிமையில் கவனமே செல்லக்காே
தற்காலக் கல்வி முறையால் இந்நிலை ஏற்பட்டுளது. இவ்வாறு
வழிபாட்டில் அல்லும் பகலும் பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது.

மிகச்சிறு பிராயம் முதலே நமக்கு இந்த உடல் தெய்வ
பூஜை — அர்ச்சனை செய்யக் கற்பிக்கப்படுகிறது. காலில் சிறிது இ
புண்ணாகியிருந்தால் கொஞ்சம் களிமண்ணைத் தடவினால் போ
குழந்தைக்கு இதுவே போதுமென்றோ, மண் கூடத் தேவையி
என்றோதான் தோன்றும். சிறு காயம், சிராய்ப்பு முதலியவை
அவன் பொருட்படுத்தவே மாட்டான். ஆனால் அக் குழந்தை
பெற்றோர், பாதுகாப்பாளர் ஆகியோருக்கு இது போதுமென்று தோ
வதில்லை. அவர் குழந்தையைப் பக்கத்தில் அழைத்துக் கொஞ்சிக்குல
"ஐயோ, காயமா பட்டது? எவ்வாறு பட்டது? எங்கே பட்டது? அ
பெரிய காயம்போலிருக்கிறதே! அடேடே! இரத்தம் வந்திருக்கிறதே
என்பார். இவ்வாறெல்லாம் சொல்லிக் குழந்தை அழாவிட்டா
அழவைத்துவிடுவார். அழாதிருக்கும் குழந்தையை அழவைக்கும் இ
இலட்சணத்தை என்னென்பது! அவர்களுக்கு 'ஓடிக்குதிக்காதே, வி
யாடப் போகாதே, போனால் கீழே விழுந்துவிடுவாய், காயம் பட்டுவிடு
என்பதுபோன்ற உடலையே குறிக்கும் ஒருமுகமான போதனை
அளிக்கப்படுகிறது.

குழந்தையின் விளையாட்டிலுங்கூட அதன் உடலே முக்கியமா
கவனிக்கப்படுகிறது. உடலைக் கருதியே குழந்தை கண்டிக்க
படுகிறான். "எவ்வளவு அழுக்கடா!" என்கிறார்கள். இத
குழந்தையின் மனம் எவ்வளவு நோகிறது! இக் குற்றச்சாட்டு எவ்வள
தவறு! அழுக்கு இருக்கிறதென்பதும், அதைக் கழுவவேண்
என்பதும் உண்மையே. ஆனால் இவ்வழுக்கைச் சிரமமின்றிக் கழு
விடுவதை விட்டு அக் குழந்தை எப்படித் தாக்கப்படுகிறா
குழந்தையினால் அதைத் தாங்க முடியவில்லை. அவன் மிகவும் துன்ப
கிறான்; மிகவும் வருந்துகிறான். அவன் அகத்தில், ஆன்மாவில்,
புரவும் தூய்மையும் நிரம்பியிருந்தும் அசுத்தமாயிருப்பதாக இ
என்ன வீண் குற்றச்சாட்டு? உண்மையில் அக் குழந்தை அசுத்தமா
இல்லை. மிகவும் அழகாயும், இனிமையாயும், புனிதமாயும், பிரியம
முள்ள பரம்பொருளேதான் அக்குழந்தையும். அதன் அமிசம்தா

ிடமும் இருக்கிறது. ஆனுல் நாம் இவனை அசுத்தன் என்கிருேம்.
தத்திற்கும் இவனுக்கும் என்ன சம்பந்தம்? குழந்தைக்கு இது
யவே செய்யாதாகையால் அவனுல் இத் தாக்குதலைப் பொறுக்க
ுதில்லை; அவன் சித்தத்தில் துன்பம் தோன்றுகிறது. துன்பம்
ன்றியபின் திருத்தம் தோன்றுவதில்லை. ஆகையால் அவனுக்கு
யத்தை நன்ருய் விளக்கி அவனைத் துப்புரவாய் வைக்கவேண்டும்.
இதற்கு மாருன காரியத்தைச் செய்து அவன் உடலே என்ற
யத்தை அவன் மனத்தில் பதியச்செய்கிருேம். போதனு சாத்திரத்
இதை ஒரு மகத்துவம் வாய்ந்த தத்துவம் எனக் கொள்ளவேண்டும்.
னுல் போதிக்கப் பெறுவோன் சர்வாங்க சுந்தரன் என்ற பாவனை
ுக்கு இருக்க வேண்டும். கணக்கிலோ, வேறு கேள்விக்கு விடை
லுகையிலோ பிழை நேர்ந்துவிட்டால் கன்னத்தில் அறைகிருர்கள்.
தவறியதற்கும் கன்னத்தில் அறைவதற்கும் என்ன சம்பந்தம்?
ிக்கூடத்திற்கு தாமதமாய் வந்தால் கொடுக்கிருர்கள் அடி. அவன்
இரத்தம்போல் சிவந்துபோகுமேயல்லாது, இதனுல் அவன்
ரம் வந்துவிடுவானு? இந்த வேகமான இரத்த ஓட்டம் இப்பொழுது
எவ்வளவு என்பதை அறிய உதவுமா? ஆனுல் உண்மையில்
ாறு அடித்துப் புடைத்து நாம் அவனுடைய மிருகத்தனத்தையே
க்கிருேம், ‘நீ இந்த உடலே’ என்ற பாவனையையே உறுதிப்
்துகிருேம்; அவன் வாழ்க்கையை அச்சத்தின் அடிப்படையில்
மச்கிருேம். உண்மையில் நாம் திருத்தம் செய்யவேண்டுமானுல்
வாறு நிர்ப்பந்தப்படுத்தி உடற்பற்றை வளர்ப்பதனுல் அதைச்
யமுடியாது. நான் வேறு, என் உடல் வேறு என்பதைப் புரிந்து
ள்ளும்பொழுதுதான் நான் திருந்துவேன்.

உடலிலோ, மனத்திலோ உள்ள குறைபாட்டை உணருதல்
ல்ல. இதனுல் அக் குறையைப் போக்குவதற்கு உதவி ஏற்படும்.
ல் ‘நான் இவ்வுடல் அல்லன்’ என்ற விஷயம் நமக்குத் தெளிவாய்ப்
திருக்க வேண்டும். ‘நான்’ என்பது இவ்வுடலிலிருந்து வேருனது,
த்திருப்பது, மிகவும் அழகியது, ஒளிபொருந்தியது, குறை
ற்றது. தன் குறைபாடுகளை அகற்றிக்கொள்ளும்பொருட்டு ஆன்ம
தனை செய்ய வேண்டும். தன்னைத் தன் உடலிலிருந்து வேருய்ப்
்து அவ்வாறு செய்கிருன் ஆகையால் எவரேனும் அவனுக்கு அவன்
றயைச் சுட்டிக்காட்டினுல் அவன் அதைத் தவருய் நினைப்பதில்லை,
பம் கொள்வதில்லை; இந்த உடல் என்ற, மனமென்ற இயந்திரத்தில்
ன குற்றம் இருக்கிறதென்று சிந்தித்துப் பார்த்து அதை அகற்று

கிறான். இதற்கு மாறாக, தான் வேறு தன் உடல் வேறு என்று
தவன் தன்னைத் திருத்திக்கொள்ள வியலாது. இவ்வுடல்,
பிண்டம், மண்ணால் பிடித்துவைத்த இவ் விம்பம்—இதுவே
என்று எண்ணுவோன் தன்னை எப்படித் திருத்திக்கொள்வான்?
வுடல் எனக்கு ஒரு சாதனமாய், கருவியாய்க் கிடைத்திருக்கிறது
நான் எண்ணும்பொழுது திருத்தம் செய்தல் சாத்தியம். ராட்
ஏதேனும் குறையையோ, குற்றத்தையோ ஒருவர் சுட்டிக் காட்
எனக்குக் கோபமா வருகிறது? குற்றம் ஏதேனும் இருக்குமாகில்
நான் போக்கவே செய்கிறேன். உடலின் விஷயத்திலும் இப்ப
எண்ணிக்கொள்ளுங்கள். விவசாயத்தின் கருவிகளைப்போலவே
இவ்வுடலுமென்று கொள். இவ்வுடல் ஆண்டவனது புலத்தைப்
படுத்திப் பயிரிடுவதற்கமைந்த ஒரு கருவியே. இது கெட்டுவிடும
இதைக் கட்டாயம் செப்பம் செய்யவேண்டும், ஒழுங்குபடுத்திக் கொ
வேண்டும். இவ்வுடல் ஒரு கருவியாய் அமைந்துள்ளது. ஆகை
இவ்வுடலிலிருந்து தம்மை வேறாய் வைத்துக் கொண்டு, குற்றங்
களிலிருந்து விடுதலை பெற நாம் முயலவேண்டும். உடலென்ற
கருவியிலிருந்து நான் வேறு பட்டவன், தலைவன், எஜமானன்;
வுடலிடம் வேலை வாங்குவோன், இதன் மூலமாய்ச் சிறந்த பண
இயற்றுவோன். பிள்ளைப் பிராயம் முதலே இவ்வாறு உடலிலிரு
பிரிந்த, வேறுபட்ட பாவனை இருந்துவரச் செய்யவேண்டும்.

ஆடாமல் அசையாமல் இருந்து வேடிக்கை பார்ப்பவன் ஆட்டத்
குணதோஷங்களை நன்றாய் உணரமுடிவதைப் போல நாமும் உ
மனம், புத்தி ஆகியவற்றிலிருந்து நம்மை வேறுபடுத்திக் கொள்
பொழுது அவற்றின் குணதோஷங்களை உணர முடியும். சி
"இப்பொழுது என் ஞாபக சக்தி சிறிது கெட்டுவிட்டது; இத
ஏதேனும் உபாயம் சொல்லுங்களேன்!" என்கிறார்கள். மனி
இவ்வாறு சொல்லும் பொழுது அவன் வேறு, அவனுடைய ஞாபக
வேறு என்பது தெளிவாகிறது. "என் ஞாபக சக்தி கெட்டுப்போ
விட்டது" என்று அவன் சொல்லுகிறான். இதற்கு அவனிடமுள்ள
சாதனம் அல்லது கருவி கெட்டுவிட்டது என்றே பொருளாயி
ஒருவனுடைய பிள்ளை கெட்டுப் போகலாம், புத்தகம் கெட்டுப் போ
லாம், ஆனால் எவனும் தானே இழந்து போவதில்லை. இறுதி
இறக்கும்பொழுது அவன் உடலே எல்லாவகையிலும் கெடுகிற
வீணாகிறது. அவனோ உள்ளுக்குள் எப்பொழுதும்போல் இரு
வருகிறான்; குறையற்று நோயற்று இருந்து வருகிறான். இவ் விஷ

துகொள்ள வேண்டியதொன்று. இது புரிந்துவிடுமானால் இதனால்
க சங்கடங்களிலிருந்து, சிக்கல்களிலிருந்து நாம் விடுபடுவோம்.

## (69) வாழ்வைத் தடுக்கும் உடற்பற்று

உடலேதான் 'நான்' என்ற பாவனை எங்கும் பரவி யிருப்பதன்
வாய் மனிதன் சிந்தனையின்றி உடலை வளம்பெறச் செய்வதற்காகப்
வறு சாதனங்களை அமைத்துக் கொண்டிருக்கிறான். அவைகளைப்
ந்தாலே மிக்க பயம் உண்டாகிறது. இவ்வுடல் பழையதாகிவிட்டது,
த்து வற்றிவிட்டது; ஆயினும் இதை எவ்வாறேனும் நிலைத்திருக்கச்
யவேண்டும் என்ற எண்ணம் எப்பொழுதும் இருந்து வருகிறது.
ல் இவ் வுடலை, இம்மேல் ஓட்டை உங்களால் எதுவரை நிலைக்கச்
யமுடியும்? சாகும் வரையில்தானே! எமனிடமிருந்து 'வாரண்ட்'
; பிறகு ஒரு கணமும் நிலைக்க முடியாதே. மரணத்தினெதிரில்
பாசமெல்லாம் மறைந்துபோகிறது. ஆயினும் இவ்விழிந்த
லுக்காக மனிதன் பல்வேறு சாதனங்களைச் சேர்க்கிறான். அல்லும்
வம் இவ்வுடலைப்பற்றியே கவலையுறுகிறான். உடலைக் காக்கும்
ருட்டு புலால் உண்டால் குற்றமில்லை என்று சொல்லுகிறான்.
தன் உடல் அவ்வளவு மதிப்புள்ளதா? அதைக் காக்கப் புலால்
ணவேண்டுமா? மிருகத்தினது உடலின் மதிப்புக் குறைவாம்! ஏன்?
தன் உடலுக்கு மட்டும் ஏன் மதிப்பதிகம்? அதற்கு என்ன காரணம்?
கம் எதை வேண்டுமானாலும் தின்னும்; சுயநலத்தைத் தவிர, தன்
ற்றைத் தவிர, அதற்கு வேறு எண்ணமே இருப்பதில்லை. மனிதனது
யம் இப்படியல்ல. மனிதன் தன் அக்கம் பக்கத்திலுள்ள சிருஷ்டி
ப் பாதுகாக்கிறான்; ஆகையால் மனித உடலுக்கு மதிப்பிருக்கிறது,
நமையிருக்கிறது. ஆனால் எதனால் மனித உடல் மதிப்புள்ள
திற்றோ, அதைத் தான் நாம் புலால் உண்டு அழித்துவிடுகிறோமே.
லனடைக்கத்துடன் வாழ்கிறாய், பிற உயிர்களின் நன்மைக்கும் பாது
பிற்கும் பாடுபடுகிறாய், உன் நன்மை-தீமைகளைக் கவனிக்கிறாய் என்
றல் அல்லவா உனக்குப் பெருமையெல்லாம்? பிராணிகளிடம்
லாமல் மனிதனிடம் மட்டுமுள்ள இவ் விசேஷ அமிசங்களினால்
லவா அவன் சிறந்தவன் என்று கருதப்படுவது? இதனாலேயே
ரிதிலும் அரிது மானிடராதலரிது' என்று சொல்லப்பட்டிருக்கிறது.
த அஸ்திவாரத்தின்மீது மனிதன் பெரியவனாய், சிறந்தவனாய் இருக்
றே அதையே அவன் களையத் தொடங்குவானானால் அவனது
நமை என்ற கட்டடம் எவ்வாறு நிற்கும்? பிற பிராணிகளின் மாமிசத்

தைத் தின்று உயிர்வாழும் சாதாரணப் பிராணிகளைப்போல் ம
சிறிதும் தயக்கமின்றி நடந்துகொள்ளுதல் அவனது பெருமை
அடிப்படையையே அகற்றுதல் போலாகும். இது நான் எந்த மர
யின்மீது உட்கார்ந்திருக்கிறேனே அதையே வெட்டுவதுபோலாகு

தற்காலத்தில் வைத்திய சாத்திரம் பலவகையான அற்புதங்
செய்து காட்டிக்கொண்டிருக்கிறது. பிராணிக்கு ஊசி ஏற்றி
உடலில்—அந்த உயிருள்ள பிராணியின் உடலில்—நோய்க் கிரு
உண்டாக்கி, அந் நோய்களினால் அது எவ்வாறு பாதிக்கப்ப
தென்று பார்க்கிறார்கள்! உயிருள்ள ஒரு பிராணிக்கு இத்தகைய
கஷ்டம் கொடுப்பதனால் கிடைக்கும் வைத்திய அறிவு இந்த இ
மானிட உடலைப் பாதுகாக்கப் பயன்படுத்தப்படுகிறது! இதெல்
ஜீவகாருணியம் என்ற பெயரில் நடந்து வருகிறது. பிராணியின் உ
கிருமியை உண்டாக்கி, அதன் கிருமித் திரவத்தை எடுத்து மன
உடலில் ஏற்றுகிறார்கள்! இப்படிப்பட்ட பல்வேறு பயங்கரமான
யங்கள் நடந்துவருகின்றன. எந்த உடலுக்காக நாம் இவற்றை
லாம் செய்கிறோமோ, அது ஒரு கணத்தில் உடைந்துபோகும்
ணாடி போன்றிருக்கிறது. அது எது வரை இருக்கும், எப்பொ
உடையும் என்பதொன்றுமே நிச்சயமில்லை. மனித உடலின்
காப்பின் பொருட்டு இம் முயற்சிகளெல்லாம் நடந்துவந்தபோதி
கடைசியில் நாம் அனுபவத்தில் பார்ப்பதென்ன? இந்த நுட்ப
உடலைப் பத்திரப்படுத்த நாம் முயற்சி செய்யச் செய்ய, அது அ
அழிந்துகொண்டிருக்கிறது. இதை நாம் உணர்ந்து தான் வருகி
ஆயினும் இதைக் கொழுத்துப் பருக்கச் செய்யவும், இதன் பெருமை
வளர்க்கவும் முயற்சி நடந்துகொண்டே இருக்கிறது.

எத்தகைய உணவு கொள்வதனால் நம் அறிவு சாத்துவிகம் பொரு
யிருக்கும் என்னும் விஷயத்தில் நாம் கவனம் செலுத்துவதே இல்
மனிதன் மனத்தை ஒழுங்காக்க, அறிவை நிர்மலமாக்க என்ன செ
வேண்டும், எதன் உதவி பெறவேண்டும் என்பதை அறவே கவ
பதில்லை. அவன் கவனிப்பதெல்லாம் உடலின் எடை எப்படி ஏ
என்பதையே; தரையிலுள்ள மண் எப்படி அவன் உடலில் வ
ஒட்டிக்கொள்ளும், மண் உருளைகள்போல் எப்படி அவன் கையும் கா
பருக்கும் என்பதையே அவன் சிந்தித்துக் கொண்டிருக்கிறான். ஆ
சுவரில் தட்டிய சாணமுட்டை உலர்ந்து சுருங்கியதும் தானே
விழுவதைப்போல உடலில் ஏறியுள்ள இம் மண் பூச்சும், இச் சதை
இறுதியில் கரைந்துபோகவும், உடல் மீண்டும் பழைய நிலைக்கே வ

றது. அதனால் தூக்கவேமுடியாதிருக்கும் அளவுக்கு நாம் உடலில்
ளவு மண்ணைப் பூசுகிறோமே, இவ்வளவு எடையை ஏற்றுகிறோமே.
பொருள்தான் என்ன? ஆம், இவ்வுடல் நமக்கு ஒரு கருவியே;
ஒழுங்காக வைத்துக்கொள்வதற்குத் தேவையானவைகளை யெல்
நாம் செய்யவேண்டியதே. இயந்திரத்தைக் கையாளவேண்டும்,
படுத்தவேண்டும். ஆனால் 'இயந்திர அபிமானம்' என்று ஒன்று
கமுடியுமா? அப்படியானால் இந்த உடலென்ற இயந்திரத்தின்
த்திலும் நாம் இதே வகையில் ஏன் எண்ணலாகாது?
இவ்வுடல் சாத்தியம் (குறிக்கோள்) அல்ல, சாதனமே (கருவியே)
து கருத்து. நமக்கு இவ்வெண்ணம் உறுதியாகுமானால் உடலைப்
இவ்வளவு அமளி துமளி, ஆட்ட பாட்டம் நடக்கிறதே, அது
பு; வாழ்க்கை நமக்கு வேறு வகையிலேயே காட்சியளிக்கத்
ங்கும். பிறகு இவ்வுடலை அலங்கரிப்பதில், ஜோடிப்பதில் மதிப்பு
ம் தோன்றாது. உண்மையில் இவ்வுடலுக்கு ஒரு சாதாரணத்
யே போதும். ஆனால் நாம் அது கூடாதென்று மிருதுவான, வழ
வன்ற துணியை விரும்புகிறோம்; அது நல்ல நிறமுள்ளதாய், நல்ல
ள்ளதாய், சித்திர வேலைப்பாடுகள் அமைந்ததாய் இருக்க
டும் என்றெல்லாம் நினைக்கிறோம். அதன் பொருட்டு நாம் பலரைக்
ண்டு விதவிதமாக வேலைகள் செய்விக்கிறோம். இதெல்லாம் எதற்கு?
ப் பகவானுக்கு அறிவில்லையா? இவ்வுடலுக்கு அழகிய சித்திர
ப்பாடுகள் தேவையாயிருக்குமானால், அவர் புலியின் உடலில் தம்
திறனைக் காட்டியிருப்பதுபோல உன் உடலிலும், என் உடலிலும்
யிருக்கமாட்டாரா? அவருக்கு இது முடியாததொன்றா? மயிலைப்
ஓர் அழகிய தோகையை வேண்டுமானாலும் நமக்குச் செருகியிருப்
! ஆனால் ஆண்டவன் மனிதனுக்கு ஒரே நிறத்தைத் தந்திருக்
ர். அதில் ஏதேனும் கறை பட்டுவிட்டால் அதன் அழகு கெட்டுப்
றது. மனிதன் இயற்கையிலேயே அழகாய்த்தானிருக்கிறான்.
உடலை அலங்கரிக்க வேண்டும் என்பது ஆண்டவன் நோக்கமே
. சிருஷ்டியில் உள்ள அழகு சாதாரணமானதா? தன் கண்களால்
ப் பார்த்துக்கொண்டே இருப்பதுதான் மனிதனுடைய வேலை.
ல் அவன் வழி தவறிவிட்டான், ஜெர்மனி நம் சாயத் தொழிலை
த்துவிட்டது என்று சொல்லுகிறார்கள். தம்பீ! உன் மனத்திலுள்ள
, மனத்தின் இயற்கைப் பண்பு முன்னமேயே வெளுத்துப்
ிற்றே; அதன் பிறகே உனக்கு இச் செயற்கைச் சாயத்தில் ஆசை
ன்றியிருக்கிறது! அது காரணமாகவே நீ பிறரை அண்டியவனாகி

யுள்ளாய். காரணமெதுவுமின்றி நீ இந்த உடலலங்காரச் சுழலி
யுள்ளாய். இதனால் மனத்தை அழகுபடுத்துதல், அறிவை வள
உள்ளத்தை நேர்த்தியாக்குதல் ஆகியவற்றில் உன் கவனமே
காணோம்.

## (70) 'தத்துவமஸி'

ஆகையால் இப் பதின்மூன்றும் அத்தியாயத்தில் பகவான்
அளித்துள்ள கருத்து பெரிதும் மதித்தற்குரியது. 'நீ உட
ஆன்மா.' "तत् त्वमसि- அந்த ஆன்ம உருவம் நீயே." இது
உயர்ந்த, புனிதமான, தூய கருத்தாகும், மொழியாகும். ஸம்
இலக்கியத்தில், "இந்த மேலுறை, தோல் மூடி, நீ அல்ல;
உண்மையான அழிவற்ற பழம் அல்லது சுளையே நீ" என்ற உ
கருத்து இடம் பெற்றுள்ளது. மனிதனது உள்ளத்தில் 'அது
'இவ்வுடல் நானல்ல, அப் பரம்பொருளே நான்' என்ற க
பதியும் அதே கணத்தில், அவன் மனத்தில் இதற்கு முன் எ
அறியாத ஒரு புதிய இன்பம் அலைவீசி எழும். 'என் அவ்
அழிக்கும், தகர்க்கும் திறன் உலகில் எப்பொருளுக்கும் இல்லை,
கும் அச் சக்தி இல்லை' என்ற இந் நுணுக்கமான கருத்து இந்த உ
திருந்து எழுந்த மொழியில் அடங்கியுள்ளது.

இவ்வுடலிலிருந்து வேறுபட்டதாய், அழிவற்றதாய் களங்கமற்
உள்ள ஆன்ம தத்துவமே நான். அவ் வான்ம தத்துவத்தின் பொ
எனக்கு இவ்வுடல் கிடைத்திருக்கிறது. அப் பரம தத்துவம்
தற்குச் சந்தர்ப்பங்கள் தோன்றும்பொழுதெல்லாம் நான்
காக்கும் பொருட்டு இவ்வுடலை வீசி எறிந்து விடுவேன். பரம தத்
தைப் பழுதுபடாது பாதுகாக்கும்பொருட்டு இவ்வுடலை அவியாய்
நான் எப்பொழுதும் சித்தமாயிருப்பேன். நான் இவ்வுடலில்
கணித்து வந்திருப்பது என்னையே தோல்வியுறச் செய்யவா? உ
மீது என் ஆதிக்கம் செல்லவேண்டும்! நான் இவ்வுடலை உப
பேன்; இதன் மூலம் எனக்கும் பிறருக்கும் நன்மையை வளர்ப்
மூவுலகிலும் மங்களம் பொங்கச் செய்வேன்! பெரிய தத்துவங்
பொருட்டு இவ்வுடலை வீசி எறிந்துவிட்டு 'ஆண்டவனுக்கு வெ
என்று கூவுவேன்! பணம் படைத்தவன் ஒரு துணி அழுக்கா
அதைக் கழற்றி எறிந்துவிட்டு வேறொன்றை உடுத்துகிறான்;
இவ்வுடலை அப்படியே செய்வேன்! வேலைக்கு இவ்வுடல் தேவை;

க்குத் தகுதியற்றதாகி விடும்பொழுது இதை வீசி எறிய நான் ங்கள்.

த்தியாக்ரஹத்தின் மூலம் நாக்குக் கிடைக்கும் படிப்பினை இதுவே. , ஆன்மா ஆகிய இவை இரண்டும் வெவ்வேறு பொருள்கள். ன் இம் மர்மத்தை உணரும்பொழுதே அவனது உண்மைக் கல்வி, மை வளர்ச்சி ஆரம்பமாகும். அப்பொழுதே சத்தியாக்ரஹமும் நக் கைவரும். ஆகையால் நாம் ஒவ்வொருவரும் இப் பாவனையை உள்ளத்தில் பதித்துக்கொள்ளுதல் அவசியமாகும். உடல் ஒரு ம் சாதனமே, நிமித்தமே; ஆண்டவனால் அளிக்கப்பட்ட ஒரு யே. அதன் தேவை முடிந்துபோகும் அன்றே அதை எறிந்து வண்டும். குளிர் காலத்திற்குதவும் உஷ்ணம் தரும் ஆடைகளை கோடையில் கட்டி வைத்துவிடுகிறோம்; இரவில் போர்த்துக்கொள் கம்பளியைக் காலையில் மடித்து வைத்துவிடுகிறோம். காலையில் ந்ததை மாலையில் கழற்றி வைத்துவிடுகிறோம். இவ்வுடலையும் ாறேதான் எண்ணவேண்டும். பயன்படும் வரை வைத்துக்கொண்டு ில்லாமற் போகும் அன்றே உடலென்ற இவ்வாடையைக் களைந்து வாம். ஆன்மாவின் வளர்ச்சியின் பொருட்டு பகவான் நமக்கு யுக்தியை அருளுகிறார்.

## (71) கொடியோரின் ஆட்சிக்குச் சாவுமணி

'உடலிலிருந்து நான் வேறுபட்டவன்' என்பதை நாம் புரிந்து ாளாதிருக்கும் வரை, துஷ்டர்கள் நமக்குக் கொடுமை புரிந்து ண்டேயிருப்பார்கள், நம்மை அடிமைப்படுத்திக்கொண்டே இருப் கள்; நமக்கு என்னென்ன தீமைகள் புரிவார்களென்று ஒன்றும் ்வதற்கில்லை. அச்சம் காரணமாகவே கொடுமைகள் விளைவித்தல் தியமாகிறது. ஓர் இராட்சதன் ஒரு மனிதனைப் பிடித்துக்கொண் . இராட்சதன் அவனிடம் ஓயாது வேலைவாங்கிக்கொண்டே ந்தான். அவன் சிறிது ஓய்ந்திருப்பானானால் இராட்சதன் அவனிடம் ன்னைத் தின்றுவிடுவேன்! உன்னைத் தொலைத்து விடுவேன்!" ான். முதலில் அம் மனிதன் பயந்துகொண்டிருந்தான். ஆனால் ட்சதனுடைய பயமுறுத்தல்கள் அவனுக்குச் சகிக்க முடியாமற் கவே அவன் "வா, தின்னு! தின்பதானால் தின்றுவிடு!" என்றான். ல் இராட்சதன் தின்னவா அவனை வைத்துக்கொண்டிருந்தான்? னுக்கொரு பணியாள், அடிமை வேண்டியிருந்தது. தின்றுவிட்டால் ன் வேலையை எவன் செய்வான்? அவன் செய்து வந்தது வெறும்

அதட்டல், மிரட்டலே அன்றி வேறல்ல. ஆனால், "இந்தா, எ
சாப்பிடு" என்று பதில் வந்ததும் அவனுடைய கொடுமையும்
விட்டது. துஷ்டர்களுக்குத் தம் கொடுமைக்குள்ளாகியிருப்ப
உடலிடம் கெட்டியாய் ஒட்டிக்கொண்டிருப்பவர்கள் என்பது தெ
உடலுக்குத் துன்பம் ஏற்பட்டதும் இவர்கள் அடிமைகளாகி,
யிருந்து விடுவார்கள் என்று அவர்கள் அறிவார்கள். ஆனால்
பற்றைத் துறந்ததும் நீங்கள் சக்கரவர்த்திகளாகி விடுவீர்கள்,
திரம் பெற்றுவிடுவீர்கள்; எல்லாத் திறனும் உங்கள் கைக்கு வந்து
எவனும் உங்கள்மீது அதிகாரம் செலுத்தவியலாது. அப்பொ
கொடுமை செய்வதற்கு ஆதாரமே இல்லாமற்போய்விடும். 'நான்
என்ற இப் பாவனையே அதற்கு அடிப்படையாய் அமைந்திரு
இவர்கள் உடலை வதைத்தால் உடனே நம் வசப்பட்டுவிடுவார்கள்
அவர்கள் தெரிந்துகொண்டிருப்பதால் அவர்கள் பயமுறுத்தும் முறை
பேசுகிறார்கள்.

'நான் உடலே' என்ற இப் பாவனையினாலேயே பிறர்
கொடுமை செய்ய, பிறரைத் துன்புறுத்த விருப்பமுண்டாகிறது.
இங்கிலாந்தின் கர்மவீரனான கிரான்மர் சொன்னதென்ன? "என
கொளுத்துகிறாயா? சரி, கொளுத்து. இந்தா, முதலில் இவ்
கையைக் கொளுத்து!" என்றான். இவ்வாறே ரிட்லியும், லாட்டி
"எங்களைக் கொளுத்த விரும்புகிறீர்களா? எங்களை யார் கொ
முடியும்? நாங்கள் எவராலும் அவிக்க முடியாத தர்மத் தீயை
யிருக்கிறோம். உடலென்ற இம் மெழுகுவர்த்தியை, இக் கொழு
கொளுத்தி உண்மைத் தத்துவங்களின் ஒளியை எங்கும் பரப்ப
எங்கள் பணி. உடல் அழிந்தால் அழியட்டுமே! அது ஒரு நாள்
வேண்டியதுதானே!" என்றார்கள். சோக்ரத்தருக்கு விஷம் கொடு
கொல்வதென்ற தண்டனை விதிக்கப்பட்டது. அப்பொழுது
"எனக்கோ வயதாகிவிட்டது. நான்கு நாள் போனால் இவ்வுடல்
யத்தான் போகிறது. அழியப்போவதை அழிப்பதில் உங்கள்
எங்கே வெளியாகிறது? இவ்வுடல் ஒரு நாள் நிச்சயமாய் அழி
போகிறதல்லவா? அழியப்போவதை அழிப்பதில் உங்களுக்கு
போதும் பெருமை என்ன?" என்று கேட்டார். சோக்ரத்தருக்கு
அருத்தப்படுவதாயிருந்ததற்கு முதல்நாள் இரவில் அவர் சீடர்க
ஆன்மாவின் அழியாமையைப்பற்றிப் போதித்துக் கொண்டிருந்
உடலில் விஷம் புகுந்ததும் அதற்கு என்னென்ன வேதனைகள் ஏற்
என்பதை அவர் உற்சாகமாய் விவரித்துக்கொண்டிருந்தார். அவரு

ம் சுணக்கமே தோன்றவில்லை. ஆன்மாவின் அமரத்துவத்தைப்
இப் பேச்சு முடிந்ததும் அவருடைய சீடனொருவன், "இறந்த
ங்கள் ஈமச் சடங்குகளை எப்படிச் செய்வது?" என்று கேட்டான்.
ந அவர், "பேஷ்! கொல்லுவதற்கு அவர்கள், புதைப்பதற்கு
அப்படியானால் கொல்லும் அவர்கள் எனக்கு விரோதிகளாக,
தும் நீ மிகவும் வேண்டியவனோ? அவர்கள் புத்திசாலித்தனமாய்
க்கொல்ல, நீ சாமர்த்தியமாய் என்னைப் புதைக்கப்போகிறாயோ?
ப் புதைப்பதற்கு நீ யார்? நான் உங்கள் எல்லோருக்கும் ஈடு
பேன். நீ என்னை எதில் புதைப்பாய்? மண்ணிலா, கல்லறை
என்னை எவனும் கொல்லவும் இயலாது, புதைக்கவும் எவனாலும்
து. நான் இதுவரை உங்களுக்குப் போதித்ததெல்லாம் வீணா?
ர அமரன். அவனை எவனும் கொல்லவோ புதைக்கவோ முடி
" என்றார். உண்மையில் கடந்த இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டு
சோக்ரத்தர் என்ற அப்பெரியார் எல்லோரையும் புதைத்துவிட்டுத்
மேலோங்கியே நிற்கிறார்!

## (72) பரம்பொருளின் சக்தியில் உறுதி

டற்பற்று இருக்கும்வரை, பயம் இருக்கும்வரை, உண்மைப் பாது
க்கு இடமில்லை; அதுவரை அச்சமிருந்து கொண்டேதானிருக்கும்
து கருத்து. சிறிது கண் மூடியதும் பாம்பு வந்து கடித்துவிடுமோ,
ர் வந்து தாக்குவாரோ என்ற அச்சமிருந்துவரும். மனிதன் தலை
ல் ஒரு தடியை வைத்துக்கொண்டு தூங்குகிறான். எதற்காக என்று
ால், "பக்கத்திலிருப்பது நல்லது; திருடன், கிருடன் வந்தால்..."
றான். அடே அப்பாவி! திருடன் அத் தடியையே எடுத்து உன்
ல் போட்டாலோ? திருடன் தடி கொண்டுவர மறந்துபோயிருந்தால்
மென்று நீ முன்கூட்டியே சித்தமாய் வைத்திருக்கிறாய் போலும்! நீ
டைய தைரியத்தில் தூங்குகிறாய்? இச்சமயத்தில் நீ உலகின் கையில்
கிறாய். நீ விழித்திருந்தால் அல்லவா உன்னைப் பாதுகாத்துக்
வாய்? உறக்கத்தில் உன்னைக் காப்பவர் யார்?

நான் ஏதோ ஒரு சக்தியை நம்பித் தூங்குகிறேன். எச் சக்தியின்
க்கையினால் சிங்கம், பசு முதலிய பிராணிகள் உறங்குகின்றனவோ,
நம்பியே நானும் உறங்குகிறேன். சிங்கத்திற்கும் உறக்கம் வரு
. உலகத்தினிடமே பகைமை பூண்டுள்ளமையால் ஒவ்வொரு
ம் பின்னால் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டிருக்கும் சிங்க
தூங்கவே செய்கிறது. அச் சக்தியினிடம் நம்பிக்கையில்லையானால்

சில் சிங்கங்கள் தூங்கவும், வேறு சில விழித்துப் 'பாரா'ச் செ
அவை ஏற்பாடு செய்துகொள்ள வேண்டியிருக்கும். எந்தச் ச
நம்பிச் சிங்கம், புலி, ஓநாய் முதலிய துஷ்டப் பிராணிகளும் உ
கின்றனவோ அதே சிருஷ்டியெங்கும் வியாபித்துள்ள சக்தியின்
நானும் தூங்கிக்கொண்டிருக்கிறேன். தாயின் மடியில் குழந்தை
யற்றுத் தூங்குகிறது. அப்பொழுது உலகின் சக்கரவர்த்தியே
வதுபோல்தான் அது தூங்குகிறது. நீங்களும் நானும் சிருஷ்டி யெ
வியாபித்துள்ள அத் தாயின் மடியில் இதேவகையில் அன்பும் நம்ப
யும் அறிவுங்கொண்டு உறங்கும் பயிற்சியைப் பெறவேண்டும். எச
யின் அடிப்படையில் என் இவ் வாழ்க்கை முழுமையும் நடந்து
டிருக்கிறதோ, அதை நான் மேன்மேலும் நன்கு புரிந்துகொள்ள
டும்; அச் சக்தி எனக்கு மேன்மேலும் நன்கு விளங்கவேண்டும்.
சக்தியில் எனக்கு எவ்வளவு அதிக நம்பிக்கை தோன்றுமோ அவ்
அதிகப் பாதுகாப்பு எனக்கு ஏற்படும். எனக்கு அந்தச் சக்
அனுபவம் எந்த அளவுக்கு அதிகமாகுமோ அந்த அளவுக்கு
வளர்ச்சியுறுவேன். இப் பதின்மூன்றும் அத்தியாயத்தில் இதன் வ
கிரமமும் சிறிது காட்டப்பட்டிருக்கிறது.

## (73) பரம்பொருளின் சக்தியை மேன்மேலும் உணர்த

உடலில் வீற்றிருக்கும் ஆன்மாவைப்பற்றிய நினைவு மன
எழாதிருக்கும்வரை மனிதன் சாதாரணக் காரியங்களிலேயே ஆழ்ந்
கிறான். பசி எடுத்தால் சாப்பிடுவதும், தாகம் தோன்றினால் நீர் அ
வதும், தூக்கம் வந்தால் தூங்குவதுமாய், இதற்குமேல் எதுவும்
அறியாதிருக்கிறான். இவைகளுக்காகவே அவன் சண்டையிட்டு,
களைப் பெறும் ஆசையையே மனத்தில் கொண்டிருக்கிறான். இவ்
இவ்வுடலைப் பற்றிய காரியங்களிலேயே அவன் மூழ்கிக்கிடக்கி
வளர்ச்சியோ இதற்குப் பிறகுதான் தொடங்குகிறது. இதுவரை ஆ
பார்த்துக்கொண்டே இருந்துவருகிறது. கிணற்றின் பக்கம் தவ
செல்லும் குழந்தையின்பின் தாய் மிகுந்த எச்சரிக்கையுடன் நி
கொண்டிருப்பதைப் போல, ஆன்மா நம்மை உன்னிப்புடன் கவனி
கொண்டிருக்கிறது. அது எல்லாக் காரியங்களையும் அமைதியாய்ப்
துக்கொண்டே இருக்கிறது. இது சாட்சியாய் நின்று பார்க்கும் (उप
உபத்ரஷ்டா) நிலையென்று சொல்லப்பட்டுள்ளது.

இந்நிலையில் ஆன்மா பார்த்துக்கொண்டிருக்கிறதேயன்றி ஒ

பதில்லை. ஆனால் இதுவரை தன்னை உடலென்றே கருதி எல்லாக் பகளையும், எல்லா விவகாரங்களையும் செய்துவந்த இந்த ஜீவன் விழித்துக் கொள்ளுகிறது. 'நான் மிருகத்தைப் போலல்லவோ கை நடத்திவருகிறேன்!' என்ற அறிவு அதற்கு உதிக்கிறது. இவ்வாறு சிந்திக்கத் தொடங்கும்பொழுது நீதியின், நெறிமுறை அடிப்படை ஆரம்பமாகிறது. அப்பொழுது அது ஒவ்வொரு விஷயும், 'இது சரியா, தவறு?' என்று ஆராய்கிறது; விவேகத்தைப் படுத்தத் தொடங்குகிறது; அதன் பகுத்துணரும் சக்தி தலையெடுக் ; மனம் போனவாறு காரியம் செய்துவந்தது நிற்கிறது. இஷ்டம் இருந்துவந்த இயக்கம் இப்பொழுது போய்விடவும் அடக்கம் ஏற் து. ஜீவன் இவ்வாறு நீதியின் புலத்தில் புகும்பொழுது ஆன்மா து நின்று பார்த்துக் கொண்டிராது. அது உள்ளுக்குள் ஆதர தெரிவிக்கும். "நல்லது! பேஷ்!" என்ற துவனி உள்ளே எழும். ாழுது அது வெறும் பார்வையாளனாய் இருந்ததுபோய் ஆதர ர (अनुमन्ता-அநுமந்தா) ஆகிவிட்டது.

சித்த பரதேசியொருவன் வாயிலில் வந்து கூவ, நீங்கள் நீங்களே டுவதற்கு வைத்திருந்த சோற்றை அவனுக்கு எடுத்துப் போட்டு பிறகு, இரவில் உங்களுக்கு உங்கள் செயலின் நினைவு வரும் து மனத்திற்கு எவ்வளவு இன்பம் ஏற்படுகிறது என்பதைப் கள். உள்ளுக்குள்ளிருந்து ஆன்மாவின் "நல்ல காரியம் செய் ' என்று எழும் துவனி காதுகளில் ஒலித்துக்கொண்டேயிருக்கும். குழந்தையின் முதுகைத் தடவிக்கொடுத்து, "நல்ல காரியம் செய் குழந்தாய்!" என்று சொல்லும்பொழுது அவனுக்கு உலகத்தையே ந வெகுமானம் அளித்துவிட்டதுபோன்ற இன்பம் ஏற்படுகிறதே, ாறே நம் உள்ளத்தில் எழுந்தருளியுள்ள பரம்பொருளின், "பேஷ் ாய்!" என்ற இச் சொற்கள் நமக்கு ஊக்கமளிக்கும். இத்தகைய தில் ஜீவன் இன்ப வாழ்வை விட்டு நெறியான வாழ்வில் காலை நிற்கிறது.

தற்கடுத்தபடியில் மனிதன் நெறியான வாழ்வில் கடமையைப் ன் மூலமாய்த் தன் மனத்தின் அழுக்கு முழுவதையும் கழுவ கிறான். ஆனால் இதைச் செய்துகொண்டே வருகையில் இதனால் புறும் சமயமொன்று வருகிறது. அப்பொழுது ஜீவன், "ஏ பக ', என் முயற்சிகள், என் சக்திகள் இப்பொழுது எல்லையைத் டுவிட்டன. எனக்கு அதிக பலம் கொடுங்கள்!" என்று வேண்டத் ங்குகிறது. மனிதன் தான் எவ்வளவுதான் முயற்சி செய்தபோதி

லும் தன் ஒருவனாலேயே வெற்றி பெற்றுவிடவியலாது என்பதை
ரும்வரை பிரார்த்தனையின் இரகசியம் அவனுக்குப் புரிவதற்கில்லை
சக்தியனைத்தையும் உபயோகித்தும் பற்றாமல் போகும்பொழுது
தோய்ந்த மனத்துடன் திரௌபதியைப் போலப் பரம்பொருளை
அழைக்க வேண்டும். ஆண்டவன் கிருபையின், உதவியின்
இடையறாது பெருகிக்கொண்டே இருக்கிறது. தாகம் எடுத்த
உரிமையுணர்வுடன் அந்தக் கருணைவெள்ளத்தைக் கொண்ட
பருகலாம்; குறையுள்ளவர்கள் கேட்டுக்கொள்ளலாம். இத்தகைய
இம் மூன்றும் கட்டத்திலுள்ளது. இப்பொழுது பரம்பொருள்
அண்மையில் வருகிறது; வெறும் புகழுரை பகரவன்றி கைகொடு
வருகிறது.

முதலில் ஆண்டவன் தொலைவில் நின்றிருந்தான். ஆசி
"கேள்விக்கு விடையெழுது" என்று சொல்லிவிட்டு விலகி நிற்
போல ஜீவன் போகமயமான வாழ்வில் ஆழ்ந்துழலும்வரை பரம்
எட்டி நின்றுகொண்டு, "சரிதான், உன் ஆட்டத்தை நடத்து"
சொல்லுகிறது. பிறகு ஜீவன் நீதிப் புலத்தில் புகுகிறது. அப்பொ
பரம்பொருளால் வெறும் நடுவு நிலைமை வகிப்பதோடு நிற்கமுடிவ
ஜீவனின் மூலமாய் நல்ல காரியம் நடைபெறுகிறது என்பதைக்
தும் பகவான் மெல்ல எட்டிப் பார்த்து "பேஷ்!" என்று சொல்
இவ்வாறு நல்ல காரியங்கள் நடந்துகொண்டே வருவதனால் சித்
மேலே படிந்திருந்த புழுதி நீங்கி உள்ளழுக்கைக் கழுவவேண்டிய
வருகையில், அவனது முயற்சிகளெல்லாம் ஒருசேர அவன் பரம்பொ
உதவிக்கு அழைக்கையில் அது, "இதோ வந்தேன்" என்று ஓ
யும் வருகிறது. பக்தனுடைய உற்சாகம் குறைந்ததும் ஆண்
அங்கே வந்து நின்றுவிடுகிறான். உலகத்தின் ஊழியனான சூரிய
னன் உங்கள் வாயிலில் எப்பொழுதும் நின்றுகொண்டிருக்கிறான்.
மூடியிருந்தால் அதை உடைத்துக்கொண்டு அவன் உள்ளே
டான். ஏனெனில், அவனோர் ஊழியன், வேலையாள். அவன் எ
னின் மரியாதையை உணர்ந்து நடப்பவன்; அவன் கதவைத்
மாட்டான். உள்ளே எஜமானன் தூங்கிக்கொண்டிருந்தாலும்
னென்ற பணியாள் வாயிற்படிக்கு வெளியே இருப்பான்; க
சிறிது திறந்தால் போதும், தன் முழு ஒளியுடன் உள்ளே
இருளை அகற்றிவிடுவான். பரம்பொருளின் நிலையும் இப்படிப்ப
என்று உணருங்கள். அதனிடம் உதவி கோருவீர்களானால் அ
கைகளாலும் உதவக் கட்டாயம் வருமென்று நம்புங்கள். பீமா

யில் (பண்டரிபுரத்தில்) இடையில் ஊன்றிய கைகளுடன் அவன்
பொழுதும் வரச் சித்தமாய் நிற்கிறான்.

"'கையை மேலே எழுப்பி, 'விட்டலா, காப்பாய்' என்பாய்"*

று துகாராம் முதலியவர்கள் வர்ணித்திருக்கிறார்கள். மூக்கைத் திறந்
ால் காற்று உள்ளே புகுந்துவிடுகிறது. கதவைத் திறக்க வேண்டியது
, ஒளி உள்ளே நுழைந்துவிடுகிறது. காற்று, ஒளி ஆகியவற்றை
ரணமாய்க் கூறுவதும் எனக்குப் போதுமானதென்று தோன்ற
லை. அவைகளைவிட ஆண்டவன் அதிக அண்மையில் இருப்பவன்,
க ஆவலுள்ளவன். அவன் பார்வையாளனாய், ஆதரவாளனாய் இல்
ு எல்லாவகையிலும் (भर्ता-பர்த்தா) தாங்குபவனாயிருக்கிறான். மனதி
அழுக்கைப் போக்கும்பொருட்டு வேறு புகலின்றி நாம், "என்
ர் உன் கையிலிருக்கிறது, ஆண்டவனே! காப்பாய்" என்றும்,
யே எனக்கு உதவுவோன்; உன் ஆதரவு எனக்குத் தேவை" என்
வேண்டும்பொழுது அக் கருணாமூர்த்தி எவ்வாறு விலகிநிற்பான்?
சகாயனான அப் பகவான், நம் குறையைப் பூர்த்தி செய்யும் அப்
ு ஓடி வருகிறான். அப்பொழுது ரயிதாசின் தோலைக் கழுவுகிறான்,
ப்புக்கார ஸஜனின் மாமிசத்தை விற்கிறான், கபீரின் துணியை நெய்
ன், ஜனாபாயுடன் இயந்திரத்தில் மாவு அரைக்கிறான்.

இதற்கடுத்தபடி, பரம்பொருளின் கிருபையைப் பெற்றதனால்
த்திலிருந்து கிட்டிய பயனையும் தான் ஏற்றுக்கொள்ளாது அதற்கே
த்துவிடலாகும். இந் நிலையில் ஜீவன் பரம்பொருளிடம், "உன்
ன நீயே அனுபவி" என்று சொல்லுகிறது. நாமதேவர் கல்லுளி
களைப்போல், "பிரபுவே, நீர் பாலைக் குடித்தால்தான் ஆயிற்று"
று சொல்லிக்கொண்டே உட்கார்ந்துவிட்டாராம். எவ்வளவு இனிய
ர்ப்பம்! அவர் கர்மங்களனைத்தின் பயனை பாலைப் பகவானுக்கு
ப்பணம் செய்கிறார். இவ்வாறு வாழ்க்கையின் சொத்துக்களையெல்
், சம்பாத்தியங்களையெல்லாம், எந்தப் பரம்பொருளின் கிருபையி
அவை கிடைத்தனவோ, அதற்கே அர்ப்பணம் செய்துவிடுகிறார்.
புத்திரர் சுவர்க்கத்தில் அடியெடுத்துவைக்க விருந்தபொழுது அவ
ன் வந்த நாய் உள்ளே அனுமதிக்கப்படவில்லை. அப்பொழுது அவர்
வாழ்க்கையின் புண்ணியப் பயன்களனைத்தையும், சுவர்க்கத்தையும்
கணத்தில் விட்டுவிட்டார். இவ்வாறே பக்தனும் எல்லாப் பயன்
யும் பரம்பொருளுக்கு அளித்துவிடுகிறான். உபத்ரஷ்டா, அநுமந்தா,

* उभारूनि बाहे। विठो पालवीत आहे

பர்த்தா என்ற வகைகளி லிருந்துவந்த பரம்பொருள் இப்பொ
(भोक्ता-போக்தா) நுகர்வோர் ஆகிவிடுகிறது. ஜீவன் இப்பொ
எய்தியிருக்கும் நிலையில் பரம்பொருளே இவ்வுடலினின்பங்களை
தாகிறது.

இதன்பிறகு சங்கற்பம் அல்லது தீர்மானம் செய்வதையே
விடல் வேண்டும். கர்மத்தில் மூன்று படிகள் வருகின்றன. மு
நாம் சங்கற்பம் செய்கிறோம்; பிறகு காரியம் செய்கிறோம்; அதன்
பயன் கிட்டுகிறது. கர்மத்திற்குக் கடவுளின் உதவியால் க
பயனையும் அவருக்கே அர்ப்பணம் செய்தாகிவிட்டது. கர்மம்
வரும் கடவுள், பயனை நுகர்வோரும் கடவுளே! இப்பொழுது அக்
தைச் சங்கற்பம் செய்பவர் அல்லது தீர்மானிப்பவரும் கடவுள
இருக்கட்டுமே! இவ்வாறு கர்மத்தின் தொடக்கம், இடைநிலை,
ஆகிய எல்லாம் கடவுள் மயமாகிவிடட்டுமே! ஞானதேவர் செ
யிருக்கிறார்:

"தோட்டக்காரன் திருப்பிய திசையில் சென்றது ஒன்றும் பே
நாட்டம் வேறு இல்லாத நீரைப்போல் நாம் ஆய்விடுவோம்"

தோட்டக்காரன் பாய்ச்சவிரும்பும் பக்கம் நீர் பதில் பேசாமல் ஓடு
தோட்டக்காரன் இஷ்டம்போல் புஷ்பச் செடிக்கோ பழ மரத்தி
நீரைப் பாய்ச்சி வளர்க்கிறான்; இவ்வாறே என் கையினால் நடை
வேண்டிய காரியங்களையும் கடவுளே முடிவுசெய்துகொள்ளட்டும்.
சித்தத்தின் சங்கற்பங்களனைத்தின் பொறுப்பையும் நான் அவரி
ஒப்புவித்துவிட்டேன். நான் எல்லாச் சுமைகளையும் குதிரையின
ஏற்றி விட்டபிறகு சிலவற்றை மட்டும் எதற்காகத் தலையில் சு
கொண்டிருக்கவேண்டும்? அவைகளையும் குதிரையின்மீதே ஏன் ஏ
கூடாது? என் தலையில் மூட்டையை வைத்துக்கொண்ட போ
நான் குதிரையின்மீது அமரும்பொழுது என் தலைச் சுமையின் பா
குதிரையைத்தானே பொறுக்கும்? ஆகையால், எல்லாச் சுமையை
அதன் முதுகில் ஏற்றிவிட்டாலென்ன? இவ்வாறு வாழ்க்கையின் எ
அமளி துமளிகளும், மேன்மை தாழ்வுகளும், வளர்ச்சியும்—எல்
கடவுள் மயமாய் இறுதியில் ஆகிவிடுகின்றன. என் வாழ்க்கையில்
மகேசுவரன் (பெருங்கடவுள்) ஆகிவிடுகிறார். இவ்வாறு வள
கொண்டே செல்லும் வாழ்க்கை முழுதும் பரம்பொருள் மயமாகி

* माळियें जेउतें नेलें। तेउतें निवांत चि गेलें
तया पाणिया ऐसें केलें। होआवें गा

ı. உடலின் திரைமட்டும் எஞ்சி நிற்கிறது. அது அகலும் ழுது ஜீவனும் சிவனும், ஆன்மாவும் பரமாத்மாவும் ஒன்றாகிவிடு னர்.

இவ்வாறு—

"उपद्रष्टानुमंता च भर्ता भोक्ता महेश्वरः।"

(உபத்ரஷ்டானுமந்தா ச பர்த்தா போக்தா மஹேஶ்வர:)

"உண்பன யாவையு முண்கின் றானுமெய்க்
கண்கொடெப் பொருளையுங் காண்கின் றானுமென்
னண்பவெப் பொருட்குமோத் திருக்கு நாதனு
மெண்செய்திவ் வுடம்பிலே நின்ற வீசனே."

புநிவில் நாம் பரம்பொருளை மேன்மேலும் அதிகமாய் அனுபவிக்க ாடும். ஆண்டவன் முதலில் நடுவு நிலையிலிருந்துகொண்டு பார்க் ன். பிறகு நெறியான வாழ்க்கை ஆரம்பமானதும், நம்மால் நல்ல யங்கள் நடைபெறத் தொடங்கும்பொழுது அவன் நமக்கு உற்சாக டுகிறன். பிறகு சித்தத்தின் நுண்ணிய அழுக்கைக் கழுவிவிடும் ருட்டு தன் முயற்சிகள் போதாதிருப்பதைக் கண்ட பக்தன் கூவி ழக்கையில் அந்த ஏழைபங்காளனை ஆண்டவன் உதவ ஓடிவரு ன். அதன் பிறகு பயனையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்து னையே நுகர்வோனாகவும், இறுதியில் சங்கற்பங்கள் அனைத்தையும் னுக்கே உரிமையாக்கி வாழ்க்கை முழுவதையும் ஆண்டவன் மய ச் செய்துவிடவேண்டும். இதுவே மனிதன் இறுதியில் எய்த வேண் து. கர்மயோகம், பக்தியோகம் என்ற இரண்டு சிறகுகளைக் கொண்டு க்கும் சாதகன் இவ்விறுதி இலட்சியத்தில் போய்ச் சேர வேண்டும்.

## 4) பணிவு, பெருமையின்மை முதலியவற்றைப் பேணுதல்

இவைகளையெல்லாம் சாதிப்பதற்கு நீதிமயமான, நெறியான சாதனை ன்ற உறுதியுள்ள அஸ்திவாரம் இன்றியமையாதது. சத்திய-அசத் ங்களைப் பகுத்துணர்ந்து சத்தியத்தையே எப்பொழுதும் கடைப் க்க வேண்டும். சார-அசாரங்களை ஆய்ந்துணர்ந்து சாரத்தையே கவேண்டும்; சிப்பியின் ஓட்டை எறிந்துவிட்டு அதனுள்ளேயுள்ள தைக்கொள்ள வேண்டும். இவ்வாறு வாழ்க்கையை ஆரம்பிக்க ண்டியது. பிறகு சொந்த முயற்சி, ஆண்டவனின் கருணை ஆகிய றின் உதவியால் மேலே ஏறிச்செல்லவேண்டும். இச் சாதனைகளனைத் வம் நாம் உடலிலிருந்து ஆன்மாவை வேறாய் உணரும் பயிற்சி பெற் ருப்போமாயின் நமக்கு அதனால் பெருத்த உதவி ஏற்படும். இத்த

கைய சமயத்தில் எனக்கு ஏசுநாதரின் தியாகம் நினைவுக்கு வருவ
அவரை ஆணியை அடித்து மாய்த்துக்கொண்டிருந்தார்கள்.
பொழுது அவர் வாயிலிருந்து, "கடவுளே, இவ்வளவு வேத
எதற்காக அளிக்கிறீர்?" என்ற வார்த்தைகள் வெளிவந்த
ஆனால் உடனே ஏசுநாதர் தம் மனத்தராசை நிறுத்திப் பி
கொண்டு, "சரி, உம் இஷ்டம், விருப்பம் எதுவோ நடக்கட்டும்;
களை மன்னித்துவிடும்! இவர் தாம் செய்வது என்னவென்றே அ
ரில்லை" என்றாராம். ஏசுநாதரின் இச்செயலில் பெரிய இர
அடங்கியுள்ளது. உடலிலிருந்து ஆன்மாவை எந்த அளவுக்குப்
வேண்டும் என்பதை இது நன்கு காட்டுகிறது. எவ்வளவு
நாம் வழி நடந்தாக வேண்டும், எவ்வளவு தூரம் நடக்க முடியும் எ
ஏசுநாதரின் வாழ்க்கையிலிருந்து தெரிந்து விடுகிறது. உட
உறையைப்போல், பழத்தின் தோலைப் போல் பிரியும் அளவுக்
வழி போகிறது. ஆன்மாவை உடலிலிருந்து வேறுக்கும் எண்ண
மனத்திலெழும்போதெல்லாம் ஏசுநாதரின் இவ்வாழ்க்கை, இக்
என் கண்ணெதிரில் வந்து நிற்கிறது. உடல் வேறு, நான் வேறு
இரண்டிற்கும் இடையேயுள்ள தொடர்பை அறவே இறுமாறு செய்த
ஏசுநாதரின் வாழ்க்கை ஓர் உதாரணமாகும்.

சத்தியத்தையும், அசத்தியத்தையும் பகுத்துணரும் வி
நமக்கு ஏற்படும்வரை உடலையும் ஆன்மாவையும் வேறாய் உ
சாத்தியமல்ல. இந்த விவேகம், இந்த ஞானம் நம் நரம்பு ஒவ்
றிலும் வியாபித்துவிட வேண்டும். ஞானம் என்பதற்கு நாம்
என்று பொருள் கொள்கிறோம். ஆனால் அறிவினால் உணருதல்
மாகாது, வாய்க்குள் சோற்றை இட்டுக்கொள்ளுதல் உணவு அ
தாகாது. வாயில் போன சோறு மெல்லப்பட்டு, தொண்டையின் வ
வயிற்றுக்குச் சென்று, ஜீரணமாகி, அதன் இரசமான இரத்த
லெங்கும் பரவிப் புஷ்டி ஏற்படவேண்டும். அப்பொழுதுதான்
உண்மை உணவாகும். அவ்வாறே வெறும் அறிவினால் இயக்கப்
ஞானத்தினால் பயனெதுவுமில்லை. அந்த ஞானம், அந்த
வாழ்க்கை முழுவதிலும் பரவி உள்ளத்தையும் ஊடுருவிப் பாயவேண்
நம் கைகள், கால்கள், கண்கள் ஆகிய உறுப்புக்களின் மூலம்
ஞானம் வெளியாக வேண்டும். எல்லா ஞானேந்திரியங்களும் க
திரியங்களும் எல்லாக் காரியங்களையும் சிந்தனையுடனேயே செய்யும்
தோன்றவேண்டும். ஆகையால் இப் பதின்மூன்றும் அத்தியாய
பகவான் ஞானம் என்பதை மிகவும் சீரிய முறையில் விளக்கியிருக்

நப்பிரக்ஞனது இலட்சணங்களைப் போன்றே இந்த ஞானத்தின்
சணங்களும் இருக்கின்றன.

"பணிவொடு, கர்வமின்மை, அஹிம்சைநேர் மைசகிப்பு"
பிய இருபது குணங்களைப் பகவான் கூறியிருக்கிறார். இக் குணங்
ஞானமெனப்படும் என்று சொல்லுவதோடு அமையாது, இவை
ங்கு மாருயுள்ளவை அஞ்ஞானமாகுமென்றும் தெளிவாய்ச் சொல்லப்
ருக்கிறது. ஞானத்திற்குச் சாதனங்களென்று கூறப்பட்டிருப்ப
ற்கே ஞானமென்று பெயர். "நற்குணங்களையே நான் ஞான
க் கருதுகிறேன்" என்று சோக்ரதீதர் சொல்லுகிறார். சாதனமும்
தியமும், சருவியும் குறிக்கோளும் ஒன்றே.

கீதையின் இவ்விருபது சாதனங்களை ஞானதேவர் பதினெட்
கி விட்டார். அவர் இவைகளை மிகுந்த உற்சாகத்தோடு மனப்பூர்வ
வர்ணித்திருக்கிறார். இக் குணங்களுடன் தொடர்புள்ள சுலோகங்
ஐந்தே பகவத் கீதையிலுள்ளன. ஆனால் ஞானதேவரோ தம்
னேச்வரி'யில் எழுநூறு ஓவிகள் எழுதியிருக்கிறார். சமூகத்தில் நற்
ங்கள் வளரவேண்டும், சத்தியரூபியான பரம்பொருளின் மகிமை
வேண்டும் என்று அவர் பேராவல் கொண்டிருந்தவர். இக் குணங்
வர்ணிக்குமுகத்தான் அவர் தம் அனுபவங்கள் அனைத்தையுமே
த ஓவிகளில் நிரப்பிவிட்டார். மராத்தி பாஷைக்காரர்களுக்கு அவர்
வகையில் செய்துள்ள உபகாரத்தை மதிப்பிடவியலாது. ஞான
ரது ஒவ்வொரு மயிர்க்காம்பிலும் இக் குணங்கள் பரவியிருந்தன.
மையை எவனோ சவுக்கினால் அடிக்க, ஞானதேவர் முதுகு புடைத்து
டதாம்! எல்லா உயிர்களிடத்திலும் அவருக்கு இவ்வளவு ஒருமைப்
ருந்தது. ஞானதேவரது இத்தகைய கருணைமயமான உள்ளத்தி
ந்து 'ஞானேச்வரி' தோன்றியிருக்கிறது. இக்குணங்களை அவர்
சி ஆராய்ந்திருக்கிறார். அவர் விவரித்திருக்கும் குணங்கள் நாம்
த்து, சிந்தித்து, உள்ளத்தில் பதித்துக்கொள்ளத் தக்கவை. ஞான
ரின் இவ்வினிய மொழியைச் சுவைக்க முடிந்ததற்காக நான்
னைப் பாக்கியவானென்று கருதுகிறேன். அவரது இனிய மொழி
வாக்கில் வந்து அமரும்பொருட்டு நான் மீண்டும் பிறவி எடுக்க
னும் அதை நான் செய்த பெரும் பேறென்றே கருதுவேன். நிற்க.
ன்மேலும் தம்மை வளர்ச்சியுறச் செய்துகொண்டே, ஆன்மாவை
லிலிருந்து வேறாய் உணர்ந்துகொண்டே, எல்லோரும் தம் வாழ்க்
யை கடவுள் மயமாக்க முயலவேண்டும்.

ஞாயிறு, 15-5-'32

## பதினான்காம் அத்தியாயம்

# குண எழுச்சியும் குணச் சிதைவும்

### (75) இயற்கைக்குச் சிகிச்சை

சகோதரர்களே! இன்றைய பதினான்காம் அத்தியாயம் ஒ
யில் சென்ற அத்தியாயத்தின் பூர்த்தியே ஆகும். உண்மையில்
வுக்கு எதையும் செய்ய வேண்டிய அவசியமே இல்லை. அது
பூர்ணமானது. ஆன்மாவின் போக்கு இயற்கையாக மேல்நோக்கு
ஆனால் ஏதேனும் ஒரு பொருளுடன் பளுவான பொருளை
சேர்த்துக் கட்டுவதனால் முதல் பொருள் கீழே வலிக்கப்பட்டு
போவதைப்போல உடலின் பளு ஆன்மாவைக் கீழே இழுத்துக்கொ
போகிறது. சென்ற அத்தியாயத்தில் ஏதேனும் ஓர் உபாய
உடலையும் ஆன்மாவையும் பிரிக்கக்கூடுமானால் நாம் முன்னேற
என்பதைக் கண்டோம். இவ்விஷயம் சிரமமாயிருந்தபோதிலும்
லிருந்து பெரும் பயன் விளையும். ஆன்மாவின் காலில் பூட்டப்பட
உடலென்ற இவ்விலங்கை நாம் உடைத்துவிட முடிந்தால்
இன்பம் பெறுவோம். பிறகு மனிதன் உடலின் துயரினால்
புறமாட்டான்; அவன் சுதந்திரனாகிவிடுவான். இந்த உட
பொருள்மீது மனிதன் வெற்றிகொண்டு விடுவானாயின் உலகில்
மீது யார் அதிகாரம் செலுத்தமுடியும்? தன்னை ஆளுவோன் உ
சக்கரவர்த்தியாகி விடுகிறான். ஆகையால் ஆன்மாவின்மீது உட
ஏற்பட்டுள்ள அதிகாரத்தை அகற்றிவிடு. உடலைப் பற்றிய இவ்
துன்பங்களெல்லாம் வெளியிலிருந்து வந்தவை. நமக்கும் அவை
கும் உறவு கிடையாது. ஆன்மாவுக்கும் அவைகளுக்கும் எவ்
சம்பந்தமும் இல்லை.

இவ்வெல்லா இன்பதுன்பங்களையும் எந்த அளவுக்கு உடலில்
வேறாக்கவேண்டும் என்ற கருத்தை நான் ஏசுநாதரின் உதாரணத்
தெரிவித்தேன். உடல் தகர்ந்துபோகும்பொழுதும் எவ்வாறு மன
அமைதியாய், ஆனந்தமயமாய் வைத்துக்கொள்ளக்கூடும் என்
அவர் காட்டிவிட்டார். ஆனால் இவ்வாறு உடலை ஆன்மாவிலி
பிரித்தல் விவேகத்தின் காரியமாயிருப்பதைப்போலவே, அது பு
கத்தின் காரியமாயும் உளது.

"விவேகத்துடன் வைராக்யத்தின் பலம்"*

என்று துகாராம் கூறியிருக்கிறார். விவேகம், வைராக்யம்

* विवेकासहित वैराग्याचें बळ

டும் தேவை. வைராக்யமே ஒருவகை திதிக்ஷை (புலனடக்கம்)
ம். இப்பதினான்காம் அத்தியாயத்தில் புலனடக்கத்தை எதில்
வேண்டும் என்பது சொல்லப்பட்டிருக்கிறது. படகைச் செலுத்
செயலைத் துடுப்புகள் செய்கின்றன; ஆனால் திசையைப் படகோட்டி
கிறான். துடுப்புகள், படகோட்டி ஆகிய இரண்டும் தேவையா
ன. அவ்வாறே உடலின் இன்ப துன்பங்களிலிருந்து ஆன்மாவைப்
பதற்கு விவேகம், புலனடக்கம் ஆகிய இரண்டுமே தேவையாகும்.
வைத்தியன் மனிதனது இயற்கைத் தன்மையைப் பார்த்து மருந்து
பதைப்போல பகவான் பதினான்காம் அத்தியாயத்தில் இயற்கை
வதையும் பரிசோதித்து வெவ்வேறாய்க் கூறிட்டு இன்னின்ன நோய்
க்கின்றனவென்று சொல்லியிருக்கிறார். இதில் இயற்கை மிகவும்
ய்ப் பாகுபாடு செய்யப்பட்டிருக்கிறது. அரசியல் சாத்திரத்தில்
பாடு செய்தல் அல்லது கூறிடுதலைப் பற்றிய ஒரு பெரிய சூத்திரம்
டு. எதிரிலுள்ள விரோதியின் கூட்டத்தைக் கூறிட்டுப் பகுத்து
முடியுமானால் அதை விரைவில் வெற்றிகொண்டு விடலாம். பகவான்
கே இவ்வாறே செய்திருக்கிறார். நான், நீங்கள், எல்லா உயிர்கள்,
ல சாசரங்கள் ஆகிய அனைத்தின் இயற்கையிலும் மூன்று குணங்
க்கின்றன. ஆயுர்வேதத்தில் கபம், பித்தம், வாதம் என்பவை
ல்லப்படுவதைப் போல சத்துவம், இராசதம், தாமதம் என்ற முக்
ங்கள் பிரகிருதியில் நிறைந்திருக்கின்றன. எல்லாவிடங்களிலும்
ணங்களென்ற இச்சரக்கே நிரம்பியிருக்கிறது. ஓர் இடத்தில்
றவாயிருந்தால் வேறோர் இடத்தில் அதிகமாயிருக்கும், இவ்வளவு
ர வித்தியாசம். இம்மூன்றிலிருந்தும் ஆன்மாவைப் பிரித்துவிடு
மாயின் உடலிலிருந்து ஆன்மாவைப் பிரித்துவிடலாம். உடலி
ந்து ஆன்மாவைப் பிரிப்பதற்குள்ள முறையே இம் முக்குணங்களைச்
தித்து இவற்றை வெற்றி கொள்வதற்கும் அமையும். புலனடக்கத்
மூலம் ஒவ்வொரு பொருளையும் வென்று இறுதியில் முக்கியப்
ருளை அணுகவேண்டும்.

## (76) தமோகுணத்திற்கு மருந்து உடலுழைப்பு

முதலில் நாம் தமோகுணத்தை எடுத்துக்கொள்வோம். தற்காலச்
க நிலையில் தமோகுணத்தின் பயங்கரமான விளைவுகளைக் காண்
றோம். இதன் முக்கிய விளைவு சோம்பல். இதில்ருந்தே தூக்கமும்
மறதியும் தோன்றுகின்றன. இம் மூன்றையும் வென்றுவிடுவோ
யின் தமோகுணத்தை வென்றதாகவே கொள்ளலாம். இவற்றுள்

சோம்பல் மிகவும் கொடிது. மிகமிகச் சிறந்த மனிதரும் சோம்
வீணாகிவிடுகின்றனர். சமூகத்தின் சுகம், அமைதி ஆகிய அ
யும் அழித்துத் துடைத்துவிடும் சத்துரு இது. இது சிறியோ
பெரியோர்வரை எல்லோரையும் கெடுத்துவிடுகிறது. இச் சத்
லோரையும் பற்றிக்கொண்டிருக்கிறது. இது நம்மைத் தன்
படுத்துவதற்காகச் சமயம் பார்த்துக்கொண்டே இருக்கிறது.
சந்தர்ப்பம் கிடைக்க வேண்டியதுதான், உடனே உள்ளே நு
விடுகிறது; உணவைச் சிறிது அதிகமாய்க் கொண்டதும் நம்மை
கும்படி நிர்ப்பந்திக்கிறது. சிறிது அதிகம் படுத்துவிட்டோமானா
களில் சோம்பல் நிரம்பி வழியத்தொடங்குகிறது. இதை முறிய
வரை மற்ற முயற்சிகளனைத்தும் வீணே. ஆனால் நாமோ
யிருக்கும் விஷயத்தில் ஊக்கமே காட்டுகிறோம்; சிறிது காலம்
பகலும் உழைத்து வேலை செய்து பணம் சம்பாதித்துக்கொண்டு,
சௌக்கியமாய் வாழ்க்கை நடத்தவேண்டுமென்று விரும்பு
ஏராளமாய்ப் பணம் சம்பாதித்தல் என்பதற்குப் பிற்காலத்திய சே
வாழ்க்கைக்கு ஆயத்தம் என்பஃதே பொருள். நாம் சாதாரணமாய்
மையில் ஓய்வு தேவையென்று நம்புகிறோம். ஆனால் இவ்வெண்
தவறு. நாம் சரியான முறையில் வாழ்க்கையை நடத்திவந்திரு
மானால் முதுமையிலும் வேலை செய்துகொண்டேயிருப்போம்;
அனுபவம் ஏற்பட்டிருப்பதனால் முதுமையில் அதிக உபயோகமுள்
களாகவே இருப்போம். ஆனால் அப்பொழுதுபோய் ஓய்வு பெறு
என்கிறார்களே!

சோம்பலுக்குச் சந்தர்ப்பம் சிறிதும் வாய்க்காதவாறு நாம் எ
கையாயிருந்து வரவேண்டும். நள ராஜன் எவ்வளவோ பெரி
யிருந்தும் காலைக் கழுவும்போது ஒரு சிறிய பகுதியில் நீர் படாதி
விடவே அங்கே கலி வந்து புகுந்ததென்று சொல்லுகிறார்கள்.
மிகவும் சுத்தமானவன், எல்லா வகையிலும் துப்புரவாயிருந்
ஆனால் உடலின் சிறு பகுதி நனையாதிருந்துவிட்டது. இச்சிறு
லிருந்ததனால், கலி உடனே அவனுள் புகுந்துவிட்டது. நம்மு
முழுமையுமே திறந்து கிடக்கிறது. சோம்பல் எப் பக்கத்திலி
வேண்டுமாயினும் நம்முள் புகலாம். உடல் சோம்பியவுடன் ம
அறிவும் சோம்பிவிடுகின்றன. இன்றைய சமூகம் சோம்பலின்
அமைந்துள்ளது. இதிலிருந்து எண்ணிலடங்காத் துன்பங்கள் தோ
யுள்ளன. நாம் இச் சோம்பலை அகற்றமுடியுமானால், எல்லாத் து
களையும் நீக்கமுடியாவிடினும் பெரும்பாலான துன்பங்களை நீக்க மு

ற்காலத்தில் எங்கும் சமூகச் சீர்திருத்தம் பற்றிய பேச்சாகவே
றது. சாதாரண மனிதனுக்கும் குறைந்தது இவ்வளவு சுகம்
டும், இதற்காகச் சமூக அமைப்பு இவ்வாறிருக்கவேண்டும் என்ற
க்கள் நடக்கின்றன. ஒரு புறம் மிகவும் அதிகமான இன்பமென்
மறுபுறம் மிகவும் அதிகத் துன்பமாயிருக்கிறது; ஒரு புறம்
ம் குவிந்திருக்க, மறுபுறம் ஏழைமையின் அகழிக்கு ஆழந் தெரிய
. சமூகத்திலுள்ள இவ் வேறுபாடு எவ்வாறு விலகும்? இன்றி
ாத எல்லா வசதிகளும் சுலபமாய்க் கிட்டுவதற்கு ஒரே வழிதான்
; அது சோம்பலை விட்டு அனைவரும் உழைக்கச் சித்தமாவதே.
மான துன்பம் நம் சோம்பலினாலேயே விளைகிறது. எல்லோரும்
ல் உழைக்க உறுதி செய்துகொள்வார்களானால் இத் துன்பம்
போகும்.

ஆனால் நாம் இன்று சமூகத்தில் பார்ப்பதென்ன? ஒரு புறம் துரு
ஏறி உபயோகமற்றவராய் உள்ள மனிதர்கள்; தனவந்தர்களின்
களில் துரு ஏறிக்கிடக்கிறது. அவர்கள் தம் உடலை உபயோகிப்
இல்லை. மறுபுறத்தில் உழைத்து உழைத்துத் தேய்ந்து உருகி
துரும்பாய்ப் போகிறது; சமூகம் முழுவதிலும் அனைவரும் உட
ப்பிலிருந்து தப்பவே பார்க்கிறார்கள். உயிரைக் கொடுத்து
ப்பவர்களும் சந்தோஷமாய் உழைக்கவில்லை, வேறு வழியில்லையே
தான் உழைக்கிறார்கள். படித்து அறிவுள்ளவராய் இருப்பவர்
உழைப்பிலிருந்து தப்புவதற்கு என்னென்னவோ காரணங்கள்
டுபிடிக்கிறார்கள். ஒருவர், "ஏன் வீணாக உடலுழைப்பில் காலத்
பாழாக்கவேண்டும்?" என்கிறார். ஆனால் எவரும் எதற்காக
தூங்கவேண்டுமென்றோ, சாப்பாட்டில் பொழுதைப் பாழாக்க
டுமென்றோ சொல்லுவதில்லை. பசியெடுத்தால் சாப்பிடுகிறோம்,
ம் வரும்போது தூங்கிப் போகிறோம். ஆனால் உடலுழைப்பைப்
ய பிரச்னை வரும்பொழுது, "எதற்காக வீணாக இதில் பொழுதைப்
க்க வேண்டும்? நம் உடலுக்கு எதற்காக இவ்வளவு சிரமம் தர
டும்? நாம்தான் மனத்தினால் நன்கு உழைக்கிறோமே!" என்று
லுகிறோம். ஐயா, மனத்தினால் உழைக்கிறோம் என்கிறீர்களே,
டியானால் சாப்பாடும் மனத்தினாலேயே சாப்பிட்டு, தூக்கமும்
தினாலேயே தூங்கிக்கொள்ளுங்களேன்! மானசிகத் தூக்கம்,
சிக உணவு ஆகியவற்றைச் செய்ய ஓர் உபாயம் கண்டுபிடித்துக்
ளுங்களேன்!

இவ்வாறு சமூகத்தில் இருவகை மனிதர்கள் ஏற்பட்டுவிட்டார்கள்.

ஒருவரோ, அல்லும் பகலும் உழைத்து உழைத்துச் சாகிறவர்கள்; மற்றொருவரோ, தம் கையை அசைத்து ஒரு துரும்பையும் எடுத்து இங்கிருந்து அங்கு போடாதவர்கள். என் நண்பரொருவர், "சில ருண்டங்கள், சில முண்டங்கள்" என்று சொன்னார். ஒரு புறம் (உடலில்லாத) வெறும் தலைகள், மறுபுறம் (தலையில்லாத) வெறும் உடல்கள். உடல் உழைத்துக்கொண்டேயிருக்க, தலை வெறும் சிந்தனைமட்டும் செய்து கொண்டிருக்கிறது. இவ்வாறு சமூகத்தில் இந்த இராகு-கேதுக்கள் இருவகையாய் இருக்கிறார்கள். ஆனால் இவர்கள் உண்மையிலேயே தலையும் உடலுமாய் இருப்பார்களானால் அதிலும் சிரமமிராது. அப்பொழுது 'குருடனும் முடவனும்' என்ற கதையைப்போல ஏதேனும் ஒரு ஏற்பாடு செய்து கொள்ளலாம். குருடனுக்கு முடவன் வழிகாட்ட, முடவனைக் குருடன் தோளில் சுமந்துகொண்டு நடக்கலாம். ஆனால் இத் தலைகளும் உடல்களும் வெவ்வேறு குழுக்களாய் இல்லை; ஒவ்வொரு குழுவிலும் இவை இரண்டுமே இருந்த வருகின்றன. இவ்விணைந்த தலைகளும், உடல்களும் எல்லாவிடங்களிலும் காணப்படுகின்றன. இதனால் சிரமம் மேலும் அதிகமாகி விட்டது. ஆகையால் ஒவ்வொருவரும் சோம்பலை அகற்ற வேண்டும்.

சோம்பலை அகற்றுவதற்கு உடலுழைப்புச் செய்யவேண்டும்; சோம்பலை வெல்வதற்கு இது ஒன்றே வழி. இதைச் செய்யாவிட்டால் இதற்குரிய தண்டனை இயற்கையினிடமிருந்து நமக்குக் கிடைக்காதிராது. நோய் நொடிகளின் மூலமாயும் பிற துன்பங்களாகவும் வரும் அத் தண்டனையை அனுபவித்தே தீரவேண்டியிருக்கும். நமக்கு உடல் கிடைத்திருப்பதால் நாம் உழைத்து வேலை செய்யத்தான் வேண்டும். உடலுழைப்பில் கழியும் நேரம் வீணாவதில்லை, நிச்சயமாய் அதற்குப் பயன் ஏற்படுகிறது. நல்ல ஆரோக்கியம் கிட்டுகிறது; அறிவு ஒளி பெற்று, கூர்மையுற்றுத் தூய்மையுறுகிறது. எத்தனையோ அறிவாளிகளின் கருத்துக்களில் அவர்களின் வயிற்று வலியின், தலைநோவின் சாயை தென்படுகிறது. அறிவாளிகள் வெயிலில், திறந்த வெளியில், இயற்கையின் மடியில் இருந்து வேலை செய்வார்களானால் அவர்களின் கருத்துக்களும் ஒளிபெற்றுத் திகழும். உடற் கோளாறுகளால் மனம் பாதிக்கப்படுவதைப் போல உடலின் ஆரோக்கியத்தினால் மனம் செழிக்கிறது என்பது நாம் அனுபவத்தில் உணர்ந்த விஷயம். பிற்காலத்தில், காசம் வந்த பிறகு பூவாலி அல்லது வேறு மலை ஆரோக்கிய வாசத்தலங்களுக்கு நல்ல காற்று வாங்கவும் சூரியகிரண சிகிச்சை பெறவும் போவதற்குமுன் திறந்த வெளியில் போய் மண்வெட்டி கொண்டு கொத்துதல்,

தோட்டத்திற்கு நீர் பாய்ச்சுதல், விறகு உடைத்தல் முதலியவற்றைச் செய்தால் என்ன கெட்டுப் போகுமோ!

## (77) தமோ குணத்திற்கு இன்னொரு மருந்து

சோம்பலை வெல்லுதல் என்பது ஒன்று. இரண்டாவதோ தூக்கத்தை வெல்லுதல். தூக்கம் உண்மையில் புனிதமானதே. பணிபுரிந்து களைத்துத் தூங்கும் சாது-மகாத்மாக்களின் உறக்கம் ஒரு யோகமே. இத்தகைய அமைதியான ஆழ்ந்த நித்திரை பெரிய அதிர்ஷ்டசாலிகளுக்கே வரும். தூக்கம் ஆழ்ந்ததாய் கலக்கமற்றதாயிருக்க வேண்டும். தூக்கத்தின் சிறப்பு அதில் கழியும் நேரத்தைப் பொறுத்ததல்ல; படுக்கை எவ்வளவு நீளமிருந்தது, மனிதன் அதன்மீது எவ்வளவு நேரம் கிடந்தான் என்பவைகளைப் பொறுத்ததல்ல. கிணற்றின் ஆழம் அதிகமாக ஆக அதன் நீர் அதிக இனிப்பாய், சுத்தமாய் இருக்கும். அவ்வாறே சிறிது நேரம் தூங்கினாலும் மெய்மறந்து தூங்கினால் அதற்கு நல்ல பயனுண்டு. மனத்தைச் செலுத்தி அரை மணி நேரம் படித்தல் மனத்தை நாற்புறமும் சுற்றவிட்டுக் கொண்டே மூன்று மணிநேரம் படிப்பதைவிடச் சிறந்தது. தூக்கமும் இப்படியேதான். நீண்ட உறக்கம் இறுதியில் நன்மையே பயக்குமென்று சொல்வதற்கில்லை. நோயாளி இருபத்துநான்கு மணி நேரமும் படுக்கையில் படுத்திருக்கிறான். அவன் படுக்கையை விடாது பற்றிக் கொண்டிருந்தபோதிலும் உறக்கம் அவனை அணுகுவதே இல்லை. ஆழ்ந்ததாய், கனவற்றதாய் உள்ள உறக்கமே உண்மையான உறக்கம். இறந்த பிறகு தண்டனை கள், நரக வேதனைகள் என்கிறார்களே, அவை எப்படி யிருக்குமோ தெரியாது; ஆனால் நல்ல தூக்கம் வராது கெட்ட கனவுகள் வந்துகொண்டே படுக்கையில் ஒருவன் அனுபவிக்கும் எமவாதனையின் கோரத்தைச் சொல்லவே முடியாது! வேதத்தில் ரிஷி பேரச்சமுற்ற,

"परा दु:स्वप्न्यं सुव"—பரா துஸ்வப்ந்யம் ஸுவ

'இத்தகைய கெட்ட கனவுகள் வேண்டாம், வேண்டாம்!' என்கிறார். தூக்கம் இளைப்பாறுவதற்காக ஏற்பட்டது. ஆனால் அதிலும் விதவிதமான கவலைகள் நம்மை விடாது அலட்டுமானால் நம் களைப்பும் இளைப்பும் தீருவதெப்படி?

அப்படியானால் ஆழ்ந்த, குழப்பமற்ற தூக்கம் எப்படி வரும்? சோம்பலை அகற்றுவதற்குக் கூறப்பட்ட உபாயமே தூக்கத்திற்கும் பொருந்தும். உடலிடம் இடையறாது வேலை வாங்கிக்கொண்டே யிருக்க வேண்டும். அப்பொழுது படுக்கையில் வீழ்ந்ததும் மனிதன் அடித்துப்

போட்டதைப் போல் உறங்குவான். உறக்கமென்பது ஒரு சிறு மரணமே. இத்தகைய அழகிய இனிய மரணம் வருவதற்காகப் பகலில் நல்ல முன் ஏற்பாடு செய்துகொள்ளவேண்டும். உடல் உழைத்து உழைத்து ஓடிந்து போகவேண்டும். ஆங்கிலக்கவி ஷேக்ஸ்பியர், "அரசன் தலைமீது கிரீடமிருந்தபோதிலும் அதனுள் கவலை நிறைந்திருக்கிறது!" என்று சொல்லியிருக்கிறார். அந்த அரசனுக்கு உறக்கம் வருவதில்லை. அதற்குள்ள ஒரு காரணம், அவன் உடலால் உழையாமை. விழிப்பில் உறங்குவோன், உறங்கும் நேரத்தில் விழித்துக்கொண்டிருப்பான். பகலில் அறிவையும் உடலையும் பயன்படுத்தாதிருத்தல் உறக்கமன்றி வேறென்ன? பிறகு உறங்கவேண்டிய நேரத்தில் அறிவு எதையெதையோ எண்ணி உழன்றுகொண்டிருக்க, உடலுக்கு உண்மை உறக்கத்தினால் விளையும் இன்பம் இல்லாமற்போகிறது. பிறகு நீண்ட நேரம் உறக்கத்தில் கிடக்கிறான். பெரும் பேற்றைப் பெற வேண்டிய வாழ்வை உறக்கமே உண்டு தீர்த்துவிடுமானால் பேற்றைப் பெறுவதற்குச் சந்தர்ப்பம் ஏது? வாழ்வில் பாதி உறக்கத்தில் கழிந்துவிடும்பொழுது நாம் எதைப் பெறப்போகிறோம்?

உறக்கத்திலேயே அதிகக் காலம் கழிந்து போய்விடும்பொழுது தமோகுணத்தின் மூன்றும் குறைபாடான மயக்கம் தானே ஏற்படத் தொடங்குகிறது. தூங்கிவழியும் மனிதனது சித்தம் திறமையும், விழிப்பும் கொண்டதாய் இருக்கமுடியாது. அதிலிருந்து கவனக்குறைவு தோன்றுகிறது. அதிக உறக்கத்தினால் சோப்பல் வளர, சோம்பலிலிருந்து மறதி தோன்றுகிறது. மறதி பரமார்த்தத்தை அழிக்கக் கூடியது. உலக விவகாரத்திலும் மறதியினால் தீங்கே விளைகிறது. ஆனால் நம் சமூகத்திலோ மறதி ஒரு சாதாரண விஷயமாகிவிட்டது; மறதி ஒரு பெரிய குற்றமென்றே எவருக்கும் தோன்றுவதில்லை. ஒருவரைப் போய்ப்பார்ப்பதாக ஏற்பாடுசெய்து கொள்ளுகிறோம்; ஆனால் பிறகு போவதில்லை. ஏனென்று கேட்டால், "ஐயோ, மறந்தே போய்விட்டேனே!" என்கிறோம். இவ்வாறு சொல்லுவோருக்கே தாம் பெரிய குற்றம் எதுவும் செய்துவிட்டதாய்த் தோன்றுவதில்லை; கேட்பவருக்கும் சமாதானமாகிவிடுகிறது. மறதிக்கு மருந்தே கிடையாது என்று மக்கள் நினைப்பதாய்த் தோன்றுகிறது. ஆனால் இம் மறதியினால் இகத்திலும் சரி, பரத்திலும் சரி தீமையே விளைகிறது. உண்மையில் மறதி என்பது ஒரு பெரிய நோய். அதனால் அறிவில் புரை ஓடிவிடுகிறது; வாழ்க்கையே வலிமையற்றதாகி விடுகிறது.

மறதிக்குக் காரணம் மனத்தின் சோம்பலே. மனம் விழிப்பு

ிருக்குமாயின் அதற்கு மறதி ஏற்படாது. படுத்தே கிடக்கும் மனத் தயோ மறதியென்றநோய் பற்றுதிராது. இதனுலேயே புத்த கவான் —

"पमादो मच्चुनो पदं"—பமாதோ மச்சுனோ பதம்

ன்கிருர். பிரமாதம் அல்லது மறதி என்பது மரணமே. இம் மறதியை வெல்வதற்குச் சோம்பலையும் உறக்கத்தையும் வயமாக்கவேண்டும். டலாலுழையுங்கள்; எப்பொழுதும் விழிப்புடனிருங்கள். எக் காரியத் தயும் சிந்தித்து புத்தி பூர்வமாய்ச் செய்யுங்கள். ஆலோசியாது தையும் செய்யக் கூடாது. ஒன்றைச் செய்வதற்கு முன்னும், செய்த றகும் சிந்திக்கவேண்டும். முன்னும் பின்னும் எங்கும் சிந்தனை என்ற ண்டவன் இருந்து வரவேண்டும். இவ்வாறு பழக்கம் செய்துகொண்டு ிட்டால் மறதி என்ற நோய் நீங்கிவிடும். நேரம் முழுவதையும் சரியாய் றைப்படுத்தி வைத்துக்கொள்ளுங்கள். ஒவ்வொரு கணப்பொழு ிற்கும் கணக்கு இருக்குமானுல் சோம்பல் புகுவதற்கே இடமிராது. ம்முறையில் தமோகுணமனைத்தையும் வெல்ல முயலவேண்டும்.

## (78) இரசோகுணம்—அதற்கு மருந்து சுதர்ம வரம்பு

இரசோகுணத்தை அடக்கவேண்டும். இரசோகுணமும் ஒரு கொடிய சத்துருவே. இது தமோகுணத்தின் மற்ருெரு வகையே. இவ் ாறு சொல்வதைவிட இரண்டும் ஒன்றையே குறிக்கும் இரு சொற்கள் ன்பது அதிகப் பொருத்தமானது. உடல் வெகு நேரம் தூங்கிவிட்ட ாலுல் அமளிசெய்யத் தொடங்குவதுபோல், ஓடியாடி அமளிசெய்த டலும் படுக்கையில் விழ விரும்புகிறது. தமோகுணத்திலிருந்து இரசோகுணமும் இரசோகுணத்திலிருந்து தாமோ குணமும் தோன்று ின்றன. ஒன்றிருக்குமானுல் மற்றதும் வரும் என்று கொள்ளலாம். ஒரு புறம் தீயும் மறுபுறம் கல்லும் இருக்க அவற்றினிடையில் ரொட்டி சிக்கியிருப்பதைப் போல மனிதனுக்கு முன்னும் பின்னும் இந்த இரசோ–தமோகுணங்கள் இருந்து வருகின்றன. இரசோகுணம், "இங்கே வா, உன்னைத் தமோகுணத்தினிடம் தள்ளிவிடுகிறேன்" ன்று சொல்ல, தமோகுணமோ, "என்னிடம் வந்தாயானுல் இரசோ குணத்தினிடம் தள்ளிவிடுகிறேன்" என்கிறது. இவ்வாறு இந்த இரசோ குணமும் தமோகுணமும் ஒன்றுக்கொன்று உதவுபவையாய் மனிதனைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்குகின்றன. கால்பந்து பலரிடமும் உதை வாங்குவதற்கே ஏற்பட்டதைப் போல மனிதன் வாழ்வும் இரசோ–தமோ குணங்களிடம் மொத்துறுவதிலேயே கழிகிறது.

இரசோகுணத்தின் முக்கிய இலட்சணம் பல்வேறு வகைக் காரியங்களைச் செய்வதில் ஆவலும், அமானுஷக் காரியங்கள் புரிவதில் அபாரமான ஆசையுமாகும். இரசோகுணத்தின் மூலமாய் அபூர்வமான காரியங்களின் தொடர்பு ஏற்படுகிறது; பேராசைமயமான கர்மப்பற்று உண்டாகிறது; பிறகு வாசனைகள், விகாரங்கள் ஆகியவற்றின் வேகத்தை அடக்க இயலாமற் போகிறது. இங்குள்ள மலையை உடைத்தெடுத்து அங்குள்ள அகழியைத் தூர்க்கும் விருப்பம் உண்டாகிறது. இங்கேயுள்ள கடலில் மண்ணைக்கொட்டி நிரப்பவேண்டும், அங்கேயுள்ள சகாராப் பாலைவனத்தில் நீரைப் பாய்ச்சி அதைக் கடலாக்க வேண்டும் என்ற வேகம் எழுகிறது. இங்கே சூயஸ் கால்வாயைத் தோண்டுவோம், அங்கே பனமா கால்வாயை வெட்டுவோம் என்றெல்லாம் சிரமங்களில் ஈடுபடத் தொடங்குகிறோம். உடைத்துத் தகர்த்துக் கொண்டிராதவரை சமாதானம் ஏற்படுவதில்லை. சிறிய குழந்தை ஒரு காகிதத் துண்டையெடுத்துக் கிழித்துவிட்டு, பிறகு அதைக்கொண்டு எதையேனும் செய்வதைப் போலவே இக் காரியமிருக்கிறது. இதில் இதைச் சேர்ப்போம், அதில் அதை ஆழ்த்துவோம், அதை அப்படிப் பறக்கவிடுவோம், இதை இப்படி அமைப்போம் என்று இவ்வாறே முடிவிலா விளையாட்டுகள் இரசோகுணத்தினால் தோன்றுகின்றன. பட்சி வானத்தில் பறக்கும்பொழுது நாமும் ஏன் பறக்கக்கூடாது, மீன் நீரில் வசிக்கும்பொழுது நாமும் நீர்மூழ்கி ஒன்றை அமைத்துக்கொண்டு நீரிலேயே வாழ்ந்தாலென்ன என்று மானிட உடலைப் பெற்றிருந்தும் பட்சிகள், மிருகங்கள் ஆகியவற்றுடன் போட்டியிடுவதிலேயே நமக்குத் திருப்தியுண்டாகிறது. கூண்டுவிட்டுக் கூண்டு பாய்வதிலும், பிற உடல்களின் ஆச்சரியங்களை அனுபவிப்பதிலும் மானிட உடலைத் தாங்கியிருக்கும் அவனுக்கு ஆவலுண்டாகிறது. ஒருவன், "வா, செவ்வாய் கிரகத்திற்குப் போய் அவ்விடத்திய வாழ்க்கை எப்படியிருக்கிறதென்றும், அவ்விடத்திய மக்களையும் பார்த்துவரலாம்" என்கிறான். சித்தம் சதா சுற்றிக்கொண்டே இருக்கிறது. பல்வேறு வாசனைகளென்ற பூதங்கள் நம்மைப் பற்றிக்கொண்டதுபோல் நாம் நடக்க ஆரம்பிக்கிறோம். அதது இருக்குமிடத்தில் இருப்பதைப் பார்க்க நமக்குச் சகிப்பதில்லை; கொந்தளிப்பும் குழப்பமுமாய் இருக்கவேண்டும். 'நான் இவ்வளவு பெரிய மனிதன் இருக்கும்பொழுது இச்சிருஷ்டி எப்பொழுதும்போல் இருப்பதாவது' என்று அவன் எண்ணுகிறான். உடலின் ஒவ்வொரு பகுதியிலிருந்தும், மயிர்க் காம்பிலிருந்தும் சக்தி ததும்பி வழிந்துகொண்டிருக்கும் ஒரு மல்லன் அதைப் பயன்படுத்துவதற்காகச் சுவரில் போய் மோதுவதை

ம், மரத்தைப் பிடித்துக் குலுக்குவதையும் போன்றவை அவன் செயல்ள். இரசோகுணத்திலிருந்து இம்மாதிரியான உத்வேகச் செயல்கள் ழும். அதனால் ஆட்கொள்ளப்பட்ட மனிதன் பூமியைக் குடைந்து காண்டேபோய் அதனடியிலிருந்து சில கற்களை யெடுத்து அவற்றை வரமென்றும் மாணிக்கமென்றும் வைடூரியமென்றும் அழைக்கிறான். தேவகை உற்சாகத்தில் அவன் கடலில் மூழ்கி அதனடியிலுள்ள குப்பை ளங்களை மேலே கொணர்ந்து அதற்கு முத்து என்று பெயர் வைக்கிறான்; ஆனால் முத்தில் துளை இல்லையே என்று அதில் துளையிடு றான். இனி அம் முத்துக்களை அணிவதெங்கே? அவற்றை அணிவதற் ாகத் தட்டானை அழைத்துக் காதையும் மூக்கையும் துளைக்கச் செய் றான். இந்த அமளி துமளியெல்லாம் மனிதன் ஏன் செய்கிறான்? வை அனைத்தும் இரசோகுணத்தின் விளைவுகள்.

இரசோகுணத்தின் மற்றொரு விளைவு மனிதனிடம் ஒரு நிலையான ன்மை இல்லாமற் போதல். இரசோகுணம் உடனுக்குடன் பயனை விரும்புகிறது. ஆகையால் சிறிது தடை ஏற்பட்டதும் அவன் தான் ற்ற வழியை விட்டுவிடுகிறான். இரசோகுணமுள்ள மனிதன் எப் பொழுதும் இதை ஏற்பதும், அதைத் துறப்பதும் என்று செய்து கொண்டே யிருப்பான். அவன் ஏற்கும் விஷயங்கள் ஒவ்வொரு நாளும் மாறிக்கொண்டேயிருக்கும். இதன் விளைவு இறுதியில் அவன் கையில் துவும் எஞ்சாமற் போவதுதான்.

"राजसं चलमध्रुवम्"—ராஜஸம் சலமத்ருவம்.

இரசோகுணத்தின் எல்லாக்காரியங்களும் சஞ்சலமாய் உறுதியற்றே இருக்கும். சிறு குழந்தைகள் பாத்தியில் ஒரு விதையைப் புதைத்து, உடனே அது முளைத்துவிட்டதா என்று நோண்டிப் பார்ப்பார்களே, அதே நிலைதான் இரசோகுணமுள்ள மனிதனுடையதும். எல்லாம் உடனுக்குடன் அவன் கைக்கு வந்துவிட வேண்டும். அவனுக்கு எப் பொழுதும் ஒரே அவசரம்தான். அடக்கம் என்பதையே அவன் இழந்து விடுகிறான். ஓர் இடத்தில் காலை ஊன்றி நிற்பதென்பது அவனுக்குத் தெரியாது. இங்கே சிறிது வேலை செய்வான்; அங்கே போனால் சிறிது பெயர் ஏற்படும்; அவன் இங்குமில்லாமல் அங்குமில்லாமல் மூன்றாம் இடம் ஒன்றுக்குப் புறப்பட்டுவிடுவான்! இன்று சென்னையில் வரவேற்பு, நாளை கல்கத்தாவில், மறுநாள் பம்பாய்-நாகபுரியில்! நாட்டில் எவ்வளவு நகரசபைகளுண்டோ அவை அத்தனையும் தனக்கு வரவேற்புப் பத்திரம் அளிக்கவேண்டுமென்று ஆவல் கொள்வான்! 'சென்ற விடமெல்லாம் சிறப்பே' என்று அவனுக்குத் தோன்றும். ஓரிடத்தில்

நிலைத்து வேலைசெய்யும் பழக்கமே அவனுக்கிராது. இதனால் இரசோ குணமுள்ளவன் நிலை மிகவும் பயங்கரமானதாகிவிடுகிறது.

இரசோகுணத்தின் வயப்பட்ட மனிதன் பல்வேறு தொழில்களிலும் காலை இட்டுக்கொண்டே இருப்பான். சுதர்மம் எனத் தக்கதொன்று அவனுக்குக் கிடையாது. உண்மையான சுதர்மம் என்பதற்குப் பிற காரியங்களனைத்தையும் விட்டுவிடுதல் என்பது பொருள். கீதையின் கர்ம யோகம் இரசோகுணத்திற்கு ராமபாணமாற்றுகும். இரசோகுணத்தில் எல்லாமே சஞ்சலமானவை தாம். மலையின் உச்சியில் பொழியும் நீர் பல்வேறு திசைகளிலும் ஓடத் தொடங்குமானல் அது போன இடமே தெரியாமற்போய்விடும்; எல்லா நீரும் சிதறிப் பாழாகிவிடும். ஆனல் அதுவே ஒரு திசையில் ஓடும்பொழுது நதியாகும்; அதிலிருந்து ஒரு சக்தி தோன்றும்; நாட்டிற்கு அதனல் நன்மை உண்டாகும். அவ்வாறே மனிதன் தன் சக்தி அனைத்தையும் வெவ்வேறு தொழில்களில் செலவிடாது ஒன்று சேர்த்து ஒரே காரியத்தில் முறைப்படிச் செலுத்து வானயின் அவன் மூலமாய் ஏதேனும் காரியம் உருவாகும். ஆகையால் சுதர்மத்திற்கு மிக்க சிறப்புண்டு.

சுதர்மத்தைப்பற்றி இடையருது சிந்தித்து அதிலேயே சக்தி அனைத்தையும் செலவிடவேண்டும்; மற்ற விஷயங்களில் கவனமே செலுத்தக்கூடாது. சுதர்மத்தின் உரைகல் இதுவே. கர்மயோகம் என்பது மிகவும் பெரியதோ உயர்ந்ததோ ஆன காரியம் என்பதல்ல. அளவை மீறிச் செய்யப்படும் காரியத்திற்குக் கர்மயோகம் என்ற பெயரில்லை. கீதையின் கர்மயோகம் என்பதே வேறு விஷயம். அதிலுள்ள சிறப்பு, பயனிடம் கருத்தைச் செலுத்தாது இயற்கையாய்த் தவிர்க்கமுடியாது கிடைத்துள்ள சுதர்மத்தைச் செய்து அதன் மூலம் சித்தசுத்தி பெற்றுக்கொண்டிருத்தலே. பார்க்கப்போனல், சிருஷ்டியில் சாதாரணமாகவே ஒரே வகையில் காரியங்களெல்லாம் நடந்துகொண்டே தானிருக்கின்றன. கர்மயோகம் என்பதற்கு ஒரு விசேஷமான மனப் பாங்குடன் எல்லாக் காரியங்களையும் செய்தல் என்பது பொருள். வயலில் விதை விதைப்பதும் ஒரு பிடி தானியத்தை எடுத்து எங்கேனும் வீசி எறிவதும் முற்றிலும் வேறன காரியங்கள். இவை இரண்டிற்கும் பெருத்த வேற்றுமையுண்டு. தானியம் விதைப்பதனல் எவ்வளவு பயன் ஏற்படுகிறது, அதை வீணில் வீசி எறிவதனல் எவ்வளவு நஷ்டம் விளைகிறது என்பதை நாம் அறிவோம். கீதை போதிக்கும் கர்மம் விதை விதைப்பது போன்றது. இத்தகைய சுதர்மமென்ற கடமையில் அளவிலடங்காத சக்தி உள்ளது. அங்கே எவ்வளவு பாடுபட்டாலும் போதாது.

ருகையால் அங்கே அதிக ஓட்டத்திற்கும் பாட்டிற்கும் சந்தர்ப்பமே ல்லை.

## (79) சுதர்மத்தை நிர்ணயிப்பது எப்படி?

அப்படியானால், "இச் சுதர்மத்தைத் தீர்மானிப்பதெப்படி?" ன்று எவரேனும் கேட்பாரானால் அதற்குள்ள சுலபமான பதில், "அது யற்கையாகவே அமைவது" என்பதே. சுதர்மம் நம்முடன் இயற்கை ல் தோன்றுவது. அதைத் தேடிக் கண்டுபிடித்தல் என்பதே விசித்திர ாய்த் தோன்றுகிறது. மனிதன் பிறக்கும்பொழுதே அவனுடைய தர்மமும் பிறந்துவிடுகிறது. குழந்தைக்குத் தன் தாயைத் தேடிக் ண்டுபிடிக்க எப்படி நேருவதில்லையோ, அப்படியே சுதர்மத்தையும் வரும் தேடவேண்டி யிருப்பதில்லை. அது முன்னரே நம் கையில் ந்திருப்பது. நாம் பிறப்பதற்கு முன்பும் உலகம் இருந்தது; நமக்குப் றகும் அது இருக்கும். நமக்கு முன்னும் அப்பெரிய வெள்ளம் டிற்று; நமக்குப் பின்னும் அது ஓடும். இவ் வெள்ளத்தினிடையில் நாம் றந்திருக்கிறோம். எந்தப் பெற்றோருக்கு நான் பிறந்திருக்கிறேனோ வர்களுக்கும், எந்த அண்டை அயலார்களிடையில் நான் வாழ்கிறேனோ வர்களுக்கும் சேவை செய்தலென்ற இவ்விரு காரியங்களும் எனக்கு யற்கையிலேயே அமைந்திருப்பவை. பிறகு என் போக்குகளோ நான் வ்வொரு நாளும் அனுபவிப்பவை தாமே. எனக்குப் பசியெடுக்கிறது, ாகம் தோன்றுகிறது. ஆகையால் பசித்தவருக்கு உணவு அளித்தலும், ாகம் என்பவர்களுக்கு நீர் அருந்தலும் எனக்கு இயற்கையிலேயே ற்பட்டுள்ள கடமைகளாகின்றன. இவ்வாறு இச் சேவை, பிற உயிர் ளிடம் தயை என்ற சுதர்மத்தை நான் தேடிப் போகவேண்டியிருப்ப ல்லை. சுதர்மத்தை எவரேனும் தேடிக் கொண்டிருப்பதாய்த் தெரிந் ால் அவர் ஏதோ பரதர்மத்தையோ, அதர்மத்தையோ செய்கிறார் என்று றுதியாய்க் கொள்ளலாம்.

ஊழியர் தாம் செய்யவேண்டிய சேவையை எங்கும் தேடவேண்டி ருப்பதில்லை; அது தானே அவரிடம் வந்து சேருகிறது. ஆனால் ஒரு ிஷயத்தைக் கவனத்தில் கொள்ளவேண்டும். அதாவது, சிரமமின்றித் ானே கிடைப்பதெல்லாம் சுதர்மமே என்று நினைக்கக்கூடாது. ஒரு ிவசாயி இரவில் என்னிடம் வந்து, "வாருங்கள், நாம் அந்த அணையை ன்கைந்து முழம் அப்பால் தள்ளிவிட்டு வருவோம். அதனால் என் யலுக்குத் தண்ணீர் நன்றாய்ப் பாயும். இப்பொழுது அங்கே ஒருவரு ல்லை. சந்தடி எதுவுமின்றி எல்லாம் ஆகிவிடும்" என்று சொன்னார்.

இக்காரியம் எனக்கு என் அயலார் சொல்லியதாயினும், இது நான் தேடிப்போகாது தானே ஏற்பட்டதாயினும் இதில் அசத்தியம் கலப்ப தால் இது என் கடமையாகாது.

நான்கு வர்ணங்களின் ஏற்பாடு எனக்கு இனியதாய்த் தோன்று வதற்குக் காரணம் அதில் இயற்கை, தர்மம் ஆகிய இரண்டும் கலந்திருப் பதே. இச் சுதர்மத்தை விடுவதனால் காரியம் ஆகாது. எனக்கு எந்தப் பெற்றோர் ஏற்பட்டிருக்கிறார்களோ அவர்களேதான் என் பெற்றோரா யிருப்பர். எனக்கு அவர்களைப் பிடிக்கவில்லை என்று நான் சொன்னால் எப்படி ஆகும்? பெற்றோரின் தொழில் இயற்கையாகவே பிள்ளைக்குப் பரம்பரைச் சொத்தாய்க் கிடைப்பது. தலைமுறை தலைமுறையாய் நடந்துவரும் தொழில் அது; நியாயத்திற்கு மாறாக இல்லாதிருக்கு மானால் அதையே செய்தல், அதையே தொடர்ந்து நடத்திவருதல் வர்ண முறையிலுள்ள ஒரு சிறப்பாகும். இவ் வர்ண முறை இன்று பெரிதும் குழம்பிப் போய்க் கிடக்கிறது. அதைப் பின்பற்றுதல் இன்று மிகவும் சிரமமாகிவிட்டது. ஆனால் அதைச் சரிப்படுத்த முடியுமானால் மிகவும் நன்றாயிருக்கும். இன்றோ தொடக்கத்தின் இருபத்தைந்து முப்பது வருஷங்கள் புதிய வேலையை, புதிய தொழிலொன்றைக் கற்பதிலேயே கழிந்து போகின்றன. தொழிலைக் கற்றுக்கொண்டான பிறகும் மனிதன் தான் வேலை செய்வதற்கு ஓர் இடத்தைத் தேடுகிறான். இவ்வாறு ஆரம் பத்தின் இருபத்தைந்து வருஷ காலம் அவன் ஏதோ கற்றுக்கொண்டே யிருக்கிறான். இக் கல்விக்கும் அவனுடைய வாழ்க்கைக்கும் சம்பந்தமே இருப்பதில்லை. எதிர்கால வாழ்க்கைக்கு ஏதோ ஆயத்தம் செய்வதாய்ச் சொல்லுகிறார்கள். கல்வி பெறும்பொழுது அவன் உயிர் வாழாதது போலும், பிறகே வாழப்போவது போலும் இருக்கிறது அவர்கள் கூற்று! முதலில் எல்லாவற்றையும் கற்றுக்கொள்ளவேண்டும், பிறகு வாழ வேண்டும் என்கிறார்கள். வாழ்வும், கல்வியும் வெவ்வேறென இவர்கள் பிரித்து வைத்திருப்பதுபோல் தோன்றுகிறது. வாழ்வுடன் சம்பந்த மில்லாத தொன்றைச் சாவென்றுதானே சொல்லவேண்டும்? இந்தியனின் சராசரி ஆயுளின் அளவு இருபத்துமூன்று வருஷமாயிருக்கையில் இருபத்தைந்து வருஷத்திற்கு இந்த ஆயத்தத்தையே அவன் செய்து கொண்டிருக்கிறான். இவ்வாறு புதிய தொழில்களை, வேலைகளைக் கற்ப திலேயே ஆயுட்காலம் போய்விடுகிறது. அதன் பிறகு தொழில் செய்தல் ஆரம்பமாகிறது. இதனால் ஊக்கம் நிறைந்த, உற்சாகம் மலிந்த, மகத்துவம் பொருந்திய வருஷங்கள் வீணே கழிந்துபோகின்றன. மக்கள் சேவையிற் செலவுசெய்து வாழ்க்கையைப்ப யனுள்ளதாய்ச் செய்

திற் பயன்படவேண்டிய ஊக்கமும் உற்சாகமும் வீணே கழிந்து பாழா ன்றன. வாழ்க்கை என்பது வெறும் கேலிக்கூத்தோ, விளையாட்டோ ல்ல. ஆனால் வாழ்க்கையின் மதிப்பிடமுடியாத ஆரம்பப் பகுதி ழ்க்கைக்கு வேண்டிய தொழிலைத் தேடுவதிலேயே கழிந்து போவதை ன்ன வருத்தமாயிருக்கிறது. இந்து மதமானது இதனாலேயே வர்ண மமென்ற வழியைக் கண்டுபிடித்துள்ளது.

ஆனால் நான்கு வர்ண முறையை ஒருபுறம் ஒதுக்கி வைத்துவிடு பாம். ஆயினும் எல்லா நாடுகளிலும், இவ் வேற்பாடு இல்லாத எல்லா டங்களிலும் சுதர்மமென்பது எல்லோருக்கும் ஏற்பட்டுத்தானிருக் றது. நாம் அனைவரும் இவ் வெள்ளத்தில் ஏதோ ஒரு விசேஷ நிலையை டன் கொண்டே பிறந்திருக்கிறோம். சுதர்மமென்ற கடமை நமக்கு யற்கையாகவே ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் தொலைவிலுள்ள டமைகள்—அவைகளைக் கடமைகள் என்று அழைப்பதே சரியல்ல— வ்வளவுதான் சிறந்தவையாய்த் தோன்றியபோதிலும் அவற்றை ஏற்கக் டாது. பல சமயங்களில் ‘ தூரத்துப் பச்சை கண்ணுக்குக் குளுமை ’ ாய் இருப்பதுண்டு. மனிதன் தொலைவிலுள்ளதைக் கண்டு மோக டைகிறான். மனிதன் நிற்குமிடத்தில் பனி சூழ்ந்திருக்கிறது. ஆனால் வனுக்கு அது கண்ணுக்குப் புலனாகாது போக, அவன் தொலைவைச் ட்டி “ அங்கே நல்ல பனி பெய்கிறது ” என்கிறான். ஆனால் அங்கே ள்ளவனோ இங்கே சுட்டி “ அங்கே நல்ல பனி ” என்கிறான். எல்லா டங்களிலும் பனி இருந்தபோதிலும் பக்கத்திலிருப்பது தெரிவதில்லை. னிதனைத் தொலைவிலுள்ளவையே கவர்கின்றன. பக்கத்திலுள்ளது வனமின்றி மூலையில் தள்ளப்பட்டுக் கிடக்க, தொலைவிலுள்ளதைப் ற்றிக் கனவு காண்கிறான். ஆனால் இது மோகம். இதை விட்டே ர வேண்டும். கிடைத்துள்ள சுதர்மம் சாதாரணமாயிருந்தபோதிலும், பாதுமானதாய்த் தோன்றாதபோதிலும், ரசமற்றதாய்க் காணப்படினும், னக்கு அதுவே சிறந்தது ; அதுவே எனக்கு அழகியது. கடலில் ழ்கிக் கொண்டிருக்கும் மனிதனுக்கு ஒரு கோணல்மாணலான, முண்டு ரடான மரத்துண்டு கிடைக்குமானால்—பளபளவென்று இழைத்ததாய், ழகியதாய் இல்லாவிட்டாலும்—அதுவே அவனைக் காக்கும். தச்சன் ட்டறையில் எவ்வளவோ சிறந்த, வழவழப்பான, சித்திர வேலைப்பாடுக மைந்த மரத்துண்டுகளிருக்கின்றன. ஆனால் அவை பட்டறையி ருக்க, இவன் இங்கே கடலில் மூழ்கித் தவித்துக் கொண்டிருக்கிறான் ; ஆகையால் கோணல் மாணலான இம் மரத்துண்டே இவனைக் காக்கு ாகையால் இதையே இவன் பற்றிக்கொள்ள வேண்டும். அவ்வாறே

எனக்கேற்பட்டுள்ள பணி குறைந்த தரத்ததாய்த் தோன்றிய போதிலும் அதுவே எனக்கு உபயோகமானது. அதில் ஆழ்ந்திருத்தலே எனக்கு அழகு. அதுவே என்னைக் கடைத்தேற்றும். அதை விட்டு நான் வேறொரு பணியைத் தேடித் திரிவேனாயின் முதலிலிருந்தது என்னை விட்டுப் போய்விட, புதியதும் எனக்குக் கிட்டப் போவதில்லை. இதனால் மனிதன் பணி புரிவதையே மறந்து உழலத் தொடங்குகிறான். ஆகையால் சுதர்மமென்ற கடமையிலேயே நாம் ஆழ்ந்திருக்க வேண்டும்.

நாம் சுதர்மத்தில் ஆழ்ந்துபோய்விடும்பொழுது இரசோகுணம் இரசமற்றுப் போகும்; ஏனெனில், அப்பொழுது நம் சித்தம் ஏகாக்ரமாகிவிடும். அது சுதர்மத்தை விட்டு எங்கும் போவதில்லையாகையால் சஞ்சலமான இரசோகுணத்தின் வலு பெரிதும் குறைந்து போகும். ஆறு ஆழமாய் அமைதியாயிருக்கையில் அதில் எவ்வளவுதான் வெள்ளம் பெருகிய போதிலும் அது அவ்வளவையும் தன்னுள் அடக்கிக்கொள்ளும். இவ்வாறே சுதர்மமென்ற ஆறு மனிதனுடைய எல்லா பலத்தையும், எல்லா வேகத்தையும், எல்லாச் சக்தியையும் சமாளித்துக்கொள்ளும். சுதர்மத்தில் நாம் எவ்வளவு சக்தியை வேண்டுமானாலும் செலவழிக்கலாம்; அதில் தவறில்லை. சுதர்மத்தில் நாம் எல்லாச் சக்தியையும் செலவிட்டோமானால் இரசோகுணத்தின் ஆட்டபாட்டங்களுக்கு இடமே இல்லாமற்போகும்; நம் சஞ்சலமே மிதிபட்டு மடிந்து போகும். இரசோ குணத்தை வசப்படுத்துவதற்குள்ள வழி இதுவே.

## (80) சத்துவ குணமும் அதற்கு உபாயமும்

இனிச் சத்துவகுணம் எஞ்சியிருக்கிறது. இதனிடம் மிகவும் கவனமாய் இருந்துவர வேண்டும். இதனிடமிருந்து ஆன்மாவை எப்படிப் பிரிப்பது? இது மிகவும் நுணுக்கமான கருத்தைப் பற்றிய விஷயம். சத்துவ குணத்தை அறவே ஒழித்துவிடக் கூடாது. இரச-தமோ குணங்களை முற்றிலும் அழிக்க வேண்டியிருக்க, சத்துவ குணத்தின் விஷயமே, தன்மையே வேறாகும். கூடியுள்ள பெருங் கும்பலைக் கலைக்க வேண்டி வரும்போது "கூட்டத்தில் முழங்காலுக்கு மேலே போகாமல், கீழே பார்த்துச் சுடுங்கள்!" என்று போலீசுக்கு உத்தரவு கொடுக்கப்படுகிறது. இதனால் மனிதன் சாவதில்லை, காயமடைகிறான். இவ்வாறே சத்துவ குணத்தையும் காயப்படுத்த வேண்டுமே யன்றி கொல்ல வேண்டியதில்லை. இரசோகுணமும் தமோகுணமும் போய்விட்ட பிறகு சுத்தச் சத்துவ குணம் எஞ்சிநிற்கும். நம் உடல் இருக்கும்வரை நாம் ஏதோ

ச் ஆதாரத்தைக் கொண்டே இருந்து வரவேண்டியிருக்கும். ஆகவே ரசோ-தமோ குணங்கள் போனபிறகு எஞ்சியிருக்கும் சத்துவ குணத்தி ருந்து விலகுதல் என்பதற்குப் பொருள்தான் என்ன? சத்துவ குணம் ற்றிய அபிமானம் ஏற்பட்டுவிடும்பொழுது அது ஆன்மாவை அதன் ாய தன்மையிலிருந்து கீழே இழுத்துவிடும். லாந்தரின் வெளிச்சத்தை தன் சுத்தத் தன்மையுடன் வெளியில் பரவச் செய்யவேண்டுமானல் ண்ணுடியில் படிந்துள்ள புகையை முற்றிலும் அகற்ற வேண்டும்; ண்ணுடியில் தூசு படிந்திருந்தால் அதையும் கழுவ வேண்டும். வ்வாறே, ஆன்மாவினது ஒளியின் பக்கத்திற் சேர்ந்துள்ள தமோ ணமென்ற புகைக் கரியை நன்ருய்த் துடைத்து அகற்ற வேண்டும்; தன் பிறகு இரசோகுணமென்ற தூசியையும் நீக்கவேண்டும். வ்வாறு தமோகுணத்தையும் இரசோகுணத்தையும் அகற்றித் தூப்பர ாக்கியபின் சத்துவ குணமென்ற கண்ணுடி பாக்கியிருக்கும். இச் த்துவ குணத்தையும் அகற்றவேண்டும் என்பதற்கு அக் கண்ணுடி யையும் உடைத்தல் என்று பொருள்கொள்ளலாமா? கூடாது. கண்ணுடி யையே உடைத்துவிட்டால் லாந்தர் உபயோகமில்லாமற்போகும். ிளக்கு ஒளியைப் பரப்புவதற்குக் கண்ணுடி தேவையே; ஆகையால் ச் சுத்தமான, பளபளவென்றிருக்கும் கண்ணுடியை உடைக்கக் டாது. ஆனல் அதன் ஒளி பட்டுக் கண் கூசாதிருப்பதற்காக அதன் து ஒரு காகிதத் துண்டைச் செருகிவிட வேண்டும். சத்துவ குணத்தின் து வெற்றி கொள்வது என்பதற்கு அதுபற்றி நாம் கொள்ளும் ர்வத்தை, அதனிடம் நமக்குள்ள பாசத்தை அகற்றுதல் என்பதே பாருள். சத்துவ குணத்தைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டியதே; ஆனல் அதைக் கிரமமாய், முறைப்படிச் செய்யவேண்டும். சத்துவ குணத்தை அகங்காரமற்றதாய் கர்வமற்றதாய் ஆக்கிவிடவேண்டும்.

அப்படியானல் இச் சத்துவ குணத்தின் கர்வத்தின்மீது வெற்றி கொள்வதெப்படி? இதற்கொரு வழியிருக்கிறது. அது சத்துவ குணத்தை நம்முள் நிலைக்கச் செய்தலே. எப்பொழுதும் உடன் இருப்ப தனல் அதன் கர்வம் போய்விடும். சத்துவகுணமயமான காரியங் களையே நாம் எப்பொழுதும் செய்துகொண்டிருக்கவேண்டும். அதை நம் சுபாவமாகவே ஆக்கிக்கொண்டுவிடவேண்டும். சத்துவ குணம் நம்மிடம் சிறிது நேரம் இருந்துவிட்டுப் போகும் விருந்தாளியா யில்லாது நம் வீட்டு ஆளாகிவிடவேண்டும். நாம் எப்பொழுதேனும் ஆடிக்கொரு தரம், தைக்கொரு தரம் என்று செய்யும் காரியத்தைக் குறித்து நமக்கு கர்வம் ஏற்படும். நாம் தினமும் தூங்குகிறோம், ஆனல்

அதைப் பற்றிப் பிறரிடம் பேசுவதில்லை. ஒரு நோயாளிக்கு பதினைந்து நாள் தூக்கமே வராதிருந்து, பிறகு சிறிது தூக்கம் வந்ததானால் அவன் எல்லோரிடமும், "நேற்றுச் சிறிது கண் அயர்ந்தேன்" என்கிறான். அவனுக்கு அது முக்கியமானதாய்த் தோன்றுகிறது. இதைவிடச் சிறந்த உதாரணமான நாம் சுவாசம் விட்டுச் சுவாசம் இழுப்பதைக் கொள்ளலாம். நாம் இருபத்து நான்கு மணி நேரமும் மூச்சு விடுகிறோம்; ஆனால் அதைப் பற்றி எவரிடமும் பேசுவதில்லை. எவரேனும் யாரிடத்திலாவது பெருமையாக "நான் ஒரு மூச்சுவிடும் பிராணி" என்று சொல்லிக்கொள்வதுண்டா? ஹரித்துவாரத்தில் எறியப்பட்ட ஒரு துரும்பு கங்கையில் மிதந்துகொண்டே 1500 மைல் தொலைவைக் கடந்து கல்கத்தா போய்ச் சேர்ந்ததானால் அது அதைக் குறித்து கர்வங்கொள்ளுமா? அது நீரோட்டத்துடன் தானே மிதந்து வந்துவிட்டது. ஆனால் வெள்ளத்தின் எதிர்த் திசையில் ஒருவன் பத்து இருபது முழ தூரம் நீந்தி விட்டானாயின் அவன் அதைப் பற்றி எவ்வளவு பெருமையாய்ப் பேசிக்கொள்ள மாட்டான்? நமக்கு இயற்கையாயுள்ள ஏக் காரியத்தையும்பற்றிக் கர்வம் தோன்றுவதில்லை.

நாம் ஒரு நல்ல காரியம் செய்துவிடும்பொழுது நமக்கு அதுபற்றிக் கர்வம் தோன்றுகிறது. ஏன்? ஏனென்றால், அது இயற்கையாய்ச் செய்யப்படாமையாலேயே. குழந்தை ஒரு நல்ல காரியம் செய்திருந்தால் தாய் அதன் முதுகில் தட்டிக் கொடுக்கிறாள். இல்லையேல், சாதாரணமாய்த் தாய் கொம்பினாலேயே குழந்தையின் முதுகை எப்பொழுதும் தீண்டுவாள். இரவின் பேரிருளில் ஒரு சில மின்மினிகள் வெளிக் கிளம்பும்பொழுது அவைகளின் வீறுப்பைப் பார்க்கவேண்டுமே! அவை தம் ஒளி முழுமையும் தொடர்ந்து காட்டுவதில்லை; இடையிடையே ஒளியை மறைப்பதும் பிறகு திறப்பதுமாய் ஆட்டங்காட்டுகின்றன. ஆனால் அதன் ஒளி தொடர்ந்திருக்குமானால் அதன் வீறுப்புப் போய்விடும். ஒரு விஷயம் சதா நடைபெறும்பொழுது அதில் சிறப்பிருப்பதாகவே தோன்றுவதில்லை. இவ்வாறு நம் காரியங்களில் சத்துவ குணம் இடையறாத வெளிப்பட்டுக் கொண்டிருக்குமானால் அது நம் சுபாவமாகிவிடும். சிங்கத்திற்குத் தன் சௌரியத்தைப்பற்றிக் கர்வமில்லாதது மட்டுமல்ல, தன் சௌரியம் அதற்கு நினைவே இருப்பதில்லை. இவ்வாறே அதன் நினைவே நமக்கில்லாது போகும்படி சாத்துவிகப் போக்கை நாம் நம் இயற்கையாய், சுபாவமாய்ச் செய்துகொண்டுவிடவேண்டும். ஒளி தருதல் சூரியனுக்கு இயற்கையான காரியம். அதைப் பற்றிச் சூரியனுக்குக் கர்வம் ஏற்படுவதில்லை. அதன் பொருட்டு எவரேனும்

ரியனுக்கு அத்தாட்சிப் பத்திரம் கொடுக்கக் கிளம்புவார்களானால் து, “ இதில் விசேஷம் என்ன? நான் ஒளி அளிப்பதற்கு அதிகமாய் ன்ன செய்து விடுகிறேன்? என் வாழ்க்கையே ஒளி அளிப்பதுதானே! ளி அளியாவிடில் நான் அவிந்தல்லவா போவேன்? எனக்கு வேறெது மே செய்யத் தெரியாதே!” என்று சொல்லும். சாத்துவிக மனிதன் லை இவ்வாறாகிவிடவேண்டும். சாத்துவிக குணம் அவனுடைய வ்வொரு மயிர்க்காம்பிலும் ஊறிப் போய்விடவேண்டும். இவ்வாறு நம் பாவமே சத்துவ குணமயமாகிவிடும்பொழுது நமக்கு அதுபற்றிய ர்வமே இராது. சத்துவகுணத்தைத் தீமையற்றதாக்க, அதன்மீது வற்றி காண இது ஒரு வழியாகும்.

மற்றொரு வழி, சத்துவகுணப் பற்றையும் ஆசையையும் விட்டு டுதல். அகங்காரம், ஆசை என்ற இரண்டும் வெவ்வேறானவை. வற்றினிடையேயுள்ள வேற்றுமை சிறிது நுணுக்கமானது. ஆகை ால் உதாரணம் சொன்னால் அது விரைவில் புரிந்துவிடும். சத்துவ ுணத்தின் கர்வம் நீங்கியபிறகும் அதனிடம் ஆசை இருந்துவரும். மச்சுவிட்டு இழுப்பதையே உதாரணமாய்க் கொள்ளலாம்: மூச்சு ிழுப்பது பற்றிய கர்வமிருப்பதில்லையாயினும் அதில் பெரிய ஆசை ட்டும் இருந்துவருகிறது. ஐந்து நிமிஷம் மூச்சை அடக்கிக் காண்டிரு என்றால் முடிவதில்லை. மூக்குக்கு மூச்சுவிட்டு இழுப்பதைப் ற்றிக் கர்வமில்லையாயினும் அது காற்றை மட்டும் இழுத்துக்கொண்டே ானிருக்கிறது. சோக்ரத்தரைப்பற்றி ஒரு விநோதமான கதை உண்டு. அவர் மூக்கு சப்பையாயிருந்ததால் அவரைப் பார்ப்பவர்கள் சிரிப்பது ழக்கம். ஆனால் விநோதியான சோக்ரத்தர், “ என் மூக்கே மூக்குகளில் றந்தது. மூக்கின் துவாரங்கள் அகன்றிருந்தால் அதிகக் காற்றை ிழுக்க முடியுமாகையால் என் மூக்கே எல்லா மூக்குகளையும்விட அழ ானது ” என்று சொல்லுவார். மூக்குக்குச் சுவாசம் விட்டு இழுப்பது ற்றிய கர்வமில்லையாயினும் ஆசை மட்டும் இருந்துவருகிறது என்பது ருந்து. சத்துவ குணங்களிடத்திலும் இதே வகையில் ஆசை எற்பட்டு ிடும். உதாரணமாக, உயிர்களிடத்து அன்பைச் சொல்லலாம். இக் ுணம் மிகவும் உபயோகமானதாயிருப்பினும் இதன் ஆசையையும் அகற்றிக்கொள்ள முடியவேண்டும். உயிர்களிடத்து அன்பு வேண்டுமா ினும் ஆசை கூடாது.

மகான்கள் இச்சத்துவ குணம் காரணமாகவே பிறருக்கு வழிதுலக்கு வாராகின்றனர். அவர்களது உடல் உயிர்களிடத்து அன்பு காரண ாக எல்லோருக்கும் சொந்தமாகிப் பொதுவாகிவிடுகிறது. ஈக்கள்

வெல்லம் உள்ள பாண்டத்தைப் போய் மொய்த்துக்கொள்வதைப்போல அகில உலகமும் மகான்களின்மீது அன்புப் போர்வையைப் போர்த்து கிறது. மகான்களினுள்ளத்தில் அன்பு பெருக்கெடுத்து ஓடுவதால் அகில உலகமும் அவர்களிடம் அன்பு பாராட்டத் தொடங்குகிறது. மகான்கள் தம் உடற்பற்றைத் துறந்துவிடுவதால் அகில உலகமும் அவர்களைப்பற்றி, அவர்களுடைய உடலைக் குறித்துக் கவலைகொள்ளத் தொடங்குகிறது. ஆனால் இப் பற்றையும் மகான்கள் அகற்றிக்கொள்ள வேண்டும்; இவ்வுலகப் பற்றிலிருந்துப், இப் பெரும் பயனிலிருந்தும் ஆன்மாவை வேறாய்ப் பிரித்துவிடவேண்டும். தான் ஒரு சிறந்த மனிதன், தனிப்பட்டவனென்று அவர்களுக்கு ஒருபொழுதும் தோன்றக் கூடாது. இவ்வாறு சத்துவ குணத்தை உடலிலேயே ஜெரித்துப் போகச் செய்யவேண்டும்.

முதலில் அகங்காரத்தின்மீதும், பிறகு ஆசையின் மீதும் வெற்றி காண். எப்பொழுதும் உடனிருப்பதனால் அகங்காரம் வெல்லப்பட, பயனிடமுள்ள பற்றைத் துறந்து சத்துவ குணத்தினால் கிட்டும் பயனை யும் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்வதனால் ஆசையும் வெல்லப்படும். வாழ்க்கையில் சத்துவ குணம் நிலைத்துவிடும்பொழுது ஒரு சமயம் வெற்றியினுருவிலும், இன்னொரு சமயம் கீர்த்தியினுருவிலும் பயன் நம் எதிரில் வரும். ஆனால் அப்பயனையும் துச்சமாய், இழிந்ததாய்க் கருதுங்கள். மாமரம் தன் பழம் ஒன்றைக்கூட தான் தின்பதில்லை; பழம் எவ்வளவு சிறந்ததாயிருப்பினும், எவ்வளவு இனிப்பாயிருந்த போதிலும், உருசியாயிருந்த போதிலும் அதை அருந்துவதைவிட அருந்தாதிருப்பதே அதற்கு அதிக இன்பமளிக்கிறது. அனுபவத்தை விடத் தியாகம் அதிக இன்பம் தருவது. தருமர் வாழ்க்கை முழுதும் செய்த புண்ணியத்தின் விளைவாய் கிடைத்த சுவர்க்கவாசமென்ற பயனை யும் இறுதியில் உதறித் தள்ளினர்; வாழ்க்கை முழுதும் செய்த தியாக மென்ற சோபுரத்தின் மீது ஸ்தூபியைப் பொருத்தினர். அவ்வினிய பயனை நுகர்வதற்கு அவருக்கு உரிமையிருந்தது; ஆனால் அவர் அதை நுகர்ந்திருந்தாரானல் அது முடிந்துபோயிருக்கும். "क्षीणे पुण्ये मर्त्य लोकं विशन्ति" (க்ஷீணே புண்யே மர்த்திய லோகம் விசந்தி) என்ற இச் சக்கரம் அவரைச் சுழற்றத் தொடங்கியிருக்கும். தருமர் செய்த இத் தியாகம் எவ்வளவு சிறந்தது! இது எப்பொழுதும் என் கண் முன் நின்றுகொண்டே யிருக்கிறது. இவ்வாறு சத்துவ குணத்தை இடை யறாது இயற்றி வருவதன் மூலம் அதன் அகங்காரத்தை வெற்றிகொள்ள வேண்டும். நடுவு நிலையில் நின்று எல்லாப் பயன்களையும் ஆண்டவ

க்கு அர்ப்பணம் செய்துவிட்டு, அதன் ஆசையினின்று விடுபட
ண்டும். அப்பொழுது சத்துவ குணத்தையும் வென்றுவிட்டோ
ன்று சொல்லலாம்.

## (81) ஆன்ம ஞானமும் பக்தியின் சார்பும்

இனிக் கடைசி விஷயம். நீங்கள் சத்துவ குணமயமாகிவிட்ட
ாதிலும், அகங்காரத்தை வென்றுவிட்டபோதிலும், பயனிடத்திலுள்ள
ற்றைத் துறந்துவிட்டபோதிலும், இவ்வுடல் இருந்துவரும்வரை இடை
டையே இரசோ-தமோ குணங்கள் தாக்கிக்கொண்டே தானிருக்கும்.
றிது நேரம் நாம் இக்குணங்களை வென்றுவிட்டதாய்த் தோன்றிய
ாதிலும் இவை மீண்டும் மீண்டும் வந்து, தம் கை வரிசையைக் காட்
ேவதான் செய்யும். ஆகையால் எப்பொழுதும் விழிப்புடனிருக்க
ண்டும். கடலின் நீர் வேகமாய் உள்ளே பாய்ந்து பாய்ந்து பூமியைக்
டைந்து விடுவதைப்போல இரசோ-தமோ குணங்களின் பெருக்கு
் மனத்திற் புகுந்து பெரும் துளைகளை உண்டாக்கி விடும். ஆகையால்
று துளையும் தோன்றாது பார்த்துக்கொள்ள வேண்டும்; வெகு கவன
ய்க் கண்காணித்து வரவேண்டும். எவ்வளவுதான் எச்சரிக்கையும்
மையுமிருந்த போதிலும் ஆன்ம ஞானம், ஆன்ம தரிசனம் ஏற்படா
ருக்கும் வரை ஆபத்து உண்டு என்று உணருங்கள். ஆகையால்
்லா வகையிலும் முயன்று ஆன்ம ஞானம் பெறுங்கள்.

ஆன்ம ஞானம் வெறும் விழிப்பின் பயிற்சிகளினால் ஏற்படாது.
ன் எப்படி ஏற்படும்? அப்பியாசத்தினாலா? அல்ல. அதற்கு ஒரே
ழிதானுண்டு. அவ்வழி உண்மை உள்ளத்துடன், மனப்பூர்வமான
ள்ளக்கனிவுடன், வேதனையுடன் பகவானிடம் பக்தி புரிதலே. நீங்கள்
-சோ-தமோ குணங்களை வென்று விடுகிறீர்கள்; சத்துவகுணத்தை
றுதியாக்கிக்கொண்டு அதன் பயனிடத்தில் பற்றையும் விட்டுவிடு
ீர்கள்; ஆயினும் உங்கள் காரியம் பூர்த்தியாகாது; ஆன்ம ஞானம்
்படும்வரை காரியம் நிறைவேறாது. ஆகையால் இறுதியில் ஆண்ட
னது அருள் கிட்டியாகவேண்டும். உண்மையான, மனப் பூர்வமான
தியினால் அவனருளுக்குப் பாத்திரமாக வேண்டும். இதைத் தவிர
னக்கு வேறு உபாயம் இருப்பதாய்த் தெரியவில்லை. இவ்வத்தியாயத்தி
றுதியில் அர்ஜுனன் இதே கேள்வியைக் கேட்க, பகவான், "மிகவும்
ாக்ர மனத்துடன் பயனை விரும்பாது என்னிடம் பக்தி செய், எனக்குச்
வை புரி. எனக்கு இவ்வாறு சேவை புரிபவன் மாயையைக் கடந்து
டுகிறான். இல்லையேல், இவ்வடர்ந்த மாயையைக் கடத்தல் இலகு

வல்ல" என்று விடையளித்திருக்கிறார் : இது சுலபமான பக்தி வழி; இந்த ஒரே வழிதான் அதற்குண்டு.

ஞாயிறு, 22-5-'32

## பதினைந்தாம் அத்தியாயம்

# பூரண யோகம்—யாங்கணும் புருஷோத்தம தரிசனம்

## (82) பிரயத்தன மார்க்கம் வேறு, பக்தி வேறல்ல

இன்று ஒரு முறையில் பார்க்கையில் நாம் கீதையின் அக் கரைக்குப் போய்ச் சேர்ந்துவிட்டோம் எனலாம். பதினைந்தாம் அத்தியாயத்தில் எல்லாக் கருத்துக்களும் தம் பூரண நிலையை அடைந்துவிடுகின்றன. பதினாறு, பதினேழாம் அத்தியாயங்கள் அநுபந்தங்களைப்போலிருக்க, பதினெட்டாம் அத்தியாயம் முடிவுரை ஆகிறது. இதனாலேயே பகவான் இவ்வத்தியாயத்தினிறுதியில் இதற்குச் 'சாத்திரம்' என்ற பெயர் அளித் திருக்கிறார்.

"மற்றுச் சாத்திரம் பெரு ரகசியம்
குற்றமற்றவா, கூறினன்யானே"

என்று பகவான் இறுதியில் கூறியிருக்கிறார். இவ்வாறு சொல்லியது இது கடைசி அத்தியாயம் என்பதனால் அல்ல, இதுவரைச் சொல்லிய வாழ்க்கையின் சாத்திரம், தத்துவம் இவ்வத்தியாயத்தில் பூர்த்தி செய்யப் பட்டிருப்பதனாலேயே. இவ்வத்தியாயத்தில் பரமார்த்தம் பூர்த்தியாகி விட்டது. வேதங்களின் சாரமனைத்தும் இதில் வந்துவிட்டன. பரமார்த் தத்தைக் குறித்து மனிதனுக்கு விழிப்பை உண்டாக்குவது வேதங்களின் வேலை. அது இவ்வத்தியாயத்தில் செய்யப்பட்டிருப்பதால் இதற்கு 'வேத சாரம்' என்ற சீரிய பதவி கிடைத்திருக்கிறது.

பதின்மூன்றும் அத்தியாயத்தில் உடலிலிருந்து ஆன்மாவைப் பிரிப் பதன் அவசியத்தைப் பார்த்தோம். பதினான்காவதில் அது பற்றிய பிரயத்தன வாதங்களை அலசி ஆராய்ந்தோம். இரசோகுணத்தையும் தமோ குணத்தையும் புலனடக்கத்தின் மூலமாய் ஒழிக்கவேண்டும்; சத்துவகுணத்தை வளர்த்து அதனிடமுள்ள ஆசையையும் வெற்றி கொள்ள வேண்டும்; அதன் பயனைத் துறக்க வேண்டும். இவ்வாறு இம்முயற்சியைச் செய்யவேண்டியது. இறுதியில் இம் முயற்சிகளில் பூரண வெற்றி ஏற்படுவதற்கு ஆன்மஞானம் இன்றியமையாதது

ன்றும், பக்தியின்றேல் ஆன்மஞானம் கிட்டாதென்றும் சொல்லப் பட்டது.

ஆனால் பக்திமார்க்கம் பிரயத்தன மார்க்கத்திலிருந்து வேறல்ல. இதைத் தெரிவிப்பதற்கு இப் பதினைந்தாம் அத்தியாயத்தின் ஆரம்பத்தி லேயே உலகம் ஒரு பெரிய மரத்துடன் உவமிக்கப்பட்டிருக்கிறது. முக் குணங்களினால் வளர்க்கப்படும் கிளைகள் இம்மரத்திற்கு உள்ளன. ஆரம்பத்திலேயே ஆசையின்மை (அனாஸக்தி), வைராக்யம் என்ற ஆயுதங்களைக் கொண்டு இம்மரத்தை வெட்டவேண்டுமென்று சொல்லி விட்டார். சென்ற அத்தியாயத்தில் கூறப்பட்ட சாதனை-மார்க்கமே இங்கே ஆரம்பத்தில் திரும்பச் சொல்லப்பட்டிருக்கிறது என்பது தெளிவு. இரச-தமோ குணங்களைப் போக்கிச் சத்துவ குணத்தின் உரமிட்டுத் தன்னை வளர்த்துக்கொள்ள வேண்டும். ஒன்று அழித்தல் பணி, மற்றது ஆக்கல் பணி; இரண்டையும் சேர்க்கையில் அமையும் வழி ஒன்றே. புல் பூண்டுகளைக் களைவதும் விதை விதைப்பதும் ஒரே காரியத்தின் வெவ் வேறு பகுதிகளே. இவ்விஷயமும் அத்தகையதே. இராமாயணத்தில் இராவணன், கும்பகர்ணன், விபீஷணன் என்ற மூன்று சகோதரர்கள் வருகிறார்கள். கும்பகர்ணன் தமோகுணி, இராவணன் இரசோகுணி, விபீஷணன் சத்துவகுணி. நம் உடலில் இம் மூன்றின் இராமாயணம் இயற்றப்பட்டுவருகிறது. இவ்விராமாயணத்தின் இராவண-கும்ப கர்ணர்களை அழிக்க வேண்டியதே. விபீஷண தத்துவம் என்பது ஆண்டவனிடம் அடைக்கலம் புகுந்துவிடுமானால் அது முன்னேற்றத் திற்கு உதவுவதாய், வளர்ப்பதாய் அமையுமாகையால் அது ஏற்கத் தக்கது. பதினான்காம் அத்தியாயத்தில் இவ்விஷயத்தைப் புரிந்து கொண்டுவிட்டோம். இப் பதினைந்தாம் அத்தியாயத்தின் ஆரம்பத்தில் மீண்டும் இதே விஷயம் வந்திருக்கிறது. சத்துவ-இராசத-தமம் நிறைந் துள்ள உலகத்தைத் தொடர் பின்மையென்ற ஆயுதத்தினால் களைந்தெறி. இராசத-தமங்களை அடக்கு. சத்துவ குணத்தை வளர்த்துப் புனித னாகு. அதன் ஆசையை வென்று பற்றற்று விலகி இரு. தாமரை மலரின் இவ்வாதரிசத்தை பகவத்கீதை நம்முன் இடுகிறது. இந்தியப் பண்பாட்டில் வாழ்க்கையின் தலைசிறந்த பொருள்களுக்குத் தாமரை உவமையாகக் கூறப்படுவது வழக்கம். தாமரை இந்தியப் பண்பாட்டின் சின்னம். தலைசிறந்த கருத்துக்களை வெளியிட உதவும் சின்னம் தாமரையே. தாமரை சுத்தமாயும் புனிதமாயும் இருந்து தொடர்பற் றிருக்கிறது. புனிதம், தொடர்பின்மை என்ற இருவகைச் சக்திகள் தாமரையினிடம் உள்ளன. பகவானது பல்வேறு அவயவங்களுக்கும்

தாமரையை உவமையாகக் கூறுகிறோம். கண்கள், பாதங்கள், கைகள், முகம், தொப்புள், இதயம், தலை ஆகிய இவற்றையெல்லாம் தாமரையுடன் ஒப்பிட்டு இவைகளின் மூலம் எல்லா இடங்களிலுமே அழகு, புனிதம் ஆகியவற்றுடன் தொடர்பின்மையும் இருப்பது நம் உள்ளத்தில் பதிக்கப்பட்டிருக்கிறது.

சென்ற அத்தியாயத்தில் கூறப்பட்ட சாதனையைப் பூர்த்தி செய்யும் பொருட்டு இவ்வத்தியாயம் எழுதப்பட்டிருக்கிறது. முயற்சியில் ஆன்ம ஞானமும் பக்தியும் சேர்ந்துவிடுமானால் பூரணத்துவம் ஏற்பட்டுவிடும். பக்தி பிரயத்தன மார்க்கத்தின் ஒரு பகுதியே. ஆன்மஞானம், பக்தி ஆகிய இவை அச்சாதனையின் அங்கங்களே. வேதங்களில் ரிஷி பகர்வது—

“ यो जागार तं ऋच: कामयन्ते
यो जागार तमु सामानि यान्ति ।”
(யோ ஜாகார தம் ரிச: காமயந்தே
யோ ஜாகார தமு ஸாமானி யாந்தி)

“விழித்திருப்பவர்களை வேதங்கள் விரும்புகின்றன; அவர்களைக் காண அவை தாமே வருகின்றன.” அதாவது, விழித்திருப்பவனிடம் வேத நாராயணர் வருகிறார். அவனிடம் ஞானம் வருகிறது, பக்தி வருகிறது. பிரயத்தன மார்க்கத்திலிருந்து ஞானமும் பக்தியும் வேறல்ல. இவ்விரு தத்துவங்களும் பிரயத்தனத்திற்கு இனிமை பயப்பவை என்பதையே இவ்வத்தியாயத்தில் காட்டவேண்டும். ஆகையால் ஏகாக்ர சித்தத்துடன் பக்தி, ஞானம் ஆகியவற்றின் இச் சொரூபத்தைக் கேளுங்கள்.

## (83) பக்தியால் பிரயத்தனம் சுலபமாகிறது

வாழ்க்கையைத் துண்டாடமுடியாது. கர்மம், ஞானம், பக்தி ஆகியவைகளை நாம் வெவ்வேறாய்க் கூறிடவியலாது; இவை வெவ்வேறானவையுமல்ல. உதாரணமாக, இச் சிறையில் சமையல் செய்யும் வேலையையே பாருங்கள். அறுநூறு, எழுநூறு பேருக்கு உணவு தயாரிக்கும் வேலையை நம்முள் சிலர் செய்கிறார்கள். இவர்களுள் சமையல் வேலை சரியாய்த் தெரியாத ஒருவர் இருந்தால் அவர் சமையலைக் கெடுத்துவிடுவார்; ரொட்டிகள் வேகாமலோ, கருகியோ போய்விடும். ஆனால் நன்றாய்ச் சமையல் செய்யத் தெரியும் என்றே நாம் இங்கே கொண்டு பேசுவோம். ஆயினும் அவரது உள்ளத்தில் அக் காரியத்தினிடம் அன்பும், பக்தியும் இல்லாவிட்டால், ‘இந்த ரொட்டிகள் என் சகோதரர்களுக்கு, அதாவது

ாராயணனுக்குக் கொடுக்கப்படவிருப்பவை. இவைகளை நன்ருய்ச் ட்டுக் காய்ச்சவேண்டும்; இது ஆண்டவன் பணி' என்ற எண்ணம் அவர் உள்ளத்தில் இல்லையாயின் மேலே கூறியபடி சமையலறிவு இருந் தும் அவர் இக் காரியத்திற்குத் தகுதியுள்ளவராகார். இச் சமையல் வேலைக்கு ஞானத்தைப்போல் அன்பும் தேவை. பக்தித்தத்துவத்தின் இரகசியம் உள்ளத்தில் ஊருதவரை சமையல் உருசியுள்ளதாய் அமை யாது. இதனுலேயே தாயில்லாதபோது சமையல் உருசிப்பதில்லை. தாயைத்தவிர வேறு யார் இக் காரியத்தை இவ்வளவு ஆசையுடன், அன் புடன் செய்வார்? மேலும் இதற்குத் தவமும் தேவை. தீயைச் சகியாது, கஷ்டத்தை ஏற்காது இதைச் செய்வதெப்படி? இதிலிருந்து எக் காரியத் தையும் வெற்றிபெறச் செய்வதற்கு அன்பு, அறிவு, உழைப்பு ஆகிய மூன்றும் தேவையென்ற முடிவேற்படுகிறது. வாழ்க்கையின் எல்லாக் காரியங்களும் இம்மூன்று குணங்களின்மீது அமைந்துள்ளன. முக்காலி யின் ஒரு கால் ஒடிந்து போனுல் அது நிற்காது, மூன்று கால்களும் இருக்கவேண்டும். முக்காலி என்ற அதன் பெயரிலேயே அதன் உருவம் அடங்கியிருக்கிறது. வாழ்க்கையின் நிலையும் இதுவே. ஞானம், பக்தி, கர்மம் அல்லது இடையருத உழைப்பு என்ற இவை வாழ்க்கையின் மூன்று கால்கள். இம்மூன்று கம்பங்களின்மீது வாழ்க்கை யென்ற துவா ரகையை நிறுத்தவேண்டும். இம்மூன்று கால்களும் சேர்ந்து அமைப்பது ஒரு பொருளையே. முக்காலியின் உதாரணம் இதற்கு முற்றிலும் பொருந்துவது. வாதத்திற்கு நீங்கள் பக்தி, ஞானம், கர்மம் ஆகிய வற்றை வெவ்வேறென்று கருதியபோதிலும் இவைகளை வேறுபடுத்த முடியாது. மூன்றும் சேர்ந்து ஒரே விசாலமான பொருளாகிறது.

இவ்வாறிருப்பினும், பக்தியில் விசேஷமான குணம் எதுவு மில்லை என்பதல்ல. எக் காரியத்திலும் பக்தித்தத்துவம் சேரும்பொழுதுதான் அது சுலபமாய்த் தோன்றும். 'சுலபமாய்த் தோன்றும்' என்பதற்குக் கஷ்டமே இராது என்பதல்ல பொருள்; கஷ்டம் கஷ்டமாய்த் தோன்ருது, இன்பமாய்த் தோன்றும். முள்ளாய் இருந்து குத்தியது, பூவாய் மாறி விடும். சரி, பக்தி மார்க்கம் சுலபமென்பதற்குப் பொருள்தானென்ன? பக்தி பாவனை காரணமாகக் காரியத்தின் பளு தோன்ருது; காரியத்தி லுள்ள சிரமம் போய்விடும். எவ்வளவு காரியம் செய்தபோதிலும், எதை யுமே செய்யாததுபோல் தோன்றும். ஏசுநாதர் ஓர் இடத்தில், "நீ உபவாசம் செய்கிருய் என்ருல் உன் முகத்தில் உபவாசத்தின் களைப் புத் தோன்றக்கூடாது, உன் கன்னங்களிலும் முகத்திலும் சுகந்தம் பூசப்பட்டதுபோன்ற மகிழ்ச்சி மலரவேண்டும், உபவாசத்தினுல் வருந்து

வதாய்த் தோன்றலாகாது" என்கிறார். கஷ்டமே மறந்துபோகும்படி நம் போக்கு பக்திமயமாகிவிடவேண்டும் என்பது கருத்து. தேசபக்த வீரன் ஒருவன் சிரித்துக்கொண்டே தூக்கு மேடையில் ஏறினன் என்று சொல்வதில்லையா? சுதன்வா எண்ணெய்க் கொப்பறையில் சிரித்துக் கொண்டிருந்தான். வாயிலிருந்து 'கிருஷ்ண, விஷ்ணு, ஹரீ, கோவிந்தா' என்று நாமங்கள் வெளிவந்துகொண்டிருந்தன. எல்லையற்ற துன்பம் நேர்ந்தபோதும் பக்தியின் மகிமையினால் அது சிறிதும் தோன்றவில்லை என்பதே இதன் பொருள். நீரின்மீது கிடக்கும் ஓடத்தைத் தள்ளுதல் சிரமமல்ல. ஆனால் அதையே தரையின்மீது, பாறையின்மீது இழுத்துப்போவதென்றால் எவ்வளவு சிரமம்? ஓடத்தினடியில் நீர் இருப்பின் நாம் சுலபமாய் ஆற்றைக் கடந்துவிடுவோம், எளிதில் கரையேறிவிடுவோம். இவ்வாறே, நம் வாழ்க்கையாம் ஓடத்தின் அடியில் பக்திநீர் இருப்பின், அதை ஆனந்தமாய்ச் செலுத்திக் கொண்டு செல்லலாம். ஆனால் வாழ்க்கை வறண்டிருக்குமாயின், வழியெல்லாம் மணலும் கற்களும் பாறைகளும் மேடுபள்ளங்களும் இருப்பின், இவ்வோடத்தைச் செலுத்திக்கொண்டு போதல் மிகவும் சிரமமாகிவிடும். ஓடத்தின் போக்கை நீரோட்டம் எளிதாக்குவதைப் போல் பக்தித் தத்துவம் நம் வாழ்க்கையின் போக்கை எளிதாக்கி விடுகிறது.

பக்தி மார்க்க சாதனை சுலபம்; ஆனால் ஆன்மஞானம் இல்லாத பொழுது முக்குணங்களைக் கடந்து அக்கரை சேருவோமென்று எண்ணுவதற்கே இல்லை. அப்படியானால் ஆன்மஞானம் பெறுவதற்கு உதவக் கூடியது எது? சத்துவ குணத்தை எப்பொழுதும் பற்றிநின்று, அதைத் தனதாக்கிக்கொண்டு, அதன் அகங்காரத்தையும் ஆசையையும் பக்தியின் மூலம் வெல்ல முயலுதலே. இச் சாதனையின் மூலம் இடையறாது முயன்று கொண்டே வந்தால் ஒரு நாள் ஆன்மதரிசனம் ஏற்படும். அதுவரை நம் முயற்சி நிற்கவேகூடாது. இது பரம புருஷார்த்தம் பற்றிய விஷயம். ஆன்ம தரிசனம் என்பது வெறும் விளையாட்டல்ல. வழி நடந்து கொண்டிருக்கும் பொழுதே ஆன்மதரிசனம் ஏற்பட்டுவிடும் என்று சொல்லமுடியாது. அதன்பொருட்டு இடையறா முயற்சியின் வெள்ளத்தைப் பெருக்கவேண்டும். பாரமார்த்திக வழிக்குள்ள ஒரு நிபந்தனையே, 'நான் ஏமாற்றத்திற்குச் சிறிதும் இடமளியேன். ஒரு கணமும் நம்பிக்கையை இழந்து அமரேன்' என்பது. இதைத் தவிர பரமார்த்தத்திற்கு வேறு சாதனமில்லை, உபாயமில்லை. சில சமயங்களில் சாதகன் களைப்புற்று,

“ உனக்கென வேதவத்தொடுநான் புலனடக்கம் புரிந்தேன் ;
எனக்குரை நீ இன்னமும் நான் என்ன செயல்வேண்டும் ?”

என்று கேட்கத் தொடங்குகிறான். ஆனால் இவ்வாறு கேட்டல் முக்கிய மில்ல. தவத்தையும் புலனடக்கத்தையும், அவை நம் இயற்கையாகவே அமைந்து போகுமாறு பயின்றுவிடவேண்டும். ‘எவ்வளவு காலம் அதனை புரிவது?’ என்ற வகையில் பேசுதல் பக்திமார்க்கத்திற்கு அழகல்ல. அதைரியத்தை, நம்பிக்கையின்மையை பக்தி ஒருபொழுதும் தோற்றுவியாது; அலுப்புத் தட்டுதல் என்பதே அதில் ஏற்படாது. பக்தியில் மேன்மேலும் உல்லாசமும், உற்சாகமும் தோன்றுவதற்கு வேண்டிய சீரிய கருத்துக்கள் இவ்வத்தியாயத்தில் வெளியிடப்பட் டுள்ளன.

## (84) சேவையின் மூவங்கங்கள் : எஜமானன், ஊழியன், சேவைக்கருவி

இவ்வுலகில் நமக்கு அளவிலடங்காத பொருள்கள் காணப்படு கின்றன. இவைகளை மூன்று பாகங்களாகப் பிரிக்கலாம். பக்தன் காலை யில் எழும்பொழுது மூன்றே பொருள்கள்தாம் அவன் கண்முன் வரு கின்றன. முதலில் அவன் மனம் பகவானிடம் போகிறது; அப்பொழுது அவன் அவருடைய வழிபாட்டிற்கு ஏற்பாடு செய்கிறான். ‘நான் ஊழியனான பக்தன், அவர் என் ஊழியத்தைப் பெறும் எஜமானர்.’ இவை இரண்டும் அவனிடம் எப்பொழுதும் சித்தமாயிருக்கின்றன. இப் பொழுது எஞ்சியுள்ள சிருஷ்டி அவரது பூஜைக்கு வேண்டிய சாதனமா கிறது. புஷ்பம், சந்தனம், தூபம், தீபம் ஆகியவற்றிற்காக இச் சிருஷ்டி அனைத்தும் ஏற்பட்டுள்ளது. மூன்றே பொருள்கள்தாம் இருப்பவை: சேவகனான பக்தன், சேவிக்கப் பெறும் பரம்பொருள், சேவைக்கு வேண்டிய சாதனங்களென்ற இச் சிருஷ்டி. இப் போதனையே இவ்வத்தி யாயத்தில் அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் ஒரு சேவகன் ஏதோ ஒரு மூர்த்தியை வழிபடுகிறானெனில் அவனுக்குச் சிருஷ்டியின் எல்லாப் பொருள்களும் பூஜைப் பொருள்களாகத் தோன்றுவதில்லை. அவன் தோட்டத்திலிருந்து நான்கு புஷ்பங்களை எடுத்துக் கொணர்ந்து, எங் கிருந்தேனும் ஊதுவத்தி வாங்கிவந்து, ஏதேனும் நைவேத்தியம் தயா ரித்துப் படைக்கிறான். அவன் பார்த்துப் பொறுக்கிப் பொருள்களை வாங்க விரும்புகிறான். ஆனால் பதினைந்தாம் அத்தியாயத்தின் பரந்த போதனையின்படி இத் தேர்வு அவசியமில்லை. தவத்திற்கும் கர்மத்திற் கும் சாதனங்களாயுள்ளவை ஆண்டவன் சேவைக்கும் சாதனங்களே.

அவைகளில் சிலவற்றை நாம் புஷ்பமென்றும், சிலவற்றைச் சந்தன மென்றும், சிலவற்றை நைவேத்தியமென்றும் சொல்வோம். இவ்வாறு உள்ள கர்மங்கள் அத்தனையையும் பூஜைப் பொருள்களாக்கிவிட வேண்டும். இந் நோக்கு இத்தகையது. அதாவது உலகில் இம் மூன்று பொருள்களே உள்ளன. கீதை நம் மனத்தில் பதிக்க விரும்பும் வைராக்கிய மயமான சாதனை மார்க்கத்திற்கே பக்திமயமான உருவை அளிக்கிறது; அதிலிருந்து உழைப்பை அகற்றி அதைச் சுலபமாக்கிக் கொடுக்கிறது.

ஆசிரமத்தில் ஒருவர் அதிக வேலை செய்யவேண்டிவரும்பொழுது, 'நான் மட்டும் எதற்காக இவ்வளவு வேலை செய்யவேண்டும்?' என்ற எண்ணமே அவர் மனத்தில் எழுவதில்லை. இதில் மிகுந்த சாரம் அடங்கியிருக்கிறது. வழிபடுகிறவனுக்கு இரண்டு மணி நேரத்திற்குப் பதிலாக நான்கு மணி நேரம் கிடைத்தால் அவன், "அட ராமா, இன்று நான்கு மணி நேரம் வழிபட வேண்டி வந்ததே!" என்று அலுத்துக்கொள்வானு? அதனுல் அவனுக்கு அதிக இன்பமே தோன்றும். ஆசிரமத்தில் இத்தகைய அனுபவம் ஏற்படுவதுண்டு. இதே அனுபவம் நமக்கு வாழ்க்கையில் எங்கும் ஏற்படவேண்டும். வாழ்க்கை சேவை மயமாகிவிட வேண்டும். அவன் சேவை பெறும் புருஷோத்தமன்; அவனது சேவைக்கு எப்பொழுதும் சித்தமாயிருக்கும் நான் அட்சர புருஷன். அட்சர புருஷன் என்பதற்கு என்றும் களைப்புருது, சிருஷ்டியின் ஆரம்ப முதல் சேவை புரிந்துவரும் சநாதன (அழிவில்லாத) சேவகன் என்பது பொருள்; அனுமார் இராமன் எதிரில் எப்பொழுதும் கைகூப்பி நிற்பதைப்போல. அவருக்குச் சோம்பல் என்பதே கிடையாது. அனுமாரைப் போலவே சிரஞ்சீவியான இச் சேவகன் சேவையிலேயே கண்ணுங்கருத்துமாய் நிற்கிருன்.

இவ்வாறு ஆயுள் முழுதும் சேவை புரிந்துவருகிறவனுக்கே அட்சர புருஷன் என்று பெயர். பரம்பொருள் என்ற இவ்வமைப்பு இருக்கிறது; அதன் சேவகனை நானும் எப்பொழுதும் இருக்கிறேன். எஜமானன் இருக்கிருனென்ருல், நானும் இருக்கிறேன். சேவை பெற்றுப் பெற்று அவன் களைக்கிருனு, சேவை செய்து செய்து நான்தான் களைக்கிறேனு பார்ப்போமே! அவன் பத்து அவதாரங்கள் எடுத்தான் எனின், எனக்கும்தான் பத்து அவதாரங்கள் ஆகியிருக்கின்றன. அவன் இராமனுனல் நான் அனுமான்; அவன் கிருஷ்ணனுனல் நான் உத்தவன். அவனுக்கு எத்தனை அவதாரங்களோ அத்தனை எனக்கும். இனிய போட்டா போட்டி! ஆண்டவனுக்கு இவ்வாறு யுக யுகாந்தரங்களிலெல்லாம் சேவை

ய்துகொண்டு, என்றும் அழிவுறுதுள்ள இந்த ஜீவனே அட்சர புருஷன் ன்பது. அவன் புருஷோத்தமனுன ஆண்டான்; நான் அவன் டிமை, சேவகன். இப் பாவனையை ஒரே வகையில் உள்ளத்தில் காண்டிருக்க வேண்டும். ஒவ்வொரு கணமும் மாறும், அளவிலடங்காத ருவங்களைத் தாங்கி விளங்கும் இச் சிருஷ்டியைப் பூஜை சாமானுக, வைக் கருவியாகச் செய்துகொள்ள வேண்டும். செய்யும் ஒவ்வொரு ரியமும் புருஷோத்தமனுக்குச் செய்யும் வழிபாடு போன்றதே.

சேவைபெறும் பரம்பொருள் புருஷோத்தமன்; சேவகனுன ஜீவன் ட்சர புருஷன்; ஆனுல் சாதனமாயுள்ள இச் சிருஷ்டி 'க்ஷரம்' அழிவது). இந்த க்ஷரம் இருப்பதில் மிக்க பொருள் அடங்கியிருக்கிறது. து சிருஷ்டியிலுள்ள குறைபாடல்ல, ஒரு சிறப்பே. இதனுல் சிருஷ்டி ல் ஒவ்வொரு நாளும், எப்பொழுதும் புதுமை தோன்றிக்கொண்டே ருக்கிறது. நேற்றைய பூக்கள், இன்று உதவா. அவை நிர்மால்யம் அகற்ற வேண்டியவை) ஆகிவிட்டன. சிருஷ்டி அழியக் கூடியதாயிருப் தைப் பாக்கியமென்றே கருதவேண்டும். அது சேவையிலுள்ள சிறப் ாகும். ஒவ்வொரு நாளும் புதிய புஷ்பம் சேவைக்குச் சித்தமாய்க் டைக்கிறது. அவ்வாறே, நான் இவ் வுடலையும் புத்தம் புதியதாய் ற்று ஆண்டவனுக்குப் பணிபுரிவேன். நான் என் சாதனங்களுக்கு ன்ருடம் புதிய உருவளித்து அவைகளைக் கொண்டே அவனை வழிபடு வன். இவ்வழியும் தன்மையே இதற்கு இவ்வழகைத் தருகிறது. ந்திரனது கலை இன்றுள்ளது நேற்றிருக்கவில்லை. சந்திரனிடம் ஒவ் வாரு நாளும் புதிய வனப்புக் காண்கிறது. திருதியை (மூன்ரும் றை)யில் அவ் வளரும் சந்திரனைக் காண எவ்வளவு இன்பமாயிருக் றது! சங்கரனுடைய தலையில் அப் பிறைச் சந்திரன் எப்படி மின்னு றது! அஷ்டமிச் சந்திரனது அழகு வேறு வகை. அன்று வானத்தில் பாறுக்கியெடுத்த சில முத்துக்களே காணப்படும். பூர்ணிமையன்று ந்திரனது ஒளி காரணமாக நட்சத்திரங்களே தென்படுவதில்லை. ர்ணிமையன்று கடவுளின் முகசந்திரனைக் 'காண்கிறோம். அமாவாசை ன் இன்பம் மிகவும் கம்பீரமானது. அன்றைய இரவில் எத்தகைய மைதி, கலக்கமில்லா அமைதி! சந்திரனது மாய ஒளி அகன்றுவிடுவ னுல் சிறிதும் பெரிதுமான எண்ணற்ற நட்சத்திரங்கள் மிகுந்த சுதந் ரத்துடன் இஷ்டம்போல் ஒளி வீசுகின்றன. அமாவாசையன்று சுதந் ரம் தன் பூரண உருவில் விளையாடுகிறது. தன் ஒளியைப் பெருமை யைக் காட்டிக் கொள்ளும் சந்திரன் இன்று அங்கே இல்லை; தனக்கு ளியளிக்கும் சூரியனுடன் அது ஒன்றிவிட்டது; அது ஆண்டவனுடன்

கலந்துவிட்டது. அன்று ஜீவன் தன்னையே அர்ப்பணம் செய்வதனால் எவ்வாறு உலகிற்குச் சிறிதும் துன்பம் விளைவியாது என்பதை அது காட்டுவதுபோலிருக்கிறது. சந்திரனது சொரூபம் க்ஷரம், மாறக் கூடியது; ஆனால் அது வெவ்வேறு உருவங்களில் இன்பமளிக்கிறது.

சிருஷ்டியின் நிலையாமையே அதன் அழிவின்மை. சிருஷ்டியின் உருவம் கலகலவென (அருவிபோல்) ஓடிக் கொண்டேயிருக்கிறது. அவ்வுருவ கங்கை ஓடிக்கொண்டேயிராவிடில் அது ஒரு தேக்கமாகிவிடும். ஆற்றின் வெள்ளம் இடையறாது ஓடிக்கொண்டே, தொடர்ந்து மாறிக் கொண்டேயிருக்கிறது; ஒரு துளி போவதும், மற்றொன்று வருவதுமாயிருக்கிறது, ஆகையால் அந்நீர் உயிருடன் விளங்குகிறது. பொருளில் காணும் இன்பத்திற்குக் காரணம் அதன் புதுமையே. கோடையில் பரம் பொருளுக்கு வேறுவகைப் புஷ்பங்கள் சாத்தப்படுகின்றன; மாரிக்காலத்திலோ பசிய அருகம்புல் அணிவிக்கப்படுகிறது; சரத்காலத்தில் அழகிய தாமரை மலர்கள். அந்தந்தக் காலத்தில், ருதுவில் தோன்றும் பழங்கள்-புஷ்பங்களினால் பகவானுக்குப் பூஜை செய்யப்படுகிறது. இதனாலேயே அப் பூஜை ஒளி பொருந்தியதாய், ஒவ்வொரு நாளும் புதிதாய்த் தோன்றுகிறது. அதனால் மனத்திற்கு அலுப்புத் தோன்றுவதில்லை. சிறிய குழந்தைக்கு ‘க’ என்ற எழுத்தை எழுதிக் கொடுத்து, “இதன் மீதே எழுதிக்கொண்டிரு; இதை இன்னும் பருமனாக்கு” என்று சொன்னால் இதைச் செய்து செய்து அவனுக்கு அலுத்துப் போகிறது. இதை எதற்காகப் பருமனாக்குவதென்றே அவனுக்குப் புரிவதில்லை. அவன் பென்சிலைத் தடிமனாகச் செய்துகொண்டு எழுத்தை விரைவில் எழுதிவிடுகிறான். ஆனால் பிறகு புதிய எழுத்துக்களை, அவைகளின் தொகுதியைப் பார்க்கிறான்; விதவிதமான புத்தகங்களைப் படிக்கத் தொடங்குகிறான்; பல வகை இலக்கிய மலர்களை அனுபவிக்கிறான். அப்பொழுது அவனுக்கு எல்லையற்ற இன்பம் ஏற்படுகிறது. இதுவேதான் சேவையிலும். சாதனங்கள் ஒவ்வொரு நாளும் புதிதாய் இருப்பதனால் சேவையில் உற்சாகம் பெருகுகிறது.

சிருஷ்டியின் இவ்வழியும் தன்மை ஒவ்வொரு நாளும் புதுப் புஷ்பங்களை மலரச் செய்கிறது. கிராமத்தினருகில் மயானமிருக்கிறது; இதனால் கிராமம் அழகாய்த் தோன்றுகிறது. பழையவர்கள் போய்க்கொண்டிருக்க, புதிய குழந்தைகள் பிறந்துகொண்டிருக்கிறார்கள். சிருஷ்டி நவநூதனமாய்த் தினமும் நடந்துகொண்டேயிருக்கிறது. புறத்தேயுள்ள அம்மயானத்தை அகற்றினால் அது வீட்டினுள் வந்து அமர்ந்துவிடும். அதே மனிதர்களை ஒவ்வொரு நாளும் தொடர்ந்து பார்த்துப்

ர்த்து உனக்கு அலுப்புத்தட்டிவிடும். கோடையில் வெயில் காய்கிறது;
பி கொதித்துப் போகிறது. ஆனால் நீ இதைக் கண்டு அஞ்சாதே;
ந நிலை மாறும். மழையின் இன்பத்தை அனுபவிப்பதற்கு இவ்வெரிச்சல்
வைவையே. பூமி நன்கு காய்ந்து கொதித்துக்கொண்டிராவிட்டால்
மழை பொழிந்ததும் சேருகிவிடும். பிறகு அதில் புல்லும் தானியமும்
லையா. நான் ஒரு சமயம் வெயிலில் சுற்றிக் கொண்டிருந்தேன்.
ல கொதித்துக்கொண்டிருந்தது. மிக்க இன்பமாயிருந்தது. என்
டம் ஒரு நண்பர், "தலை கொதித்துப் போகும்; பிறகு சிரமமாகும்"
னருர். நான், "கீழே மண் கொதித்துக்கொண்டிருக்கிறது; மண்ணு
ன இவ்வுடலும் சிறிது கொதிக்கட்டுமே!" என்றேன். ஆகா! தலை
ாதித்துக் கொண்டிருக்கையில் அதில் நீர் வந்து பொழியுமானுல்
வ்வளவு இன்பம்! ஆனுல் கோடை வெயிலில் காயாதவன் மழை பெய்
யில் தன் புத்தகங்களில் தலையை நுழைத்துக்கொண்டுதான் அமர்ந்
நப்பான்; தன் அறையில், அச் சவக்குழியில் புகுந்துகொண்டுதா
ருப்பான்; வெளியிலுள்ள விசாலமான அபிஷேக பாத்திரத்தின்கீழே
னந்தமாய் நின்றுகொண்டு ஆடமாட்டான்! ஆனுல் நம் அந்த மனு
ரிஷி பெரிய இரசிகர், சிருஷ்டியில் பற்றுள்ளவர். அவர் தம் ஸ்மிருதி
ல், "மழை பொழிகையில் விடுமுறை அளித்துவிடு" என்று எழுது
ர். மழை பெய்து கொண்டிருக்கையில் ஆசிரமத்துள் அமர்ந்து
ந்தை"* சொல்லிக் கொண்டிருப்பதா? மழையில் ஆடவும் பாடவு
லவோ வேண்டும், சிருஷ்டியுடன் கலந்துவிடவல்லவோ வேண்டும்!
ழையில் மண்ணும் விண்ணும் கலக்கின்றன. இவ்வழகிய காட்சி
வ்வளவு இன்பம் பயப்பது! இச் சிருஷ்டியே நமக்குப் போதனை
ரிக்கிறது.

சிருஷ்டியின் மாற்றத்தின், அழிவின் பொருள் சாதனங்களின்
துமையாகும் என்பது கருத்து. இவ்வாறு புதிது புதிதாய்ச் சாதனப்
ாருள்களை உண்டாக்கித் தரும் சிருஷ்டியும், வரிந்து கட்டிக்கொண்டு
வைக்கென நிற்கும் என்றென்றுமுள்ள சேவகனும், சேவை பெறும்
ம்பொருளும். இனி நடக்கட்டுமே வேடிக்கை! அந்தப் பரமபுருஷ
ன புருஷோத்தமன் புதிது புதிதான சேவைச் சாதனங்களை அளித்து
னிடம் அன்பில் உதிக்கும் சேவைகளைப் பெற்றுக் கொண்டிருக்
ருன்; பல்வேறு சாதனங்களை அளித்து என்னைப் போஷித்துக்கொண்
நக்கிருன்; விதவிதமான பிரயோகங்களை என்மூலம் செய்விக்கிருன்.

* வேதம் ஓதுகையில் ஆசிரியர் ஒரு முறை சொல்லுவதை சீடர்கள்
நமுறை திரும்பச் சொல்லுதல்.

நமக்கு வாழ்க்கையில் இத்தகைய நோக்கு ஏற்பட்டுவிடுமாஞல் எவ்வளவு
இன்பம் விளையும்!

## (85) ஆணவமற்ற சேவையே பக்தி

நம் செயல் ஒவ்வொன்றும் பக்தி மயமாய் இருக்கவேண்டும் என்று
கீதை விரும்புகிறது. அரை அல்லது ஒரு மணி நேரம் கடவுளை வழி
படுதல் சரியே. காலையிலும் மாலையிலும் அழகிய சூரிய ஒளி தன் வர்ண
விசித்திரங்களைப் பரப்புகையில் சித்தத்தை ஒரு நிலையில் நிறுத்திச்
சிறிது நேரம் உலகை மறந்து அனந்தத்தைச் சிந்தித்தல் உயர்ந்ததே.
இவ்வனுஷ்டானத்தை என்றும் விடக்கூடாது. ஆனல் கீதை இத்துடன்
திருப்தியடையவில்லை. காலையிலிருந்து மாலைவரை நடைபெறும் எல்
லாக் காரியங்களுமே கடவுள் வழிபாட்டிற்கென அமையவேண்டும். குளிக்
கும்பொழுதும், உணவருந்தும்பொழுதும், நடக்கும்பொழுதும், கூட்டும்
பொழுதும் அவன் நினைவிருக்க வேண்டும். கூட்டும்பொழுது நான்
என் பிரபுவின், என் வாழ்வின் தேவனது வீட்டைக் கூட்டுகிறேனென்ற
பாவனை இருக்கவேண்டும். நம் காரியங்களனைத்தும் இவ்வாறு பூஜைக்
காரியங்கள் ஆகிவிடவேண்டும். இந்நோக்கு ஏற்பட்டுவிடும்பொழுது
உங்கள் விவகாரங்கள் எவ்வளவு தூரம் மாறிப்போகின்றன என்பதைப்
பாருங்கள். நாம் எவ்வளவு கவனமாய்ப் பூஜைக்கு புஷ்பம் எடுக்கிறோம்;
அவைகளைச் சாக்கிரதையாய் தட்டில் வைக்கிறோம்; அவை அமுங்கிப்
போகக்கூடாதே, நசுங்கக்கூடாதே, வாடக்கூடாதே என்று எவ்வளவு
கவனமாய் இருக்கிறோம்! புதுமை மங்கிவிடக் கூடாதென்பதற்காக
நாம் அவைகளை மூக்கினருகில் கொண்டுபோவதில்லை. இதே நோக்கம்,
இதே பாவனை நம் வாழ்க்கையின் ஒவ்வொரு காரியத்திலும் இருந்துவர
வேண்டும். என் இக் கிராமத்தில், என் அயலானின் உருவில் என்
நாராயணன், என் பிரபு அல்லவா விளங்கிக்கொண்டிருக்கிறன்? ஆகை
யால் இக் கிராமத்தை நான் சுத்தமாய், துப்புரவாய் வைத்துக்கொள்
வேன். கீதை நமக்கு இந் நோக்கைத் தர விரும்புகிறது. நம் காரியங்க
ளனைத்தும் கடவுள் வழிபாடாகவே ஆகிவிடவேண்டும் என்பது கீதை
யின் பேராவல். கீதையைப் போன்ற கிரந்தராஜனுக்கு, அரை மணி,
ஒரு மணி நேரம் செய்யும் பூஜையில் திருப்தியில்லை. வாழ்க்கை முழு
வதுமே ஆண்டவன் மயமாகி விடவேண்டும், வழிபாடுமயமாகிவிட
வேண்டும் என்பது கீதையின் தீவிர விருப்பம்.

கீதை புருஷோத்தம யோகத்தை விளம்பிக் கர்மமயமான வாழ்க்கை
யைப் பூரண நிலையில் கொண்டுசேர்க்கிறது. அவன் சேவைபெறும்

ஷோத்தமன், நான் அவன் சேவகன், சேவைக்குச் சாதனமாயிருப் இச் சிருஷ்டி அனைத்தும் என்ற இவ்விஷயம் நமக்கு நன்கு புலனுகி மோனுல் வேறு என்ன வேண்டும்? துகாராம்,

" கிட்டிடின் காட்சியே செய்குவன் சேவையே;
எட்டுணை இன்பமும் ஈசனே வேண்டிடேன்!"*

ாகிருர்.

பிறகோ நாம் இடையருது சேவையே செய்துகொண்டிருப்போம். ப்பொழுது 'நான்' என்பதொன்றே இராது; 'நான்' 'எனது' என்ற லாவற்றையும் துடைத்துவிடுவேன். எஞ்சியிருப்பவை அனைத்தும் ம்பொருளுக்காகவே இருந்துவரும். பிறர் நன்மையின் பொருட்டு ழ்வதைத் தவிர வேறெதுவுமே இராது. கீதை மீண்டும் மீண்டும் றுவது: நான் என்னிடமிருந்து அகங்காரத்தை, ஆணவத்தை கற்றி என் வாழ்க்கையை ஆண்டவனிடம் ஆழ்ந்ததாய், பக்திமயமாய் க்குவேன். சேவைபெறும் பரம்பொருள், சேவகனுன நான், சாதன ன இச் சிருஷ்டி. வெளவுதல் என்ற பேச்சே எங்கும் இல்லை. வாழ்க் கயில் இனி எதற்கும் கவலையே இல்லை!

## (86) ஞானலட்சணம்

இவ்வாறு நாம் இதுவரை கர்மத்தில் பக்தியை இணைக்கவேண்டும் ன்பதைப் பார்த்தோம். அதில் ஞானத்தின் அமிசமும் இருந்தாக பண்டும்; இல்லையேல் கீதைக்குத் திருப்தி தோன்ருது. ஆனுல் இவை ன்றும் வெவ்வேறென்பது இதன் பொருளல்ல. புரிவதற்காக நாம் வைகளை வேறுபடுத்திப் பேசுகிருேம். கர்மம் என்பதன் பொருளே க்திதான்; பக்தியைத் தனியாய்க் கொணர்ந்து கர்மத்துடன் சேர்க்க வண்டியிருப்பதில்லை. ஞானமும் அப்படியேதான். இந்த ஞானம் வ்வாறு கிடைக்கும்? "எங்கும் புருஷனைக் காண்பதனுல்" என்கிறது தை. நீ சேவை புரியும் என்றென்றுமுள்ள சேவகன்; அப் புருஷோத்த ன் சேவைபெறும் புருஷன். பல்வேறு உருவங்களைத் தாங்கும், எப் பாழுதும் பெருகிக் கொண்டேயிருக்கும், பல்வேறு சாதனங்களையளிக் ம் இச் சிருஷ்டியும் புருஷனே. இத்தகைய நோக்குக் கொண்டிருப் தன் பொருளென்ன? எல்லாவிடங்களிலும் மருவற்ற, தூய சேவா வம் கொள்ளவேண்டும். உன் காலின் செருப்பு சர்...சூ...வென்று

* झालिया दर्शन करीन मी सेवा
आणिक कांहीं देवा न लगे दुजें।

சத்தமிடுகிறது; அதில் கொஞ்சம் எண்ணெய் போடு. அதிலும் பரம் பொருளின் அமிசமே இருப்பதால் அதைக் கவனித்து நல்ல நிலையில் வைத்திருக்கவேண்டும். சேவைக் கருவியான இவ்விராட்டைக்கும் எண்ணெய் இடு. இது சத்தம் போடுகிறதே, இதைக் கவனி. இது नेति-नेति (நேதி நேதி) "நூல் நூற்க மாட்டேன்" என்கிறது. இவ் விராட்டை, சேவைக்குதவும் இக்கருவி—இதுவும் புருஷனே. இதன் மாலை, இதன் இப் பூணூலை நன்ருய் வைத்துக்கொள். சிருஷ்டியனைத் தையும் சைதன்ய மயமாய்க் கருது; இதை ஜடமென்று எண்ணுதே. இனிய ஓங்கார கானம் செய்யும் இவ்விராட்டை ஜடப்பொருளா? இது பரம்பொருளின் உருவே. சிராவண (ஆவணி) அமாவாசையன்று அகங் காரத்தைத் துறந்து நாம் எருதைப் பூஜை செய்கிருேம்.* இது ஒரு பெரிய விஷயம். இப் பண்டிகையை தினமும் கருத்தில் கொண்டு, எருதுகளை நன்கு பாதுகாத்து, அவைகளிடம் உசிதமான வேலை வாங்க வேண்டும்; பண்டிகையன்று உண்டாகும் பக்தி அன்ருேடு சரியென்று எண்ணிக்கொண்டுவிடக்கூடாது. எருதும் பரம்பொருளின் உருவமே. அந்த ஏரையும், விவசாயக் கருவிகள் எல்லாவற்றையும் நன்ருய்க் கவனித்து வைத்திருப்பீர். சேவைக்குதவும் எல்லாக் கருவிகளும் புனித மானவை. இந் நோக்கு எவ்வளவு பரந்தது! பூஜை செய்தல் என்ப தற்குப் புஷ்பமும் சந்தனமும் சாத்திப் பன்னீர் தெளித்தல் என்பதல்ல பொருள். அப் பாத்திரங்களைக் கண்ணுடிபோன்று தேய்த்துத் துப்புர வாய் வைத்துக்கொள்ளுதலே பாத்திரங்களின் பூஜை. விளக்கைத் துடைத்துவைத்தல் விளக்கைப் பூஜிப்பதாகும். அரிவாளைத் தீட்டிப் புல்லறுப்பதற்கு அதைச் சித்தமாய் வைத்திருத்தல் அதைப் பூஜிப்ப தாகும். கதவின் கீலில் துரு ஏறிவிடுமாதலால் அதற்கு எண்ணெயிடு தல் அதைப் பூஜிப்பதாகும். வாழ்க்கையில் எங்கும் இந்நோக்குடன் காரியம் செய்யவேண்டும். சேவைக் கருவிகளைச் சிறந்தவையாயும் துப்புரவாயும் வைத்திருக்கவேண்டும். நானும், அட்சர புருஷனுன அப் புருஷோத்தமனும், சாதனமாயுள்ள இச் சிருஷ்டியும்; அதுவும் புரு ஷனே, பரம்பொருளே என்பது கருத்து. எங்கும் ஒரே சைதன்யம் விளங்காநிற்கிறது என்ற இந்நோக்கு வந்துவிட்டதெனில் நம் கர்மத்தில் ஞானம் வந்துவிட்டதென எண்ணலாம்.

முதலில் கர்மத்தில் பக்தியின் அமிசத்தைச் சேரு. இப்பொழுது ஞானத்தையும் இணைத்துவிட்டால் இவற்றினுல் ஓர் அபூர்வமான

---

* இது மகாராஷ்டிரத்தில் வழங்கும் ஒரு பண்டிகை. இதை அங்கே போலா என்கிருர்கள்.

வாழ்க்கை ரசாயனம் (மருந்து) அமையும். கீதை நம்மை இறுதியில் அத்வைதமயமான சேவா மார்க்கத்தில் கொணர்ந்து விட்டுவிட்டது. இச் சிருஷ்டியில் எங்கு பார்த்தாலும் மூன்று புருஷர்கள் விளங்குகிறார்கள். ஒரே புருஷோத்தமன் இம் மூன்று உருவங்களைத் தாங்கி நிற்கிறான். உண்மையில் மூன்று புருஷர்களும் சேர்ந்து ஆவது ஒரே புருஷனே, அத்வைதமே, ஒன்றே. இங்கே கீதை நம்மை மிகவும் ஓங்கிய சிகரத்தின்மீது ஏற்றி அமர்த்திவிட்டது. கர்மம், பக்தி, ஞானம் எல்லாம் ஒன்றாயின. ஜீவன், சிவன், சிருஷ்டி எல்லாம் ஒருருவாகி, ஒருயிராகி விட்டன. கர்மம், பக்தி, ஞானம் ஆகியவற்றினிடையே வேற்றுமை அற்றுவிட்டது. ஞானதேவர் 'அமிர்தானுபவ'த்தில் தமக்குப் பிரியமான உதாரணத்தைத் தந்திருக்கிறார் :

"வெட்டியே மலையைக் கோயிலாக்கினேன் தேவனோடு
மட்டிலா பக்திதானும் மாறிலெனிஃதே போன்று?" *

ஒரே கல்லைக் குடைந்து கோயிலமைத்து, அக்கோயிலுள் கல்லினாலேயே கடவுள் சிலையமைத்து, அதனெதிரில் கல்லினாலேயே ஒரு பக்தனும் அவனருகில் கல்லிலேயே பழங்களும் குடைந்து செதுக்கி அமைக்கிறோம். ஒரே பெரும் பாறை இங்கே அநேக உருவங்களாய் அமைந்திருப்பதைப்போல பக்தியின் விவகாரங்களிலும் ஏன் நடைபெறக்கூடாது? எஜமானன், ஊழியன் என்ற உறவிலும் ஒற்றுமை இருந்தால் என்ன? இவ் வெளிச்சிருஷ்டி, இவ்வழிபாட்டுப் பொருள்கள் வெவ்வேறாயிருந்தும் அவை ஏன் ஆன்ம உருவாகக்கூடாது? மூன்று புருஷர்களும் ஒன்று தானே? ஞானம், கர்மம், பக்தி என்ற இம்மூன்றையும் சேர்த்து ஒரே வாழ்க்கைப் பெருவெள்ளமாக்கல் வேண்டும். இத்தகையது இப் பரிபூரணமான புருஷோத்தம யோகம் என்பது. தலைவன், ஊழியன், சேவைப்பொருள் என்ற எல்லாம் ஒரே உருவைச் சேர்ந்தவையே—பக்தி, அன்பு என்ற விளையாட்டு விளையாடலாமே!

இவ்வாறு இப் புருஷோத்தம யோகம் தன் உள்ளத்தில் பதியப் பெற்றவனே உண்மையான பக்திமான்.

"கண்ணனையோரிடத்துமின்றி யதனிலே வைக்கிற் காதல்"

இத்தகைய புருஷன் ஞானியாயிருந்தும் பூரண பக்தனாயிருக்கிறான். ஞானமுள்ளவனிடம் பக்தி இருக்கவே செய்கிறது. ஆண்டவனைப்பற்றிய ஞானமும் ஆண்டவனிடம் அன்பும் வெவ்வேறல்ல. பாகற்காய் கசப்பு

* देव देऊळ परिवारु । कीजे कोरूनि डोंगरु
तैसा भक्तीचा वेव्हारु । कां न होआवा ।

என்று தெரிந்ததும் அதனிடம் விருப்பம் தோன்றுது; ஒன்றிரண்டு விதி விலக்குகளும் இருக்கலாம். ஆனால் கைப்பை உணர்ந்ததும் வெறுப் புண்டாகிவிடுகிறது. கற்கண்டு என்று தெரிந்ததுமோ நாக்கில் நீர் ஊறுகிறது; ஆசை தோன்றுகிறது. ஆண்டவனைப் பற்றியோ ஞானம் உதயமாதல், அன்பு தோன்றுதல் என்ற இரண்டும் ஒன்றே. ஆண்ட வன் உருவத்தின் இனிமையை இச் சாதாரணச் சர்க்கரையுடன் ஒப்பிடு வதா? அவ்வினிய ஆண்டவன் ஞானமேற்படும் அதே கணத்தில் அவ னிடம் அன்பும் தோன்றிவிடும். ஞானமுண்டாதல், பக்தி தோன்றுதல் என்ற இவை இரண்டும் வெவ்வேறல்ல என்றே கொள்ளுங்கள். அத்வை தத்தில் பக்திக்கு இடமுண்டா, இல்லையா என்ற இந்த வாதத்தில் சாரமே இல்லை. ஞானதேவர்,

"அதுவே பக்தி, அதுவே ஞானம்;
இரண்டும் அந்த விட்டலனே"*

என்கிறார். பக்தி, ஞானம் என்ற இரண்டும் ஒரே பொருளின் இரு பெயர்களே.

வாழ்க்கையில் பரம பக்தி பரவிவிடுமாயின் அப்பொழுது நடை பெறும் கர்மம், பக்தி ஞானம் ஆகியவற்றிலிருந்து வேறுயிராது; கர்ம மும் பக்தியும் ஞானமும் சேர்ந்து ஒரே இனிய உருவாய் அமைந்து விடும். இவ்வினிய உருவிலிருந்து அற்புதமான, அன்புமயமான, ஞானமயமான சேவை தானே தோன்றும். தாயினிடம் அன்பிருக்கிறது; ஆனால் இது அன்பைக் காட்டும் கர்மத்தின் மூலம் வெளியாகிறது. அன்பு எப்பொழுதும் தன் உயிரை அளித்துக்கொண்டு, தன் உடலைத் தேய்த்துக்கொண்டு, சேவையின் உருவில் வெளிப்பட்டுக் கொண்டிருக் கிறது. அன்பின் வெளி உருவே சேவை என்பது. அன்பு எண்ணி லடங்காச் சேவைக் காரியங்களினால் தன்னை அலங்கரித்துக்கொண்டு நர்த்தனம் புரிகிறது. அன்பிருக்குமாயின் அங்கே ஞானமும் வந்து சேரும். நான் ஒருவருக்குச் சேவை புரியின் அவருக்கு எந்தச்சேவை பிடிக்கும் என்பது எனக்குத் தெரிந்திருக்கவேண்டும். இல்லையேல் இது சேவையே செய்யாததுபோன்றும் மாறுனதொன்றைச் செய்தது போன் றும் ஆகும். சேவை பெறுவோரைப்பற்றி அன்புள்ளவருக்குத் தெரிந் திருக்க வேண்டும். அன்பின் வளத்தைக் காரியத்தின் மூலம் பரப்பு வதற்கு ஞானம் தேவை. ஆனால் அது அன்பிலிருந்து தோன்றியதா யிருக்கவேண்டும். இல்லாவிடில் ஞானம் உபயோகமற்று, வீணுகிவிடும். அன்பின் மூலம் செய்யப்படும் காரியம் சாதாரணக் காரியத்திலிருந்து

* हें चि भक्ति हें चि ज्ञान । एक विठ्ठल चि जाण ॥

வருயிருக்கும். வயலிலிருந்து களைத்துச் சோர்ந்து வீடு திரும்பும் ள்ளையைத் தாய் அன்புடன் பார்த்து, "குழந்தாய், களைப்பாயிருக் றதோ?" என்கிறள். ஆனால் இச் சிறு காரியத்தில்தான் எவ்வளவு க்தி பொதிந்திருக்கிறது, பாருங்கள்! தம் வாழ்க்கையின் காரியங்க ளனைத்திலும் ஞானமும் பக்தியும் நிரம்பித் ததும்புமாறு செய்யுங்கள். துவே புருஷோத்தம யோகம் என்பது.

## (87) சர்வவேத சாரம் என் கையில்

இவையெல்லாம் வேதங்களின் சாரம். வேதங்கள் எல்லையற்றவை. ஆனால் அவ்வெல்லையற்ற வேதங்களின் சாரச் சுருக்கமே இப் புருஷோத் ம யோகம். இவ்வேதம் எங்கே இருக்கிறது? வேதங்களின் விஷயம் சித்திரமானது. வேதங்களின் சாரம் இருப்பதெங்கே? அத்தியாயத் ன் தொடக்கத்திலேயே, "எதன் இலைகள் வேதங்களோ" என்று சால்லியிருக்கிறது. தம்பி, வேதங்கள் இம்மரத்தின் ஒவ்வொரு இலை லும் பொதிந்துள்ளன. வேதங்கள் அந்தச் சம்ஹிதைகளிலும் ங்கள் சுவடிகளிலும் புத்தகங்களிலும் மறைந்திருக்கவில்லை. அவை லகில் எங்கும் வியாபித்துள்ளன. ஆங்கிலக் கவிஞர் ஷேக்ஸ்பியர்,

"பெருகும் அருவிகளில் நூல்கள், பாறைகளில் பேருரைகள்"*

ன்கிறர். வேதங்கள் ஸம்ஸ்கிருதத்திலும் இல்லை, ஸம்ஹிதைகளிலு ல்லை, சிருஷ்டியில் அடங்கியிருக்கின்றன என்பது கருத்து. சேவை சய்தால் அவை புலனாகும். "प्रभाते करदर्शनम्" (ப்ரபாதே கர தர் னம்). காலையில் விழித்ததும் தன் உள்ளங்கையைப் பார்க்க வண்டும். வேதங்களெல்லாம் அக் கையில் பொதிந்துள்ளன. அவ் வதம் "சேவை செய்" என்கிறது. நேற்று கையினால் வேலை செய் ாயா, இல்லையா? இன்று செய்யமுடியுமா, முடியாதா? அதில் வேலை சய்ததன் அறிகுறிகள், தழும்புகள் இருக்கின்றனவா, இல்லையா என்று ார். சேவை செய்து கை தேய்ந்துபோகும்பொழுது பிரம்மா தலையி லழுதி இருப்பது தெளிவுறும். நாம் அதைப் படிக்கலாம். 'காலையில் கையைப் பார்த்தல்' என்பதன் பொருள் இதுவே.

வேதம் எங்கே இருக்கிறது? தம்பி, உன் கைகளில்தானிருக்கிறது. ங்கராச்சாரியருக்கு எட்டாம் வயதிலேயே வேதங்களெல்லாம் வந்து விட்டனவென்று சொல்லுகிறர்கள். பாவம், சங்கராச்சாரியர் மந்த புத்தி பாலும்! அவருக்கு எட்டு வருஷங்கள் பிடித்திருக்கின்றனவே! ஆனால் ங்களுக்கும் எனக்கும் பிறவியிலேயே அவை கிடைத்துவிட்டன; எட்டு

* Books in running brooks, sermons in stones.

வருஷங்களெதற்கு? நான் உயிருள்ள, விழிப்புள்ள வேதமே. இது வரை சென்றுள்ள பரம்பரையனைத்தும் என்னுள் பொதிந்து கிடக்கின்றன. நான் அப்பரம்பரையின் விளைவாவேன். அவ்வேத வித்தினின்று தோன்றிய பழமே நான். என்னுள் நான் அளவிலடங்கா வேதங்களின் விதைகளைச் சேர்த்து வைத்துள்ளேன்; என் உதரத்துள் வேதங்கள் ஐந்தல்ல, ஐம்பது மடங்கு பருத்துப்போயிருக்கின்றன. வேதங்களின் சாரம் நம் கைகளில் அமைந்திருக்கிறது என்பது கருத்து. சேவை, அன்பு, ஞானம் என்ற இவைகளை அடிப்படையாய்க் கொண்டு நாம் வாழ்க்கையை உருவாக்க வேண்டும். இதுவே வேதங்கள் கையிலிருக்கின்றன என்பது. நான் உரைக்கும் பொருள் வேதமேயன்றி வேதம் என்பது புறத்தே எங்கோ உள்ளதல்ல. சேவையே உருவெடுத்தது போன்ற மகான்கள், “வேதங்களின் பொருள் எமக்கே தெரியும்” என்கிறார்கள். பகவான், “எல்லா வேதங்களும் என்னையே அறிகின்றன. நானே வேதங்களனைத்தின் சாரமான புருஷோத்தமன்” என்று கூறுகிறார். வேதங்களின் சாரமான இப் புருஷோத்தம யோகத்தை நாம் வாழ்க்கையில் செயல்படுத்த முடியுமானால் தமதாக்கிக்கொள்ள இயலுமானால் எவ்வளவு நன்றாயிருக்கும்! பிறகு இத்தகைய புருஷன் செய்பவைகளிலிருந்தும் வேதங்களே தோன்றுகின்றனவென்று கீதை தெரிவிக்கிறது. இவ்வத்தியாயத்தில் முழுவதின் சாரம் வந்துவிட்டது. கீதையின் போதனை இதில் பூரணமாய் வெளியாகியிருக்கிறது. அதைத் தம் வாழ்க்கையில் புகுத்துவதற்கு அனைவரும் அல்லும் பகலும் முயலவேண்டும். வேறு என்ன வேண்டும்?

ஞாயிறு, 29-5-’32

### பதினாறும் அத்தியாயம்

## அநுபந்தம் 1—தேவாசுரப் போக்குகளிடை போர்

### (88) புருஷோத்தம யோகத்தின் முன்னொளி: தேவ சம்பத்து

கீதையின் முதல் ஐந்து அத்தியாயங்களில் வாழ்க்கையின் முழுத் திட்டம் என்ன, நம் வாழ்க்கையை எவ்வாறு வெற்றி பெறச் செய்வது என்பதைப் பார்த்தோம். அதன் பிறகு ஆறும் அத்தியாயம் முதல் பதினோராம் அத்தியாயம் வரை பக்தியை வெவ்வேறு வகையில் ஆய்ந்தோம். பதினோராம் அத்தியாயத்தில் பக்தியைக் கண்டோம். பன்னிரண்டில் சகுண—நிர்குண பக்திகளை ஒப்பிட்டு பக்தனது சீரிய இலட்

ங்களைத் தெரிந்து கொண்டோம். பன்னிரண்டாம் அத்தியாயம்
ய கர்மம், பக்தி என்ற இரு தத்துவங்களை அலசினோம். மூன்றாவ
ன ஞானம் என்ற பகுதி எஞ்சியிருந்தது. அதை நாம் பதின்மூன்று,
ான்கு, பதினைந்து ஆகிய அத்தியாயங்களில் தெரிந்துகொண்டோம்
அதாவது ஆன்மாவை உடலிலிருந்து வேறாய்ப் பிரித்தல், அதன்
ாருட்டு முக்குணங்களை வெற்றிகொண்டு இறுதியில் எங்கும் ஆண்டவ
க் காணல் என்பது. பதினைந்தாம் அத்தியாயத்தில் வாழ்க்கையின்
பூரண சாத்திரத்தைப் படித்துவிட்டோம். புருஷோத்தம யோகத்
வாழ்க்கை பூரணநிலை எய்துகிறது. அதன்பின் எஞ்சுவது எதுவு
லை.

கர்மம், ஞானம், பக்தி என்றவைகளை வெவ்வேறாய்ப் பிரித்தல்
க்குச் சம்மதமல்ல; என்றால் அதை ஏற்கமுடிவதில்லை. சில சாத
களுக்குத் தம் நிஷ்டை காரணமாகக் கர்மமொன்றேதான் தோன்று
து. சிலர் பக்தியை ஒரு தனி வழியாய்க் கற்பனை செய்துகொண்டு
தையே முழுதும் வற்புறுத்துகிறார்கள். சிலர் போக்கோ ஞானத்தை
க்கியதாயிருக்கிறது. வாழ்க்கையின் பொருள் வெறும் கர்மம், வெறும்
தி, வெறும் ஞானம் என்பதல்ல. இந்த ‘வெறும்’ அல்லது ‘மாத்திரம்’
பது எனக்குப் பிடிப்பதில்லை. இதற்கு மாறாகக் கர்மம், பக்தி,
னம் என்பவற்றைக் கூட்டியமைப்பதையும் நான் ஒப்புக் கொள்
ன். பக்தியில் சிறிது, ஞானத்தில் சிறிது, கர்மத்தில் சிறிது எனப்
ம் உபயோக வாதமும் எனக்குச் சம்மதமல்ல. முதலில் கர்மம்,
பக்தி, அதன் பிறகு ஞானமென்ற வரிசை முறையையும் நான் ஒப்ப
டேன். மூன்றையும் கலந்து கதம்பமாக்கவும் நான் சம்மதியேன்.
க்குக் கர்மமே தான் பக்தி, அதுவே தான் ஞானம் என்பதை
னரவே விருப்பம். ஒரு மிட்டாய்த் துண்டின் இனிப்பு, அதன்
வம், அதனெடை என்ற இவை வெவ்வேறானவையல்ல. ஒரு
சூர்ப்பாகுத் துண்டை வாயில் இட்டுக்கொண்டவுடன் நாம் அத
வை உண்பதோடு அதன் எடையையும், அதன் இனிப்பையும் ஏக
த்தில் உணர்ந்து உண்டுவிடுகிறோம். இம் மூன்று அமிசங்களும்
மிக்கச் சேர்ந்தே இருக்கின்றன. மைசூர்ப் பாகின் ஒவ்வொரு துளி
ம் அதனுருவும், எடையும், இனிப்பும் அடங்கியே இருக்கிறது.
ன் ஒரு துண்டில் அதனுருவும், மற்றொன்றில் அதன் எடையும்,
ாறுவதில் அதன் இனிப்பும் இருப்பதில்லை. அவ்வாறே வாழ்க்கை
ஒவ்வொரு காரியத்திலும் பரமார்த்தம் பொதிந்திருக்க வேண்டும்;
வொரு காரியத்திலும் சேவை, அன்பு, அறிவு ஆகியவை நிரம்பி

யிருக்கவேண்டும்; வாழ்க்கையின் எல்லாப் பகுதிகளிலும் கர்மமும் பக்தியும் ஞானமும் நிரம்பித் ததும்ப வேண்டும். இதுவே புருஷோத் தம யோகம் எனப்படுவது. வாழ்க்கை முழுவதையும் பாரமார்த்திக பாக்கிவிடவேண்டும் என்று சொல்லுவதென்னவோ சுலபந்தான், ஆனல் இவ்வாறு சொல்லுவதில் அடங்கியுள்ள பாவத்தைச் சிந்திக்கத் தொடங்குவோமாயின், நிர்மலமான சேவை யொன்றையே செய்யும் பொருட்டு அந்தக்கரணத்தில் சுத்த ஞானத்தையும், பக்தியையும் மனப் பூர்வமாய் ஏற்று நடக்கவேண்டியதாயிருக்கும். ஆகையால் கர்மம், பக்தி, ஞானம் என்பவை முற்றிலும் ஒன்றே என்ற இவ்விறுதி நிலை யைப் புருஷோத்தம யோகம் என்கிருர்கள். இங்கே வாழ்க்கையின் எல்லைக்கோடு வந்துவிடுகிறது.

இப்பொழுது இன்று இப் பதினைரும் அத்தியாயத்தில் என்ன சொல் லப்பட்டிருக்கிறது? சூரியன் உதிப்பதற்கு முன் அதனொளி பரவத் தொடங்குவதைப்போல், வாழ்க்கையில் கர்மம், பக்தி, ஞானம் ஆகிய வற்றினல் பூரணமான புருஷோத்தம யோகம் தோன்றுமுன் நற்குணங் களின் ஒளி பரவத் தொடங்கும். பரிபூரண வாழ்க்கையின் இவ் வரப் போகும் ஒளி இப் பதினைரும் அத்தியாயத்தில் வர்ணிக்கப்பட்டுளது. எந்த இருளுடன் போரிட்டுக்கொண்டே இவ்வொளி வெளிவருகிறது என்பதும் இதில் விவரிக்கப்பட்டிருக்கிறது. ஒரு பொருளுக்கு ஆதாரமாக நாம் வேறு சில பொருள்களைக் கோருகிறோம். சேவை, பக்தி, ஞானம் ஆகியவை நம் வாழ்க்கையில் வந்துவிட்டன என்பதை நாம் எப்படி உணருவது? வயலில் உழைத்துப் பாடுபடுகிறோமெனில், அதன் விளை வான தானியத்தை அறுவடைசெய்து, அளந்துகட்டி, வீட்டில் கொணர்ந்து சேர்க்கிறோம். இவ்வாறே நாம் செய்யும் சாதனைகளினல் நமக்கென்னென்ன அனுபவங்கள் ஏற்பட்டன, எந்த நல்ல காரியங்களில் நாம் பிரவேசித்தோம், எந்தெந்த நற்குணங்கள் நம்முள் இடம்பெற்றன, உண்மையிலேயே வாழ்க்கை எந்த அளவுக்குச் சேவைமயமாயிற்று என்ற விஷயம் சோதிக்கப்படவேண்டியதை இவ்வத்தியாயம் குறிப்பிடு கிறது. வாழ்க்கைக்கலை எவ்வளவு வளர்ந்து முன்னேறிற்று என்பதை அளந்து பார்க்கும்படி இவ்வத்தியாயம் கூறுகிறது. வாழ்க்கையின் இக் கலையைக் கீதை தேவசம்பத்து (தெய்வீகச் செல்வம்) என்று அழைக் கிறது; இதற்கு மாருயிருக்கும் போக்குகளை அசுர சம்பத்து என்று கூறு கிறது. பதினைரும் அத்தியாயத்தில் தேவ-அசுர சம்பத்துக்களிடையே தோன்றும் மோதல் சொல்லப்பட்டிருக்கிறது.

## (89) அஹிம்சைப்படையும் ஹிம்சைப்படையும்

முதல் அத்தியாயத்தில் ஒரு புறம் கௌரவ சேனையும் மறு புறம் ண்டவ சேனையுமாக ஒன்றை யொன்று எதிர்த்து நிற்பதைப்போல, ங்கே நற்குணமென்ற தேவசேனையும் துர்க்குணமென்ற அசுரசேனை ஒன்றையொன்று எதிர்த்து நிறுத்தப்பட்டிருக்கின்றன. மிகவும் ழைய காலந்தொட்டே மானிடர் மனத்தில் நற்குணங்களுக்கும் துர்க் ணங்களுக்குமிடையே நிகழும் போரை உருவகப்படுத்தி வர்ணிக்கும் றை இருந்து வந்திருக்கிறது. வேதத்தில் இந்திரன் - விருத்திரன், ராணங்களில் தேவர் - அசுரர், இராமன் - இராவணன், பார்ஸிக டைய மதநூல்களில் அஹீர்மஜ்த் - அஹ்ரிமான், கிறிஸ்தவ மதத்தில் ம பிதா - சைத்தான், இஸ்லாம் மதத்தில் அல்லாஹ் - இப்லீஸ் என்ற பர்களுடைய போர்கள் வருகின்றன. காவியங்களில் ஸ்தூல விஷயங் ர சூக்குமமான பொருள்களின் உருவகங்களின் மூலம் வர்ணிக்கப்பட, ய நூல்களில் சூக்குமமான மனோபாவனைகளுக்குக் கவர்ச்சியான தூல உருவங்கள் அளித்து வர்ணிக்கப்படும். காவியத்தில் ஸ்தூல னது சூக்குமத்தின் மூலம் வர்ணிக்கப்பட, இங்கே சூக்குமம் ஸ்தூலத் ன் மூலம் விவரிக்கப்படுகிறது. இதனால் கீதையின் தொடக்கத்தில் ள்ள யுத்த வர்ணனை வெறும் கற்பனையே என்பதல்ல, அது ஒரு சரித் சம்பந்தமாகவே இருக்கலாம். ஆனால் இங்கே கவிஞர் அதைத் ம் கொண்டுள்ள கருத்தை நிரூபிப்பதற்குப் பயன்படுத்திக் கொண் ருக்கிறார். மனிதன் மனத்தில் கடமையைக் குறித்து மோகம் விளை ங்கால் அவன் செய்ய வேண்டியது என்னவென்பது ஒரு போரின் ருவகத்தின் மூலம் விளக்கப்பட்டிருக்கிறது. இப் பதினாறும் அத்தியா த்தில் நன்மை, தீமை என்ற இவற்றினிடையே நிகழும் போர் சொல்லப் ட்டிருக்கிறது. கீதையில் வருவது போரின் உருவகமே.

குருக்ஷேத்திரம் வெளியிலும் இருக்கிறது, நம் உள்ளேயும் இருக் றது. நுணுக்கமாய்க் 'கவனிக்கையில் நம் அகத்தில் நடைபெறும் பாரே வெளியுலகில் உருத் தாங்கி நிற்பதைக் காண்கிறோம். புறத்தே ன் சத்துருவாய்க் காணப்படுவோன், என் மனத்திலுள்ள விகாரம் ருப்பெற்று வெளியே வந்து நிற்பதே. கண்ணாடியில்—அழகியதோ, காரமானதோ—என் பிரதிவிம்பமே எனக்குக் காணப்படுவதைப்போல ன் மனத்திலுள்ள கெட்ட, நல்ல எண்ணங்களே எனக்கு வெளியிலும் துருவாயும் நண்பனாயும் காணப்படுகின்றன. நாம் விழிப்பில் சொப் னம் காண்டல்போல, மனத்திலுள்ளதை வெளியே பார்க்கிறோம். கத்தில் நடக்கும் போருக்கும் புறத்தே நடப்பதற்கும் வேற்றுமை

எதுவுமில்லை. பார்க்கப் போனால், உண்மைப் போர் நடப்பது அகத்திலேதான்.

நம் அந்தக்கரணத்தில் ஒரு புறம் நற்குணங்கள் இருந்தால், மறு புறம் துர்க்குணங்கள் இருக்கின்றன. அவை தம் அணிகளைச் சரியாய் அமைத்து வைத்திருக்கின்றன. சேனைக்குச் சேனாதிபதி இன்றியமையாதவனாதலால் இங்கு நற்குணங்களும் தமக்கு ஒரு சேனாதிபதியை நியமித்துள்ளன. அதன் பெயர் 'அபயம்' (அஞ்சாமை). இவ்வத்தியாயத்தில் அபயத்திற்கு முதலிடம் அளிக்கப்பட்டிருக்கிறது. இது ஏதோ தற்செயலாய் நிகழ்ந்த விஷயமல்ல; தீர யோசித்து, வேண்டுமென்றேதான் இவ்வபயமென்ற சொல்லுக்கு முதலிடம் கொடுக்கப்பட்டிருக்கும். அபயமின்றி, அஞ்சாமையில்லாதவிடத்து, எக் குணமும் வளர்வதற்கில்லை. உண்மையின்றேல் பிற நற்குணங்களுக்கும் மதிப்பெதுவும் இல்லாதுபோகிறது. ஆனால் உண்மைக்கோ அஞ்சாமை அவசியமாகும். அச்சம் மலிந்த சூழ்நிலையில் நற்குணங்கள் பரவுவதற்கில்லை; அதில் அவைகளும் துர்க்குணங்களாகி விடும்; நல்ல முயற்சிகளும் போக்குகளும் பலவீனமாகும். அஞ்சாமையே எல்லா நற்குணங்களுக்கும் அக்ரநாயகன். ஆனால் சேனையை முன்பின் இரு புறமும் கவனித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. நேர்த்தாக்குதல் எதிரிலேயே ஏற்பட்டாலும், பின்னாலிருந்து திருட்டுத் தாக்குதலும் சந்தடியின்றிச் செய்யப்படலாம். நற்குணங்களின் முன்புறத்தில் அபயம் தொடை தட்டிக்கொண்டு சித்தமாயிருக்கிறதெனில், பின்னால் 'பணிவு' பாதுகாத்து வருகிறது. இவ்வாறு சிறந்த முறையில் இப் பாதுகாப்பு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இங்கே மொத்தம் இருபத்தாறு குணங்கள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுள் இருபத்தைந்து குணங்களுமிருந்து இவற்றின் அகங்காரம் அல்லது கர்வம் ஏற்பட்டுவிடுமாயின் பின்னாலிருந்து திடீரெனத் திருட்டுத் தாக்குதல் ஏற்பட, சேர்த்த சொத்தையெல்லாம் இழக்க நேரும். ஆகையால் பின்னால் 'பணிவு' என்ற நற்குணம் வைக்கப்பட்டிருக்கிறது. பணிவு இல்லையேல் இவ் வெற்றி எப்போது தோல்வியாய் மாறும் என்பதே தெரியாது. இவ்வாறு முதலில் அஞ்சாமையையும் பின்னால் பணிவையும் நியமித்துவிட்டால் மற்ற நற்குணங்களை வளர்ப்பதற்கானவற்றைச் செய்ய இயலும். இவ்விரு பெருங்குணங்களுக்கிடையே அமைக்கப்பட்டுள்ள இருபத்து நான்கு குணங்களும் அனேகமாய் அஹிம்சையின் பல்வேறு உருவங்களே, அஹிம்சையின் மாற்று மொழிகளே எனல் தவறல்ல. பூததயை, மிருதுத்தன்மை, சகிப்பு, அமைதி, வெகுளாமை, அஹிம்சை, நன்றி

வாமை ஆகிய இவையெல்லாம் அஹிம்சையின் பல்வேறு பெயர்களே. ஹிம்சை, சத்தியம் என்ற இவ்விரு குணங்களிலேயே எல்லா நற்குணங் நம் அடங்கிவிட்டன. குணங்கள் அனைத்தையும் பிழிந்து அவற்றின் ம் எடுக்கப்படுமானால் இறுதியில் அஹிம்சை, சத்தியமென்ற இவ் ண்டே எஞ்சும்; மற்ற எல்லா நற்குணங்களும் இவற்றுள் அடங்கிப் ாம். ஆனால் அஞ்சாமை, பணிவு ஆகிய இரண்டின் விஷயமும் று. அஞ்சாமையைக் கொண்டு முன்னேறுவது சாத்தியமாக, பணி னால் பாதுகாப்பு ஏற்படுகிறது. (அஞ்சாமை சத்தியத்திற்கும் பணிவு ஹிம்சைக்கும் அறிகுறி.) சத்தியம், அஹிம்சை என்ற இவ்விரு குணங் ளின் மூலதனத்துடன் அச்சமின்றி முன்னேறவேண்டும். வாழ்க்கை சாலமானது. அதில் நாம் தங்கு தடையின்றிப் போய்க்கொண்டே ருக்கவேண்டும். காலடியைத் தவறாய் எடுத்து வைத்துவிடாதிருப்ப ்காக நாம் பணிவைக் கைவிடாதிருப்போமானால் ஆபத்து எதுவும் ராது. இப்பொழுது ஆனந்தமாய் சத்தியத்திலும் அஹிம்சையிலும் லா விடங்களிலும் சோதனை நடத்திக்கொண்டே செல்லுங்கள். சத்தி மும் அஹிம்சையும், அஞ்சாமை, பணிவு ஆகியவற்றின் மூலமே ாருகின்றன என்பது கருத்து.

இவ்வாறு ஒருபுறம் நற்குணங்களின் படை நின்றுகொண்டிருக்க, றுபுறத்தில் துர்க்குணங்களின் படையும் சித்தமாயிருக்கிறது. வீண் பருமை, அறியாமை ஆகிய துர்க்குணங்களைப் பற்றி அதிகம் விவரிக்கத் தேவையில்லை. இவைகளுடன்தான் நமக்குத் தினமும் பழக்கம் இருந்து ருகிறதே! வீண்பெருமையிலோ நாம் ஊறியே கிடக்கிறோம். வாழ்க்கை முழுமையும் வீண்பெருமையின் அடிப்படையிலேயே அமைந்ததுபோன் ருக்கிறது. அறியாமையோ? நமக்கு அது மிகவும் பிடித்தமான னிய காரணமாகிவிட்டதால் நாம் எதற்கெடுத்தாலும் அதை முன்னே ள்ளிவிடுகிறோம். அறியாமை ஒரு பெரிய குற்றம் என்பதை நாம் ணர்ந்திருப்பதாகவே தெரியவில்லை. ஆனால் பகவான், "அறியாமை ரு பாவம்" என்கிறார். சோக்ரத்தர் இதற்கு நேர் மாறாய்க் கூறினார். ் வழக்கினிடையில் அவர், "நீங்கள் பாவ மென்று கருதுவது றியாமையையே. அறியாமையோ மன்னித்தற்குரியது. அறியாமை ன்றிப் பாவம் எப்படி நிகழமுடியும்? அறியாமையை நீங்கள் எப்படித் ண்டிப்பீர்கள்!" என்று கேட்டார். ஆனால் பகவான், "அறியாமையும் ாவமே" என்கிறார். சட்டத்தில் சட்டம் அறியாமை குற்றமின்மைக்கு சுவென்று ஒப்புக்கொள்ளப்படுவதில்லை. தெய்வீகச் சட்டத்தை றிந்துகொள்ளாதிருப்பதும் பெருங் குற்றமே. பகவான் சொல்லு

வதற்கும் சோக்ரதீதர் சொன்னதற்கும் கருத்து ஒன்றே. தன் அறியாமையை எந் நோக்குடன் கருதவேண்டுமென்பதைப் பகவான் கூற, பிறர் செய்யும் பாவங்களை எந்நோக்குடன் பார்க்கவேண்டுமென்று சோக்ரதீதர் சொன்னார். பிறரது பாவங்களை மன்னிக்கவேண்டும்; ஆனால் தன் அறியாமையை மன்னிப்பதும் பாவமே. சிறு அறியாமைக்கும் நம்மிடம் நாம் இடமளித்தல் கூடாது.

## (90) அஹிம்சையின் வளர்ச்சி—நான்கு கட்டங்கள்

இவ்வாறு ஒருபுறம் தேவ சம்பத்து, மறுபுறம் அசுரசம்பத்து என இரு படைகளும் நிற்கின்றன. இவற்றில் அசுரசம்பத்தை விட்டுவிட்டு தேவசம்பத்தைப் பற்றிக்கொள்ள வேண்டும். சத்தியம், அஹிம்சை முதலிய தெய்வீக குணங்கள் அனாதி காலந்தொட்டு வளர்க்கப்பட்டு வந்திருக்கின்றன. இடையில் கழிந்த காலத்திலும் பெரிய வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இன்னும் எவ்வளவோ வளர்த்தாக வேண்டும். வளர்ச்சியின் எல்லையை எட்டியாகிவிட்டது என்பதற்கில்லை. நமக்குச் சமூக வாழ்வு கிட்டிவரும்வரை வளர்ச்சிக்கு அளவில்லாத சந்தர்ப்பமும் இருந்துவரும். சொந்தத்தில் போதிய வளர்ச்சி ஏற்பட்டு விட்டபோதிலும் சமூக வளர்ச்சியும், நாட்டின் வளர்ச்சியும், உலக வளர்ச்சியும் எஞ்சியிருக்கவே செய்யும். தனி மனிதன் தன் சொந்த முயற்சி என்ற உரமிட்டுச் சமூகத்தையும், நாட்டிலுள்ள இலட்சக்கணக்கான மனிதர்களையும் வளமுறச்செய்ய ஆரம்பித்துவிட வேண்டும். மனிதன் மூலமாய் அனாதிகாலந்தொட்டே அஹிம்சை வளர்க்கப்பெற்று வந்திருந்த போதிலும், இன்றும் அவ்வளர்ப்புப் பணி நடந்துதான் வருகிறது.

அஹிம்சை எம்முறையில் வளர்ந்து வந்ததென்பது கவனிக்கத் தக்கது. அதிலிருந்து பரமார்த்த வாழ்க்கை எவ்வாறு மேன்மேலும் வளர்ந்து கொண்டிருக்கிறது என்பதும், அதற்கு இப்பொழுதும் எவ்வளவு சந்தர்ப்பம் இருக்கிறதென்பதும் தெரியவரும். முதலில் அஹிம்சையை விரும்பிய மனிதன் ஹிம்சை புரியும் மக்களின் தாக்குதலிலிருந்து தப்புவதெப்படி என்று யோசிக்கத் தொடங்கினான். முதலில் சமூகத்தின் பாதுகாப்பிற்காக க்ஷத்திரிய வர்க்கம் அமைக்கப்பட்டது. ஆனால் அதுவே பின்னர் சமூகத்தைப் புசிக்கத் தொடங்கிவிட்டது. அப்பொழுது இம் மதம் பிடித்த க்ஷத்திரியரிடமிருந்து சமூகத்தைக் காப்பதெப்படி என்று அஹிம்சைப்பற்றுள்ள அந்தணர் சிந்திக்கலாயினர். பரசுராமர் தாம் ஓர் அஹிம்சைப் பக்தராயிருந்தும்

ஹிம்சையைக் கையாண்டு க்ஷத்திரியர்களை அழிக்கத் தலைப்பட்டார். க்ஷத்திரியர்களது ஹிம்சையை அகற்றும் பொருட்டு அவரே ஹிம்சையில் இறங்கினர். இது அஹிம்சையின் ஒரு சோதனையேயாயினும் வெற்றி பெறவில்லை. அவர் இருபத்தொரு முறை க்ஷத்திரியரைக் களைந்தார்; ஆயினும் க்ஷத்திரியர் தப்பியிருந்துவந்தனர். ஏனெனில் இச்சோதனையுள் தொடக்கத்திலேயே பிழை புகுந்துவிட்டது; க்ஷத்திரியர்களை அழிக்கப் புறப்பட்ட அவரே தாமும் அவர்களைப்போன்றவராகி அவர்களின் எண்ணிக்கையைப் பெருக்கிவிட்டார். ஆகவே க்ஷத்திரிய வர்ணம் எப்படி அழியும்? அவர்தான் தாமே ஹிம்சை புரியும் க்ஷத்திரியராகிவிட்டாரே! அதன் விதைதான் எஞ்சியிருந்ததே! ஒருவர் விதையைப் பாதுகாத்து வைத்துக்கொண்டு, செடியையும் மரத்தையும் வெட்டி வீழ்த்துவாரானல் அவர் அம் மரம்-செடிகள் மீண்டும் மீண்டும் முளைத்துத் தழைப்பதையே பார்ப்பார். பரசுராமர் என்னவோ நல்லவர் தான். ஆனல் அவர் நடத்திய சோதனை விசித்திரமானது; தாம் க்ஷத்திரியராயிருந்துகொண்டு உலகில் க்ஷத்திரியப் பூண்டே இல்லாமற் செய்யப் பார்த்தார். உண்மையில் அவர் தம்மிடமிருந்தே சோதனையைத் தொடங்கியிருக்க வேண்டும்; முதலில் தம் தலையைச் சீவி எறிந்திருக்கவேண்டும்! ஆனல் இங்கே நான் பரசுராமரைக் குறை கூறுவது, நான் அவரைவிட அறிவாளி என்பதனுல் அல்ல. அவருடன் ஒப்பிடும்பொழுது நானொரு சிறு பிள்ளையே. ஆனல் நான் அவர் தோள்மீது ஏறி நிற்பதால் வெகு தொலைவுவரை சிரமமின்றிப் பார்க்க முடிகிறது. பரசுராமரது சோதனையின் அடிப்படையே பிழைபட்டதாகும். ஹிம்சையில் தோய்ந்திருப்பவன் அதை அகற்றுதல் என்பது சாத்தியமில்லை. இதனுல் ஹிம்சை புரிவோரின் தொகையே பெருகும். ஆனல் அப்பொழுது இவ் விஷயம் கவனத்திற்கு வரவில்லை. அக்காலத்திய பெரியோர், பெரிய அஹிம்சைப் பக்தர், தமக்குத் தோன்றிய வகையில் சோதனை செய்தனர். பரசுராமர் அக்காலத்திய பெரிய அஹிம்சை வாதி. ஹிம்சை நோக்குடன் அவர் ஹிம்சை செய்யவில்லை; அஹிம்சையை நிலைநிறுத்தவே ஹிம்சையின் உதவியை நாடினர்.

ஆனல் அச் சோதனை தோல்வியுற்றது. பிறகு இராம யுகம் வந்தது. அக்காலத்தில் அந்தணர்கள் மீண்டும் சிந்திக்கத் தொடங்கினர்கள். அவர்கள் ஹிம்சையை ஏற்கெனவே துறந்து விட்டவர்கள். 'நாம் நம் கையால் ஹிம்சை புரிவதில்லை' என அவர்கள் முடிவுசெய்திருந்தார்கள். அப்பொழுது இராட்சதரின் தாக்குதலிலிருந்து தப்புவதெப்படி? இந்த க்ஷத்திரியர்கள் தாம் ஹிம்சையிலிருப்பவராயிற்றே. அவர்

களைக் கொண்டே இராட்சதர்களை அழித்தால் என்னவென்று அவர்கள் யோசித்தார்கள். 'முள்ளைக்கொண்டு முள்ளைத் தோண்டி எடுக்க வேண்டும்; நாம் விலகி நின்றுகொண்டிருப்போம்' என்று எண்ணினர் கள். ஆகவே விசுவாமித்திரர் யாகத்தைப் பாதுகாப்பதற்காக இராம-லட்சுமணர்களை அழைத்துப்போய் இராட்சதர்களை அழிக்கச் செய்தார். அஹிம்சையால்தான் தன்னைத் தானே பாதுகாத்துக்கொள்ள முடிய வில்லையே, அதற்கு நிற்கக் காலில்லையே, அந் நொண்டி அஹிம்சையால் எப்படி நிலைத்து நிற்க இயலுமென்று நாம் யோசிக்கிறோம். ஆனால் வசிஷ்ட-விசுவாமித்திரர் போன்றவர்களுக்கு க்ஷத்திரியர்களின் பலத் தினால் தம்மைக் காத்துக்கொள்வதில் குற்றமோ, குறைபாடோ தோன்ற வில்லை. ஆனால் இராமனைப் போன்ற க்ஷத்திரியன் கிடைத்திராவிட் டாலோ? விசுவாமித்திரர், "என் உயிர் போனாலும் நான் ஹிம்சை புரியமாட்டேன்" என்று சொல்லியிருப்பார். ஏனெனில், தாமே ஹிம்சை யில் இறங்கி ஹிம்சை செய்தல் என்ற சோதனையை ஏற்கெனவே செய்து பார்த்தாகிவிட்டது. அவரவர் தாம் ஏற்றுள்ள அஹிம்சையை என்ன வானாலும் விடுவதில்லை என்ற உறுதி இப்பொழுது ஏற்பட்டாகிவிட்டது. க்ஷத்திரியன் எவனும் கிட்டாவிடில் அஹிம்சாவாதிகள் தம் உயிரை விடத் துணியும் அளவுக்கு அஹிம்சைப் புலம் தயாராகிவிட்டது. தண்ட காரணியத்தில் நடந்து போய்க்கொண்டிருந்த இராமன், வழியில் எதையோ சுட்டிக்காட்டி, "இவை என்ன குவியல்கள்?" என்று கேட்கி றான். அதற்கு ரிஷிகள், "இவை அந்தணர்களின் எலும்புக் குவியல்கள். அஹிம்சைப் பக்தர்களான அந்தணர், வந்து தாக்கிய ஹிம்சாவாதி களான இராட்சதர்களை எதிர்க்காது தம் உயிரை விட்டார்கள். அவர் களது எலும்புக் குவியல்களே இவை" என்று பதில் அளிக்கிறார்கள். இவ்வஹிம்சையில் அந்தணர்களின் தியாகமென்னவோ இருந்தது; ஆனால் அவர்கள் பிறர் வந்து தம்மைப் பாதுகாக்க வேண்டுமென்று எதிர்பார்த்தார்கள். இத்தகைய பலவீனமிருக்குமிடத்தில் அஹிம்சை தன் பூரண நிலையை எய்துவதற்கில்லை.

பிற்காலத்தில் மகான்கள் மூன்றாவது சோதனையைச் செய்தார்கள். 'நாம் நம் பாதுகாப்புக்காகப் பிறர் உதவியை ஒருபொழுதும் நாடோம்; நம் அஹிம்சையே நம்மைக் காக்கும். இப் பாதுகாப்பே உண்மை யானது' என்று அவர்கள் முடிவுசெய்தார்கள். அவர்களுடைய இச் சோதனை தனித்தனியே தனி நபர்களால் செய்யப்பட்டது. இத் தனிப் பட்ட சோதனையை அவர்கள் அதன் எல்லைவரைக் கொண்டு போய் விட்டபோதிலும், அது தனி நபர்களோடு நின்றுவிட்டது. சமூகத்தை

ஹிம்சாவாதிகள் வந்து தாக்கவும், சமூகம் இம் மகான்களிடம் போய், "இப்பொழுது நாங்கள் என்ன செய்வது?" என்று கேட்டிருந்தால், மகான்களால் அதற்கு முடிவான விடையளிக்க முடிந்திருக்குமோ என்னவோ. தம் சொந்த வாழ்க்கையில் அஹிம்சையைப் பரிபூரணமாய் அனுஷ்டித்த இம் மகான்கள் சமூகத்தினிடம், "அண்ணன் தம்பிமாரே, எங்களால் ஒன்றும் செய்யமுடியாதே!" என்றே பதில் சொல்லியிருப்பார்கள். இவ்வாறு மகான்களிடம் குறையிருப்பதாய் நான் கூறுதல் என் சிறுபிள்ளைத்தனமே. ஆனால் அவர்களின் தோளில் அமர்ந்துள்ள நான் என் கண்ணுக்கு எட்டுவதைச் சொல்லுகிறேன். அவர்கள் என்னை இதற்காக மன்னிப்பார்களாக! அவர்கள் மன்னித்தும் விடுவார்கள். ஏனெனில், அவர்களது மன்னிப்பு மகத்தானது. அஹிம்சையைக் கருவியாய்க்கொண்டு சமூகத்தில் சோதனை செய்வதற்கே அவர்களுக்குத் தோன்றியிராதென்று சொல்லுவதற்கில்லை. ஆனால் அக்காலத்திய நிலைமை அவர்களுக்கு ஒருக்கால் அனுகூலமாய்த் தோன்றுதிருந்திருக்கலாம். அவர்கள் தனித்தனியே, சொந்தத்தில் சோதனைகள் நடத்தினார்கள். ஆனால் இவ்வாறு தனித்தனியாய் நடைபெறும் சோதனைகளிலிருந்தே சாத்திரம் பிறக்கிறது. பலரது அனுபவங்களின் கூட்டினால் சாத்திரம் உருவாகிறது.

மகான்களின் தனித்தனிச் சோதனைகளுக்குப் பிறகு இன்று நாம் நான்காவது சோதனை செய்துவருகிறோம். அதாவது, சமூகம் முழுவதுமே ஒன்றுசேர்ந்து அஹிம்சைச் சாதனங்களின் மூலம் ஹிம்சையை எதிர்த்தல் என்பது. எனவே இதுவரை நான்கு சோதனைகள் நடந்திருக்கின்றன. ஒவ்வொரு சோதனையிலும் குறைபாடு இருந்திருக்கிறது, இருக்கிறது. வளர்ச்சியின் போக்கில் இதைத் தவிர்ப்பதற்கில்லை. ஆனால் அந்தந்தக் காலத்திற்கு அந்தந்தச் சோதனையை பூரணமானது என்றே சொல்லவேண்டும். பத்தாயிரம் வருஷங்களுக்குப் பிறகு பார்க்கிறவர்களுக்கு இன்று நாம் நடத்திவரும் அஹிம்சைப் போரிலும் எவ்வளவோ ஹிம்சை கலந்திருப்பதாகவே தோன்றும். சுத்த அஹிம்சைச் சோதனைகள் இன்னும் எத்தனையோ நடைபெறும். ஞானம், கர்மம், பக்தி ஆகியவை மட்டுமல்ல, எல்லா நற்குணங்களுமே வளர்ந்து வருகின்றன. பூரணப்பொருள் என்பது ஒன்றுதான். அதுதான் பரம்பொருள். பகவத் கீதையின் புருஷோத்தம யோகம் பூரணமானது. ஆனால் தனி மனித வாழ்க்கையிலும், சமுதாய வாழ்க்கையிலும், அவை இனிமேல்தான் பூரணமாய் வளர்ந்து பரவவேண்டும். அருள் வாக்குகளும் வளர்ந்துகொண்டே போகின்றன. ரிஷிகள் மந்திரங்களைக்

கண்டவர்களென்று கருதப்படுகிறார்களேயல்லாது அவற்றை இயற்றிய வர்களென்று அல்ல. ஏனெனில், அவர்களுக்கு மந்திரங்களுக்குப் புலனான பொருளே அவற்றின் பொருளென்பதல்ல. அவர்களுக்கு அவற்றின் ஒரு காட்சி ஏற்பட்டது; அதன்பின் நமக்கு இன்னும் விரிவான பொருள் தோன்றலாம். அவர்களைவிட நாம் இன்னும் அதிக மாய்க் காணமுடிவது நம்மிடத்திலுள்ள சிறப்பினால் அல்ல. ஏனெனில் அவர்களை ஆதாரமாய்க்கொண்டே நாம் முன்னேறுகிறோம். நான் இங்கே அஹிம்சையின் வளர்ச்சியைப் பற்றியே கூறிவருவதன் காரணம், எல்லா நற்குணங்களின் சாரத்தையும் வடித்தெடுப்போமானால் அது இறுதியில் அஹிம்சையாகவே இருக்கும் என்பதனாலேயே. மேலும், நாம் இன்று அஹிம்சைப் போரில் இறங்கியிருப்பதால் இத் தத்துவம் எவ்வாறு வளர்ந்துவந்திருக்கிறது என்பதைக் கூறினேன்.

## (91) புலால் மறுப்பு : ஒரு பெரிய அஹிம்சைச் சோதனை

இதுவரை நாம் அஹிம்சையின் ஓர் அமிசத்தை, அதாவது ஹிம்சா வாதிகளின் தாக்குதல் ஏற்படுமானால் அஹிம்சாவாதி தன்னை எப்படிப் பாதுகாத்துக்கொள்வது என்பதைப் பார்த்தோம்; மனிதர்களின் மோதல்களில் அஹிம்சை எவ்வாறு வளர்ந்து வந்திருக்கிறது என்பதைக் கண்டோம். ஆனால் மோதல் மனிதனுக்கும் மிருகத்திற்குமிடையிலுங் கூட நடந்து கொண்டிருக்கிறது. மனிதனால் இதுவரை தம்மிடை உள்ள சண்டை சச்சரவுகளைப் போக்கிக்கொள்ள இயலாததோடு, அவன் பிராணிகளையும் தன் வயிற்றில் திணித்துக்கொண்டே தான் உயிர் வாழ் கிறான். அவனால் தன் இனத்தாரிடையே நிகழும் மோதல்களைத் தவிர்க்க வியலாததோடு, தன்னிலும் இழிந்த இனத்தைச் சேர்ந்த சக்தி யற்ற பிராணிகளை, உயிர்களைத் தின்னாமல் இருக்கவும் இயலவில்லை. ஆயிரமாயிரம் ஆண்டுகளாய் வாழ்ந்து வந்திருந்தும் உயிர்வாழ்வ தெப்படி என்பதை மனிதன் இதுவரை சிந்தித்தானில்லை. மனிதனால் மனிதனைப்போல வாழ முடியவில்லை. ஆனால் இவ் விஷயமும் வளர்ந்து வருகிறது. ஒரு காலத்தில் மற்றப் பிராணிகளைத் தின்றே மனிதன் வாழ்ந்ததுண்டு. ஆனால் மனிதர்களிடையே அறிவாளிகளாய், சிறந்த வர்களாய் இருந்தவர்களுக்கு இது பிடிக்கவில்லை. அவர்கள் புலாலைத் தின்பதென்றால் யாகத்தில் பலியிடப்பட்ட பிராணிகளின் புலாலையே தின்ன வேண்டுமென்ற ஒரு விதியை வகுத்தார்கள். இதன் மூலம் ஹிம்சை கட்டுப்படுத்தப்படும் என்பதே இதில் அவர்கள் கொண்டிருந்த நோக்கம். எத்தனையோ பேர் புலால் அருந்துவதை அறவே விட்டு

விட்டார்கள். ஆனால் அறவே விடமுடியாதவர்களுக்கு யாகத்தில் ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டு, சிறிது தவம் இயற்றியபின் அருந்துதல் அனுமதிக்கப்பட்டது. அக்காலத்தில் யாகத்தில்தான் புலால் அருந்தலாமென்ற இந் நிபந்தனையின் விளைவாக, ஹிம்சை நின்றுபோய்விடுமென்று எண்ணப்பட்டது. ஆனால் பின் யாகம் செய்தலே ஒரு தினசரிக் காரியமாகி விடவே, இஷ்டப்பட்டவர்களெல்லாம் யாகம் செய்து மாமிசம் தின்னத் தொடங்கினார்கள். அப்பொழுது புத்த பகவான் இன்னும் சிறிது முன்னே சென்றார். அவர், "உங்களுக்கு மாமிசம் தின்னவேண்டுமென்றால் தின்று தொலையுங்கள்; ஆனால் பகவான் பெயரைச் சொல்லிக்கொண்டு தின்னவேண்டாம்" என்றார். இவ்விரு வசனங்களின் நோக்கமும் ஒன்றே; அதாவது, ஹிம்சை தடைப்படவேண்டும், வண்டி எப்படியேனும் புலனடக்கப் பாதைக்குத் திரும்பவேண்டும் என்பது. யாக யக்ஞங்கள் செய்ததிலிருந்தும், செய்யாதிருந்ததிலிருந்தும் மாமிசத்தைத் தவிர்ப்பதையே கற்றோம். இவ்வாறு நாம் சிறிது சிறிதாய்ப் புலால் அருந்துவதை விடலானோம்.

உலக சரித்திரத்தில் இந்தியாவில் மட்டுமே இப் பெரிய சோதனை நடந்துளது. கோடிக்கணக்கானவர்கள் புலால் அருந்துவதை விட்டு விட்டார்கள். இன்று நாம் புலால் உண்ணுதிருப்பதில் நமக்குப் பெருமை ஏதுவுமில்லை. நம் முன்னோர் செய்த புண்ணியத்தினால் நமக்கு இதில் பழக்கம் ஏற்பட்டுளது. ஏன், பண்டைய ரிஷிகள் மாமிசம் உண்ணுவதுண்டு என்று ஒருவர் சொன்னாலும், புத்தகத்தில் படித்தாலும் நமக்கு வியப்பாய் இருக்கிறது. "என்ன பிதற்றுகிறாய்! ரிஷிகளாவது புலால் தின்னுவதாவது! எந்தக் காலத்திலும் நடந்திராது" என்கிறோம். ஆனால், புலால் உண்டு வந்திருந்தும் அவர்கள் புலனடக்கத்தை ஏற்று அதைத் துறந்திருக்கிறார்களே. இதற்குரிய புகழெல்லாம் அவர்களையே சாரும். அக் கஷ்டங்களின் அனுபவமெல்லாம் இன்று நமக்கில்லை. அவர்களது புண்ணியங்களின் மூட்டை நமக்குக் கிடைத்துள்ளது. பவபூதியின் 'உத்தர ராம சரித்திரத்'தில் ஒரு சந்தர்ப்பம் வந்திருக்கிறது. வான்மீகியின் ஆசிரமத்திற்கு வசிஷ்ட முனிவர் வரவே, அவருக்கு மரியாதை செய்வதற்காக ஒரு பசுங் கன்று கொல்லப்பட்டது. அங்கிருந்த ஒரு சிறு பையன் பெரிய பையனொருவனிடம், "இன்று நம் ஆசிரமத்திற்கு வந்துள்ள தாடிப் புலி நம் கன்றைத் தின்றுவிட்டதாமே!" என்கிறான். அதற்குப் பெரிய பையன், "போடா போ, அவர் வசிஷ்ட முனிவரல்லவா? இவ்வாறெல்லாம் பிதற்றாதே" என்கிறான். முற்காலத்தில் அவர்கள் மாமிசம் உண்டுவந்திருக்க, நாம் உண்பதில்லை என்பதற்கு

நாம் அவர்களைவிடப் பெரியவர்களாகிவிட்டோம் என்பதல்ல பொருள். அவர்களது அனுபவத்தின் பயன், இலாபம் நமக்குச் சிரமமின்றிக் கிடைத்துளது. அவர்களது இவ்வனுபவத்தை நாம் மேலும் வளர்க்க வேண்டும். பாலை அறவே விட்டுவிடவும் நாம் சோதனைகள் நடத்த வேண்டும். மனிதன் பிற பிராணிகளின் பாலை அருந்துவதும் தவறே. பத்தாயிரம் வருஷங்களுக்குப்பின் வரப்போகும் மக்கள் நம்மைக் குறித்து, "நம் முன்னோருக்குப் பால் அருந்துவதில்லை என்ற விரதம் ஏற்க நேர்ந்ததாமே! ராம, ராம! அவர்கள் எப்படித்தான் பாலை அருந்தினர்களோ! இவ்வளவு காட்டுமிராண்டிகளா அவர்கள்!" என்று சொல்லுவார்கள். நாம் அச்சமின்றி, ஆனால் பணிவுடன், நம் சோதனைகளை நடத்திக்கொண்டு இடையருது முன்னேற வேண்டும். சத்திய அனுஷ்டானத்தை மேலும் வளர்க்கவேண்டும். வளர்ச்சிக்கு இன்னும் எவ்வளவோ இடமிருக்கிறது. எக் குணமும் இன்னும் பூரணமாய் வளர்ந்துவிடவில்லை.

## (92) அசுர சம்பத்தின் முப்பேராசைகள் : ஆதிபத்தியம், கலாச்சாரம், செல்வம்

நாம் தேவ சம்பத்தை வளர்க்கவும் அசுர சம்பத்திலிருந்து விலகியிருக்கவும் வேண்டும். அதனிடமிருந்து ஒதுங்கி இருக்க முடியவேண்டுமென்பதற்காகவே பகவான் அசுர சம்பத்தை வர்ணித்திருக்கிறார். இதில் மூன்று விஷயங்கள் முக்கியமானவை. அசுரர்களின் சரித்திரத்தின் சாரமே ஆதிபத்தியம், கலாச்சாரம், செல்வம் என்றவைகளில் அடங்கியிருக்கிறது. அவர்கள் தம் கலாச்சாரமே தலைசிறந்ததென்று, அதை உலகெங்கும் கொண்டுபோய்ப் புகுத்தும் பேராவல் உள்ளவர்கள். "உங்கள் கலாச்சாரத்தையே ஏன் கொண்டுபோய்த் திணிக்க வேண்டும்?" என்று கேட்டால், "இதுவே மற்றெல்லாவற்றினும் சிறந்தது" என்கிறார்கள். எப்படிச் சிறந்தது? "அது எங்களுடையதாகையால்." அசுரத் தன்மையுள்ள மனிதனுக்கும் சரி, அவர்கள் அமைத்த ஏகாதிபத்தியத்திற்கும் சரி, இம்மூன்று விஷயங்கள் இன்றியமையாதவை.

பிராமணர்களும், 'எங்கள் கலாச்சாரமே தலைசிறந்தது, எங்கள் வேதங்களில் ஞானமனைத்தும் அடங்கியிருக்கிறது, உலகெங்கும் வேதக் கலாச்சாரத்திற்கு வெற்றி ஏற்படவேண்டும்' என்றே எண்ணுகிறார்கள். 'अग्रतश्चतुरो वेदान् पृष्ठत: सशरं धनु:' (அக்ரத: சதுரோ வேதான், ப்ருஷ்டத: ஸஶரம் தனு:) என்றவாறு அமைந்த ஏற்பாட்டுடன் பூமியெங்கும் தம் கலாச்சாரக் கொடியைப் பறக்கவிடுங்கள்; ஆனால் முதுகில்

